# மனம் மகிழ... மணம் கமழ...

# இதோ ‘அமல்’

## ஆறு பத்தி ரகங்கள் அடங்கிய சிறந்த

# பரிசு!

"அமல்" டாப் ஆப் தி ஒர்ல்ட் பத்தி "அமல்" புளூ டைமண்ட் பத்தி
"அமல்" ரோஸ் தர்பார் பத்தி "அமல்" லோபான் பத்தி
"அமல்" ராம் கஸ்தூரி பத்தி "அமல்" சந்தன் பத்தி




தயாரிப்பாளர்கள்: அமல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் பெங்களூர்
பூர்ண விநியோகஸ்தர்கள் : R. கோபாலகிருஷ்ணன் & சன்
24/90 தெலுங்கு பிராமணாள் வீதி, கோயமுத்தூர்.

VSK-R8-44-A

# ஓசை எழாது துரு ஏறாது




# ஸிங்கர்* ஆயில்

## உபயோகித்தால்

உலகப்—புகழ் பெற்ற ஸிங்கர் உத்தரவாதமுள்ள விசேஷ லூப்ரிகேடிங் ஆயில்.

உங்கள் மெஷின்கள் அனைத்துக்கும் உபயோகியுங்கள் ஸிங்கர்* ஆயில்.

**துப்பாக்கிகள், மின் விசிறிகள்,**
**சைக்கிள்கள். தையல் மெஷின்கள்,**
**கீல்கள், பூட்டுகள்: எதற்கும்!**

ஸிங்கர்* ஆயில் சிறிதே போதும் பலனை அறிய.
க்றீச்சிடும் ஓசையில்லை. துரு இல்லை.
...மழைக் காலங்களில் கூட.
உங்கள் மெஷின்களை நளினமாக, அனுயாசமாக
இயங்கச் செய்கிறது ஸிங்கர் ஆயில்
...என்றென்றைக்கும்!

## ஸிங்கர்* ஆயில்

—உரியகாலத்தில் ஒரு துளி, உங்கள் மெஷின்கள் இயங்க உறுதுணை.

ஸிங்கர் ஸோயிங் மெஷின் கம்பெனி, ஸிங்கர் பில்டிங்,
207, டி.என். ரோடு, பம்பாய்-1
* ஸிங்கர் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேட் மார்க். ரெஜிஸ்டர்டு யூஸர்ஸ்:
ஸிங்கர் ஸோயிங் மெஷின் கம்பெனி.

SM I TM

*விநியோகஸ்தர்கள்:* ஷா தரம்சந்த் பீமாஜி, 13, நாராயண முதலி லேன், சென்னை-1

# கல்கி பொருளடக்கம்

சௌமிய, வைகாசி 19 ★ 1969, ஜூன் 1


| | | | | |
|---|---|---|---|---|
| நல்லவரை இழந்தோம் ! | ... | (தலையங்கம்) | ... | 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | ... | ... | ... | 6 |
| பக்திக்கு ஒரு பேரவை... | ... | ... | ... | 7 |
| யுகத்துக்கே அரிய யோக சித்தர் | ... | பூஜ்ய வாமதேவ முனி | ... | 10 |
| போற்றி போற்றி ! (கவிதை) | ... | சௌந்தரா கைலாசம் | ... | 13 |
| சிந்தனை மின்னல்; வார்த்தைப் பின்னல் | ... | மணிமொழி | ... | 15 |
| பொன்னியின் செல்வன் | ... | அமரர் கல்கி | ... | 18 |
| எதியோப்பியா எப்படி ? | ... | பேட்டி: 'பாணன்' | ... | 24 |
| ராமாயணம் | ... | ராஜாஜி | ... | 26 |
| அம்புலிக்கு அப்பால்.... | ... | புஷ்பா—விஜயா | ... | 30 |
| ஞான ஒளி (தொடர் நாடகம்) | ... | கே. சுந்தரம் | ... | 33 |
| அறுவகைச் சமயம் வைத்தார் | ... | இரா. நாகசாமி எம். ஏ. | ... | 38 |
| தீராத விளையாட்டு | ... | கு. அழகிரிசாமி | ... | 46 |
| இளங்கோவின் துறவு (பரிசுக் கதை) | ... | அய்க்கண் | ... | 56 |
| இக்கட்டான நிலை ! | ... | ... | ... | 68 |
| ஓடாதே நில் ! | ... | பி. வி. சபரிராஜன் | ... | 71 |
| இன்னமும் நாத்திகன்தான்... | ... | 'காடவன்' | ... | 73 |
| திருநாள் திரும்பி வரும்... | ... | கமலாமணாளன் | ... | 78 |


''கல்கி'' யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே





TAMIL



பயோ-ஸால்
(கிரைப் மிக்சர்)

ஜே. & ஜே. டிஷேன்
ஹைதராபாத் - இந்தியா



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 ● இதழ் 44

# நல்லவரை இழந்தோம்!

தமது கட்சிக்காரர்கள், பிற கட்சிக்காரர்கள் ஆகிய எல்லோராலுமே ஒருமுகமாக 'நல்லவர்' என்று பாராட்டப் பெறும் உணவு, விவசாய மந்திரி திரு ஏ. கோவிந்தசாமி அவர்களின் மறைவில் ஓர் அபூர்வமான மனிதரை — ராஜ்யத்துக்கு நல்லமுறையில் சேவை செய்யக் கூடிய ஒருவரை இழந்து விட்டோம்.

'நல்லவர்' என்று பெயர் எடுப்பது கடினம். அதிலும் அதிகாரபீடத்துக்கு வந்த பின்னும் ஓர் அரசியல்வாதி 'நல்லவர்' என்ற பட்டத்தை இழக்காதிருந்தால் அது குறிப்பிடத்தக்க விஷயமாகும். 'அதிகார சக்தி சித்தத்தைக் கெடுக்கும்' என்பது பழமொழி அல்லவா? பழமொழியைப் பொய்ப்பித்த ஒருவர் போய்விட்டார்.

> ''கட்சி அல்லது கோஷ்டி உணர்ச்சி இன்றி, மக்களில் பல்வேறு பிரிவினரும் கூறுவதிலிருந்து, திரு கோவிந்தசாமியின் துயரகரமான மறைவில் ஒரு வெகு நல்ல மந்திரியை, மிகுந்த மதிப்புக்குரிய ஒரு மனிதரைத் தமிழ்நாடு இழந்து விட்டது எனத் தெரிகிறது. இழப்புக்கு ஆளான அவரது குடும்பத்துக்கும் நல்ல சகாவை இழந்துவிட்ட முதன் மந்திரிக்கும் என் மனமார்ந்த அநுதாபங்கள்''

என்று ராஜாஜி கூறியுள்ளார்.

நல்லவர் என்பதோடு வேலையிலும் திறமைசாலி என்று பெயரெடுத்தவர் திரு கோவிந்தசாமி. மந்திரி பதவி வகித்த குறுகிய காலத்துக்குள்ளேயே, 'பிரச்னைகளை எளிதில் புரிந்து கொண்டு விரைவில் முடிவெடுப்பவர்; சிவப்பு நாடா முறையைக் காண முடியாத சுறுசுறுப்புக்காரர்; சுறுசுறுப்பு இருப்பினும் நிதானம் இழக்காதவர்' என்றெல்லாம் பெயர் வாங்கினார். இதனால் அண்ணாவின் ஆட்சியில் ஓர் இலாகாவுக்கு அமைச்சராக இருந்த அவரிடம், திரு கருணாநிதியின் புதிய மந்திரி சபையில் இரண்டு பளுவான இலாகாக்கள் தரப்பட்டன. தி. மு. க.வின் மிகவும் கௌரவம் வாய்ந்த தலைவர்களில் ஒருவர் திரு கோவிந்தசாமி. அதே போதில் நிரம்ப அடக்கம் வாய்ந்தவரும்கூட.

ஆதியில் உழைப்பாளர் கட்சி மூலமும் பிறகு தி. மு. க. மூலமும் தொண்டு செய்து வந்த திரு கோவிந்தசாமி, திரு அண்ணாதுரை மறைந்த துயரம் மறையும் முன்பே, அவரைப் பின்பற்றி விட்டார். இது தி. மு. க.வுக்கும், தமிழக அரசாங்கத்துக்கும், தமிழகத்துக்குமே பெரு நஷ்டமாகும். நல்லவராகவும், திறமைசாலியாகவும், நிதானபுத்தி வாய்ந்தவராகவும், மதிப்புக்குரியவராகவும், அடக்கம் வாய்ந்தவராகவும் உள்ள அரசியல்வாதிகளை அதிகம் காண முடியாது.

ஃ ஃ ஃ

மனத்தைத் தொடும் மற்றொரு விஷயம். தியாகத்துக்காக அரசியல் என்பது போய் லாபத்துக்காகவே அரசியல் என்ற நிலை நம் நாட்டில் தோன்றி விட்டது. ஆதியில் தியாகம் செய்தவர்கள்கூடப் பிற்பாடு லாபத்தை நாடத் தொடங்கி விட்டதைக் காண்கிறோம். இப்படியிருக்க சக்திவாய்ந்த ஒரு கட்சியின் தலைவர்களில் ஒருவராகவும், பிறகு ஒரு ராஜ்ய மந்திரியாகவும் இருந்த திரு கோவிந்தசாமி, தமது குடும்பத்தைத் திரவிய நிலையில் மிகவும் சாமானிய மட்டத்திலேயே விட்டுச் சென்றிருக்கிறார்! அவரது குடும்பத்தினரைப் பற்றி எண்ணுகையில் இது வருத்தம் தருகிறது எனினும், அவரது நன்னடத்தையை நோக்குங்கால் இதுவே அவருக்கு ஏற்றம் அளிக்கிறது. தமது தலைவர்களிடமும், அவர்களது குடும்பத்தார் நலனிலும் மிகுந்த ஈடுபாடு கொண்ட தி. மு. கழகத்தினர் திரு கோவிந்தசாமியின் குடும்பத்துக்கு வெகு விரைவிலேயே வேண்டிய சௌகரியங்களைச் செய்து தர முன் வந்துள்ளனர். மந்திரியின் மறைவால் ஏற்பட்ட துயரை அவரது குடும்பத்துக்காக மேற்கொள்ளும் அன்புப் பணி ஆற்றுமாக!

# ராஜாஜியின் கருத்துக்கள்

ராஷ்டிரபதி தேர்தலுக்குக் காங்கிரஸ் நிற்க வைக்கப் போகும் அபேட்சகரைத் தெரிவித்தாலன்றி மற்ற கட்சிகள் தங்கள் அபேட்சகரின் பெயரை வெளியிடக் கூடாது என்று சுதந்திரக் கட்சியிலுள்ள என் சகாக்கள் கூறுவதை நான் ஒப்பவில்லை. இந்தப் பொறுமையைக் கடைப்பிடிக்கும் வினையாட்டை நான் ரஸிக்கவில்லை. ஸ்ரீமதி இந்திரா காந்தி ராஷ்டிரபதி தேர்தல் விஷயம் கட்சிப் பிரச்னையல்ல என்று மிகச் சரியானதொரு கருத்தை வெளியிட்டிருக்கிறார். இந்தக் கருத்துக்கு ஆதரவாக அவருக்கு நாம் ஊக்கமும் உற்சாகமும் அளிக்க வேண்டும். அவரது மந்திரி சபை சகாக்கள், அவரது கட்சி நிர்வாகிகள் ஆகியோரின் சந்தேகாஸ்பதமான ஆதரவை அவர் எதிர்நோக்க விடாமல் நாமே முழு ஆதரவு அவருக்குத் தர முன் வர வேண்டும்.

என் மனத்தில் இரண்டு நபர்கள் இருக்கிறார்கள். இவர்களில் யாரைத் தேர்ந்தெடுத்தாலும் ராஷ்டிரபதி ஸ்தானத்தைத் தக்கபடி நிறைவு செய்வார்கள். இதனால் தேசம் முழுவதிலும் ஆங்காங்கே அராஜகத்தையும் நாசத்தையும் தூண்டிவிடும் சக்திகளின் மனத்தில் அச்சம் ஏற்படும்; தேசம் முழுவதிலும் நல்ல ஆரோக்கியச் சூழ்நிலை ஏற்படும். சமீபகாலம் வரை நமது ராணுவத்துக்குச் சேனாதிபதியாக விளங்கிய ஜெனரல் குமாரமங்கலம் அவர்களை ராஷ்டிரபதி பதவியை ஏற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ள வேண்டும். அவர் தாமாகவே இந்த அராஜக அட்டூழியச் செயல்களை அடக்க நடவடிக்கை எடுக்காமல் இருக்கலாம். ஆனால் இவற்றை அடக்க தக்க நடவடிக்கைகள் என்ன என்ன என்பது பற்றி அரசாங்கத்துக்கு யோசனை கூறவும், சரியான முடிவுகள் எடுக்க உதவவும் இவரால் முடியும். இவரைத் தேர்ந்தெடுத்தால், தேசம் முழுவதிலும் நல்ல ஆரோக்கியச் சூழ்நிலை ஏற்படும். தேச மக்கள் அனைவரும் தங்களுக்கு நல்ல பாதுகாப்பு கிடைத்தது என்று மகிழ்வார்கள்.

நான் குறிப்பிடும் மற்றொரு பெயர் ஸ்ரீ ஹிருதயநாத் குன்ஸ்ரூ. 'சர்வண்ட்ஸ் ஆவ் இந்தியா சொஸைட்டி'க்கு அவர் நீண்டகாலம் மதிப்பு வாய்ந்த தலைவராக இருந்து செய்துள்ள பணி, அதேபோல் அவர் பார்லிமெண்டில் பணியாற்றிப் பெற்ற அநுபவம், இவ்விரண்டு யோக்கியதாம்சங்களைவிட அவரது அறிவாற்றல், இதயப் பண்பு யாவும் கட்சிச் சார்பற்ற ஆனால் எல்லாப் பகுதி மக்களின் மதிப்புக்கும் கௌரவத்துக்கும் உரிய ராஷ்டிரபதி பதவிக்கு அவரைத் தகுதியுடையவராக்குகிறது.

அவருக்கு எண்பத்திரண்டு வயதாகிறது. ஆனால் அவர் நேற்றுபோல் தேக ஆரோக்கியத்துடனும் இருக்கிறார். அவருக்கு இதயம், வயிறு, சிறுநீரகம், நுரையீரல் ஆகிய எங்கும் எவ்வித உபாதையுமில்லை. அவர் ஒழுங்கான உணவுப் பழக்கம் கொண்டிருக்கிறார். இந்த வயதிலும் தினமும் அவர் சிறிது தேகப் பயிற்சி செய்கிறார். இவர் எல்லாருக்கும் பிடித்த இலட்சிய அபேட்சகராகக்கூடும். இந்த உயர் பதவிக்கு நான் குறித்த இவ்விரு நபர்களையும் பிரதமர் அனுகிப் பதவி ஏற்குமாறு கோர வேண்டும். இவர்களில் ஒருவரை எவ்வளவு சீக்கிரமாக முடியுமோ அவ்வளவு சீக்கிரமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஃஃஃ

பம்பாய் தான் பெற்றிருந்த கௌரவமான உயர் ஸ்தானத்திலிருந்து விழுந்துவிட்டது. சமீப காலம் வரை அகில இந்தியாவிலிருந்தும் பலதரப்பட்ட மக்களை அன்புடன் வரவேற்கும் நகரமாக இருந்தது. இப்பொழுது அந்த நகரத்தில் எத்தகைய சூழ்நிலை நிலவுகிறது என்பதைக் கீழ்க்கண்ட செய்தி விளக்கும்:

**கடைகள் ஏலத்தைச்**
**சேனா அங்கத்தினர்கள் நிறுத்தினார்கள்**

பம்பாய், மே 21உ

வட பம்பாய் முனிசிபல் மார்க்கெட்டில் உள்ள கடைகளை ஏலம் விடக்கூடாது, மராட்டியர்களுக்கே வாடகைக்கு விட வேண்டும் என்று வற்புறுத்தி ஆயிரம் சிவசேனா தொண்டர்கள் நிகழ்த்திய ஆர்ப்பாட்டம் காரணமாக ஏலம் போடுவது கைவிடப்பட்டது.

அங்கு பந்தோபஸ்து வேலையில் ஈடுபட்டிருந்த இன்ஸ்பெக்டர் சாமந்த் அவ்விடத்தில் ஏற்பட்ட குழப்பத்தில் மயக்கமுற்று விழுந்து விட்டார். அவரை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றார்கள்.

இருபத்திரண்டு கடைகளில் நான்கு கடைகளை மட்டுமே அதிகாரிகளால் ஏலம் விட முடிந்தது. அந்த நாலும் மராத்தி பேசுபவர்களுக்கே கிடைத்தது.

ஃஃஃ

மக்களைத் தெய்வ பக்தியுள்ளவர்களாகவும், உழைப்பில் ஊக்கமுள்ளவர்களாகவும் செய்வதற்குப் பதில் இந்தியா முழுதும் மக்களுக்கு லாட்டரிப் பித்து பிடிக்கச் செய்து வருகிறார்கள். இந்தத் தீமையை நீக்குவதற்கு நடவடிக்கை எடுக்காமல் மத்திய அரசாங்கம், இந்தத் தார்மிகச் சிதைவைப் பார்த்துக் கொண்டிருக்கிறது. ஏற்கனவே மொழிவழி ராஜ்யங்களைப் பிரித்ததின் விளைவாக உண்டான குறுகிய மாகாணப் பித்தின் காரணமாகப் பரந்த மனப்போக்குள்ள உயர்ந்த தலைவர்களிடமிருந்து, மக்களை வழி நடத்தி இட்டுச் செல்லும் தலைமைப் பொறுப்பு பதவி, வெறி பிடித்த குறுகிய மட்டரக மக்களிடம் போய்ச் சேர்ந்துள்ளது. இவர்களை ஆதரிக்கும் மக்களும் அரசியலைக் கடை வைத்து நடத்தும் வியாபாரம் போலவும், அண்டை ராஜ்யக்காரர்களைப் பரம விரோதிகள் இல்லாவிட்டாலும் வைரிகள் எனவும் கருதுகிறார்கள். இந்தத் தீமைகளோடு, லாட்டரிப் பித்தும் ஒரு பெரிய சாபக்கேடாக வந்து சேர்ந்துள்ளது.

# பக்திக்கு ஒரு பேரவை; ஒற்றுமைக்கு ஓர் உற்சவம்!

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் அநுக்கிரகத்தில் நமது சமய சரித்திரத்திலேயே ஒரு பொன்னான அத்தியாயம் ஜூன் முதல் தேதியிலிருந்து ஒன்பதாம் தேதி வரை மலருகிறது. சென்னை மாநகரில் 'சங்கரர் — ஷண்மத மகாநாடு' என்ற மகத்தான திருவிழா இந்த ஒன்பது நாட்களில் நடை பெறவிருக்கிறது.

பிரபஞ்சம் தோன்றிய நாளாக ஆதி சங்கர பகவத்பாதர்களைப் போன்ற இன்னொரு வியக்தி தோன்றியிருக்க முடியுமா என்றே வியக்க வேண்டியதாகிறது. அவரைவிட விசாலமான மனப்பான்மையை எங்கும் காண்பதற்கில்லை. விசாலம் என்றால் அதுவல்லவா விசாலம்! பிரம்மத்தில் நிலைத்து ஒன்றிப் பிரபஞ்சத்தின் அளவு விசாலமாகிவிட்ட இதயம் அவருடையது. ஞானாசாரியராகத் திகழ்ந்தார். பக்த சிகாமணியாகப் பொலிந்தார். கர்ம யோகியாக வாழ்ந்தார். மக்களுக்கும் கர்மம் — பக்தி — ஞானம் மூன்றையும் போதித்தார்.

ஒற்றுமை — ஐக்கியம் என்றால் அதற்கு ஆதிசங்கரரைப் போல் ஓர் உருவகத்தைப் பார்க்க முடியாது. இருப்பது ஒன்றே என்று கூறி அதில் அப்படியே ஒன்றிவிட்ட ஆன்மா அவருடையது. அந்த ஒன்றுதான் இத்தனை ஜீவர்களாகவும் தோன்றுகிறது என்று கண்டவர் அவர். அற்ப மானுடர்களை அமுதப் பரம்பொருளாகக் கண்டவர். இதனாலேயே மாந்தர்கள் நானாவித மனப் பக்குவத்தை ஒட்டிப் பின்பற்றும் சமய மார்க்கங்கள் அனைத்தையும் மதித்துப் போற்றினார் அவர்.

அற்ப மானுடரையே அமுதப் பரம்பொருளாகப் பார்த்த சங்கரர், தெய்வங்கள் அனைத்தையும் ஒரே பரம்பொருளின் வடிவங்களாகக் கண்டதில் அதிசயமில்லைதானே? எல்லாத் தெய்வங்களின் மீதும் கவித்துவமும் தத்துவமும் பின்னிப் பிணைந்த தோத்திரங்களை அருளினார். பாரத தேசமெங்கும் க்ஷேத்திராடனம் புரிந்தார்.

ஆதி சங்கராசாரியர்களின் காலத்தில் நமது சமய வாழ்வு சிதைந்து கிடந்தது. ஒரு புறம் அவைதிக மதங்கள் தலைதூக்கி நின்றன. மற்றொரு புறத்திலோ வைதிக மதங்களாகத் தம்மைக் கூறிக் கொண்டவர்களும் உண்மையில் வேத தாத்பரியத்துக்கு மாறாகவே நடந்து கொண்டனர். மீமாம்சகர்கள், 'கர்மாவே போதும், பக்தியும் வேண்டாம், பரமனும் வேண்டாம், ஞானமும் வேண்டாம்' என்றனர். பக்தி செய்தவர்களும், உண்மையான பக்தியின் இயல்பை அறியாமல் குழம்பியிருந்தனர். வைதிகமான தூய வழிபாட்டு முறைக்குப் பதில், மூட நம்பிக்கைகளும், உக்கிரமான அநுஷ்டானங்களும், அசங்கியமான போக்குகளும் சமய வழிபாட்டில் மிகுந்தன. 'பக்தி என்பது அன்பு; எனவே அஹிம்சை' என்ற நல்லறிவு நலிந்து, உயிர்ப் பலி தந்தும், தங்களது உடலையே சுட்டுக் கொண்டும் இறைவன் அருளைப் பெற அறிவற்ற சடங்குகள் ஏற்பட்டன. காபாலிகம் முதலிய மதங்களின் உக்கிரமான, பயங்கரமான அம்சங்கள் ஒரு புறமும், வாமாசாரத்தின் அருவருப்பான பழக்கங்கள் ஒருபுறமுமாக உண்மைப் பக்தியைப் பாழ்துறச் செய்தன.

ஆதி ஆசாரியர்களின் காலத்தில் பாரத தேசத்தில் எழுபத்திரண்டு மதப் பிரிவுகள் இருந்ததாகவும், இப்பிரிவினர்கள் சிறிதும் ஐக்கியம் இன்றி, தத்தமது மார்க்கமொன்றே உண்மையானது என்று பூசலிட்டு வந்ததாகவும் சங்கர விஜய நூல்களிலிருந்து அறிகிறோம். இவ்வளவு பிரிவினரையும் அன்பினால் ஐக்கியப்படுத்தும் அரும் பணியை ஏற்றுக் கொண்டார் ஸ்ரீ சங்கரர். தமது குறைந்த ஆயுட் காலத்திலேயே பணியை அற்புதமாக நிறைவேற்றியும் விட்டார். புறச் சமயங்களை வென்றதோடு நில்லாமல், ஹிந்து சமயத்திலேயே பரஸ்பர விரோதத்துடன் பலவாகப் பிரிந்திருந்த மார்க்கங்களையும் சமரசப்படுத்தினார் அவர். ஹிந்து மதத்தில் காணப்பட்ட வழிபாட்டு முறைகளில் தூய வைதிகத்தை — அஹிம்சை முறையை—அன்பு வழியை — அறிவு அடியோடு கைவிடப்படாத விவேக மார்க்கத்தை — எனினும் உண்மையான உள்ளுணர்ச்சிக்கும், அநுபவத்துக்கும் அந்த அறிவையும் அடி பணிய வைக்கும் பாங்கினை — நிலைநாட்டினார். நாடு முழுதும் சென்று மதப் பிரிவுகளின் தலைவர்களுடன் வாதமிட்டார். தர்க்கத் திறனும், இதயக் கனிவும் கலந்த அந்த வாதங்களிலும் மன மாற்றம் அடையாதவர்கள் — உதாரணமாக, ஸ்ரீசைலத்துக் கபாலிகர்கள் — ஆசாரியரையே கொல்லவும் முயன்றனர். ஆயினும் அவர் தம்மைப் பொருட்படுத்திக் கொள்ளாமல் தம் இலட்சியத்தையே பொருளாகக் கருதி, அயராமல் தளராமல் அன்பு வழியில் முயன்றார். இறுதியில் அந்த அன்பு வென்றே விட்டது.

பலவான வழிபாட்டு முறைகளை காணபத்தியம் (விநாயகர் வழிபாடு), கௌமாரம் (முருக வழிபாடு), வைஷ்ணவம் (திருமால் வழிபாடு), ஸௌரம் (சூரிய வழிபாடு), சாக்தம் (தேவி வழிபாடு), சைவம் (சிவ வழிபாடு) என்ற ஆறு பிரிவுகளுக்குள் உட்படுத்தினார் ஸ்ரீ ஆசாரியர். 'எல்லாம் ஒன்றே' என்று கூறிய அத்வைதியாயினும், மக்களின் நானாவித மனப் போக்கையும் அவர் மதித்ததால், அவரவருக்குப் பிரியமான ஓர் இஷ்டதேவதையை வழிபடுவதில் தவறில்லை எனக் கண்டார். ஓர் இஷ்டதேவதையிடம் தளராத பற்று வைத்தால் அதுவே மேம்பாட்டுக்கு வழி செய்யும் எனக் கண்டார். எனினும், இது காரணமாக எவரும் பிற தெய்வங்களையோ, அந்தத் தெய்வங்களை

வழிபடுபவர்களையோ தூஷிக்கலாகாது என வலியுறுத்தினார். தமது அத்வைத சம்பிரதாயத்தை ஏற்றுக் கொண்ட நேர் சீடர்கள் ஈசன், அம்பிகை, விஷ்ணு, விநாயகர், சூரியன் ஆகிய ஐவரையும், வைதிக கருமங்கள் மூலம் அக்னி உருவான முருகனையும் வழிபட வேண்டும் என விதித்தார். இந்த சம்பிரதாயத்தை ஏற்காத மற்ற ஜீவன்களுக்கும், அவரவரின் இஷ்ட தேவதைகளை உண்மையான பக்தி நெறியில் நின்று வழிபடுவதற்கு வழி வகுத்தார்.

ஒவ்வொரு தெய்வத்தையும் பரப் பிரம்மமாகவே கண்டு, அந்தந்த தெய்வ வழிபாட்டுக்குரிய ஆசாரங்களையும் சம்பிரதாயங்களையும் மதித்து ஆதி ஆசாரியர் பாடியுள்ள அமுதத் துதிகள், நலிவுகண்ட பக்தி மார்க்கத்துக்கு வலிவு தந்தன. எல்லாத் தெய்வங்களின் வழிபாட்டுக் கிரமத்தையும் தெளிவுபடுத்திப் 'பிரபஞ்சஸாரம்' என்ற நூலையும் தந்தார் ஆசாரியர். அந்தக் கிரமத்தை நானிலம் ஏற்றது. முக்கியமாக, விநாயகர் — முருகன்— சூரியன் — திருமால் — அம்பிகை — ஈசுவரன் ஆகிய ஆறு தெய்வங்களின் புராதனமான வழிபாட்டு முறைகளை, அவற்றின் இடைக் கால அழுக்கு களைந்து, மீண்டும் வைதிகமாக நிலைநாட்டியதால், ''ஆறு சமய ஆசாரியராக'' அத்வைத ஆசாரியரைப் போற்றியது உலகம். 'ஷண்மத பிரதிஷ்டாபகாசாரியர்'' என்பது அவரது சிறப்புக்களில் ஒன்றாயிற்று.

அத்வைத ஸ்தாபகாசாரியர் என்ற முறையில் உயர் பக்குவம் வாய்ந்த ஒரு சிலரையே ஆகர்ஷித்த ஆதிசங்கரர், ஷண்மத ஸ்தாபகாசாரியராகத்தான் நமது நாட்டின் அதி சாமானிய மனிதனின் மட்டத்துக்கும் இறங்கி வந்து அவனை மேலே உயர்த்தினார்.

ஆயினும் அவரது அத்வைதமும், ஞான மார்க்கமும் சர்வ தேசங்களிலும் மகத்தான போற்றுதலுக்கு ஆளாகியிருப்பது போல், அவரது ஷண்மத ஸ்தாபனப் பணி உணரப்படவில்லை. ஞான ஆசாரியரது மகத்தான பக்திப் பணியை உலகுக்கு உணர்த்துமுகமாகவே, ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி ஆசாரியர்கள் திரு உள்ளம் பாலித்தபடி 'சங்கரர் — ஷண்மத மகாநாடு' நடைபெறுகிறது.

ஸ்ரீ எஸ். ஜி. ரத்தினம் அய்யரவர்கள் பேரன்பு கூர்ந்து வழங்கியுள்ள, ஆழ்வார்ப் பேட்டை வீனஸ் காலனியிலுள்ள ஆஸ்திக சமாஜத்தின் அலங்காரப் பந்தலில் விழா நடக்கிறது.

ஹிந்து மதத்தினரின் எல்லாப் பிரிவினரையும் ஒன்று சேர்த்து, எல்லாருக்கும் பொதுவான பக்தியை வலியுறுத்தும் இம்மகாநாடு, அத்வைத ஆசாரியரான ஸ்ரீ பதரி சங்கராசாரிய ஸ்வாமிகள் (சகடபுரம்), துவைத ஆசாரியரான ஸ்ரீ பேஜாவர் ஸ்வாமிகள் (உடுப்பி), சைவ சித்தாந்த ஆசாரியரான ஸ்ரீ ஞானப் பிரகாச ஸ்வாமிகள் (காஞ்சிபுரம்) ஆகிய மூவரையும் போஷகர்களாகக் கொண்டு நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

முன்னாள் முதன்மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலத்தின் தலைமையில், பல பிரபலஸ்தர்களை அங்கத்தினர்களாகக் கொண்ட ஒரு கமிட்டி மகாநாட்டை நடத்துகிறது.

ஜூன் முதல் தேதி மகாநாடு ஆரம்பம். இரண்டாம் தேதி முதல் ஏழாந் தேதி முடிய, ஆறு தினங்களிலும் மாலை வேளைகளில் முறையே காணபத்தியம், கௌமாரம், வைஷ்ணவம், ஸௌரம், சாக்தம், சைவம் ஆகியன குறித்துப் பாரதத்தின் எல்லாப் பகுதிகளையும் சேர்ந்த பேரறிஞர்கள் - உயர் நிர்வாகத் தலைவர்கள், உயர்நீதிபதிகள், உப அத்தியக்ஷர்கள், பேராசிரியர்கள், பண்டிதர்கள், புலவரேறுகள் ஆகியோரின் பிரசங்கங்களும் பிரவசனங்களும் நடைபெறும். ஸ்ரீ ராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும் திருமாலின் அவதாரங்கள் என்ற முறையில் வைஷ்ணவத்தில் அடக்கமே ஆயினும், இன்று ஸ்ரீ ராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும் தேசமெங்கிலும் மிகுந்த வழிபாட்டுக்கு உரியவர்களாக இருப்பதால், ஷண்மதங்கள் தவிர, ஜூன் எட்டாந் தேதியன்று ஸ்ரீ ராமனைக் குறித்தும், ஜூன் ஒன்பதாந் தேதியன்று ஸ்ரீ கிருஷ்ணனைக் குறித்தும் சான்றோர்கள் பேசுகின்றனர்.

இம்மகாநாட்டை ஒட்டி ஒரு கோயிற் கண்காட்சியும் ஏற்பாடாகியுள்ளது. பாரதத்தின் புண்ணிய க்ஷேத்திரங்கள் அவ்வளவையும் ஒரே இடத்தில் தரிசிப்பது போல், இக்கண்காட்சியில் ஏராளமான ஆலயங்களின் புகைப்படங்கள் இடம் பெறும். மேலும் ஷண்மத அதிதேவதைகளான கணபதி, குமாரசுவாமி, மகா விஷ்ணு, சூரியபகவான், பராசக்தி, பரமேசுவரன் ஆகியவர்களின் மூர்த்திபேதங்கள், யந்திரங்கள் முதலியனவும் கண்காட்சியில் ஒரு பகுதியாக அமையும். ஆதிசங்கர பகவத்பாதர்கள் சம்பந்தப்பட்ட ஸ்தலங்கள் ஒரு பகுதியில் இடம் பெறும். புதைபொருள் இலாகா டைரக்டர் ஸ்ரீ ஆர். நாகசுவாமி அவர்களின் மேற்பார்வையில் கண்காட்சி அமைக்கப்படுகிறது.

பூர்ணிமையும், பூரணப் பொருளான ஸ்ரீ காமகோடிப் பெரியவர்களின் எழுபத்தாறுவது புனித ஜயந்தி நாளும் ஆகிய மே 31ந் தேதி மாலை கண்காட்சி திறக்கப்படும்.

மறு நாள் ஜூன் முதல் தேதி காலை ஒன்பது மணிக்கு பாரதத்தின் இடைக்கால ராஷ்டிரபதி டாக்டர் வி. வி. கிரி அவர்கள் மகாநாட்டைத் தொடக்கி வைக்கிறார். ஆதிஆசாரியர்களுக்குத் தேசமே அஞ்சலி செலுத்துகிறது என்பதற்கு உருவம் தருவது போல் பாரதத்தின் முதற் பிரஜையாகிய ராஷ்டிரபதி அவர்கள் விழாவைத் தொடக்கி வைப்பது மிகப் பொருத்தம்தானே ?

விரிவான நிகழ்ச்சி நிரலை இவ்விதழில் தனியே காணலாம்.

இந்தத் தெய்விகத் திருவிழாவுக்கு மக்கள் அனைவரும் திரளாக வந்திருந்து, ஞானாசாரியராகிய சங்கரரைப் பக்த சிகாமணியாக உணர்ந்து, பணிந்து, அந்தப் பக்தியின் சக்தியில் தாங்களும் குறுகிய மத மாறுபாடுகளைக் களைந்து கொள்ள வேணும்.

ஸ்ரீ காமகோடி பரமாசாரியர்கள் எழுபத்தைந்தாண்டுகளை நிறைவு செய்யும் புனித நாளில் இதுவே நாம் அவருக்குச் செய்யும் அஞ்சலியாகட்டும் !

---

ஷண்மத ஸ்தாபகரான ஸ்ரீ சங்கரரையும், ஷண்மத அதிதேவதைகளான விநாயகர், முருகன், சூரியன், திருமால், தேவி, ஈசன் ஆகியோரது திருவுருவங்களையும் இவ்விதழ் மேலட்டையில் தரிசிக்கிறோம்.



உழுவலன்பை உன் கழலுக்காக்கியே
தொழுது அழுது எம் பாவம் யாவுமே
கழுவ வேண்டினோம் காமகோடியே
எழுபத்தாறு காண் என்றும் இளையனே !

# யுகத்துக்கே அரிய யோக சித்தர்

பூஜ்ய வாமதேவ முனி
(நாங்லாந்து ராஜகுரு)

**1968**ம் ஆண்டு அக்டோபர் மாதம் பாரத புண்ணிய பூமியில் யாத்திரை புரியும் வாய்ப்பு எமக்குக் கிட்டியது. அப்போது மிக நெருங்கிய உறவினரின் நிழற் குடையில் வந்து தங்கியிருப்பது போன்ற உணர்வைப் பெற்றோம். மகிழ்ச்சி தரும் அவ்வுணர்ச்சிக்குக் காரணம் எமது பெருமதிப்புக்குரிய தந்தை (மகாராஜகுருவிதி, ஸ்ரீ விசுத்திருண்) ஒருமுறை பாரத யாத்திரை செய்திருந்தார் என்பதோடு, இளம் பிராயத்தில் அவர் வாய்மொழியாகப் பாரதத்தின் பெருமையைக் கேட்டறிந்ததும் ஆகும். அதுமுதல் பாரதத்தைத் தரிசித்தே தீரவேண்டும் என்ற ஆசை எமது மனத்தில் நீங்காத சாயலாக நிறைந்திருந்தது. அகிலமனைத்துக்கும் மாபெரும் அறக் களஞ்சியமாகத் திகழ்வது புனித பாரத பூமி. அதன் பரந்த பான்மைக்கே ஈடு இணை யில்லை. அதில் படிந்திருக்கும் சின்னஞ்சிறு புழுதிக்குக் கூடத் தனியானதொரு வரலாறு உண்டு. இப்படி நாம் கூறுவது உண்மைக்குச் சிறிதும் புறம்பாகாது. ஏனெனில் வையகம் முழுவதுமே இவ்வுண்மையை ஏற்றிப் போற்றுகிறது.

மூதாதை அனைவரும் எதிரே வந்து நிற்பது போன்ற உணர்வைப் பெற்று உவகை கொண்டோம். எமது இவ்வுணர்வுக்குச் சாட்சிகளென நூற்றுக் கணக்கான வேதியர்கள் அப்பெரிய முற்றத்தில் அமர்ந்து வேதங்களின் பல சாகைகளையும் முறைப்படி ஓதிக் கொண்டிருந்தார்கள்.

பாரதத்தின் பல பகுதிகளிலிருந்தும் வந்து குழுமியிருந்த வேதியர்கள் காமகோடி பீடத்தின் நிழல் முற்றத்திலே அமர்ந்து அவரவர்கள் கற்றுத் தேர்ந்த சாகைகளை முறைப்படி ஓதிக்கொண்டிருந்ததை யாம் காதாரக் கேட்டோம். இதுபோன்ற வைதிக சம்மேளனத்தைக் காணவும் வேதமோதுதலைக் கேட்கவும் வாழ்க்கையிலேயே எமக்கு முதல் வாய்ப்பு இங்குதான் கிட்டியிருந்தது. நான்கு வேதங்களின் பல்வேறு சாகைகளையும் ஸ்வரத்தோடு வேத பாராயணம் செய்யும்போது, மந்திரங்களை உச்சரிப்பதிலும் ஸ்வரத்தோடு ஓதுவதிலும் பல வேறுபாடுகள் உண்டு என்பதையும் முதல் தடவையாக இங்குதான் அறியப் பெற்றோம். ஸ்வர சுத்தமான வேதமோதுதலைக் கேட்டுச்

எமது பாரத புனித யாத்திரைக்குக் காரணபூதர்களான ஸ்ரீ கருணா குசலாசயருக்கும், தற்பொழுது தில்லியில் வசித்து வரும் அவரது நண்பருக்கும் நன்றிகூறக் கடமைப் பட்டிருக்கிறோம். ஸ்ரீ கருணா குசலாசயரும் அவரது நண்பரும் எமக்கு ஒரு பாலம் சமைத்துத் தந்தார்கள். அதன் வழியாக நடமாடும் தெய்வமாம் ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி அவர்களை விஜயவாடா சென்று வணங்கி வழிபடும் பேற்றினை யாம் பெற்றோம். ஆதி சங்கரர் நிறுவிய ஆதி பீடத்தைக் காணும் வாய்ப்புக் கிடைத்ததே அதற்காக — அதற்கான பாதை வகுத்தவர்களுக்கு எத்தனை நன்றி கூறினாலும் தகும்தானே?

1968ம் ஆண்டு அக்டோபர் மாதம் பதினைந் தேதி திங்கட்கிழமையன்று காமகோடி பீடத்தின் பரிசுத்தமான சூழலிலே ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரியரைத் தரிசித்தோம். அப்பொழுது





படங்கள்—இடது பக்கம்: ராஜகுரு. மேலே: பூஜையில் ராஜகுரு.

சித்தத்துக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. குறிப்பாகக் கிருஷ்ண யஜுர் வேதத்தின் கன பாடத்தைக் கேட்டு மனம் நிறைந்தது.

இரவில் வேத பாராயணப் போட்டி, பரீட்சை முறை ஆகியனவற்றைக் காணவும் எமக்கு வாய்ப்புக் கிட்டியது. சம்மேளனத்தின் முடிவிலே ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் தமது கர மலர்களால் வேதியர்களுக்கு ஆசியும் அன்பளிப்பும் வழங்கிக் கௌரவித்தார்கள். வேதியர்களது இருக்கை, உணவு, வழிச் செலவு ஆகியவற்றுக்குச் சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதற்காக ஆயிரக் கணக்கில் செலவிடப்பட்டது. எம்மோடு வந்த மூவருக்கும் சேர்த்து எமக்கும் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் ஆசியும் அன்பளிப்பும் வழங்கினார்கள்.

இது போன்ற வைதிக சம்மேளனங்கள், வேதப் பிரசாரத்துக்கு ஓர் ஆக்கத்தையும் வேதமுணர்ந்தோருக்கு ஓர் ஊக்கத்தையும் அளித்து உதவும் என்பது எமது அசையா நம்பிக்கை. இது போன்ற வேத சம்மேளனங்கள் அடிக்கடி நடைபெறுமானால், உலகம் பெரும் பயனடையும் என்ற உணர்வு ஏற்பட்டது.

முதற் தடவை பார்த்தபொழுதே ஸ்ரீ ஜகத்குரு ஆசாரிய சுவாமிகள் எம்மை நோக்கித் திருவாய் மலர்ந்தருளியதாவது: ''நீங்கள் பாரதத்திலிருந்து, இங்கிருந்து, என்னிலிருந்து வெகு தொலைவில் வசிக்கிறீர்கள். அதனால் இங்குள்ள வைதிக பரம்பரைக்கும் தங்களுக்கும் இடையே சிறு வேறுபாடு தோன்றுவது இயல்பே.''



## ஆசாரியர் அருள்மொழி

எந்த ஒரே மெய்ப்பொருளை அவரவரும் சித்தத்தின் வேறுபாடு காரணமாக பிரம்மா, விஷ்ணு, சிவன், அக்னி, சூரியன், சந்திரன், இந்திரன், வாயு இவ்வடிவங்களாகவும், வேள்வியாகவும் பாவிக்கிறார்களோ, அந்த ஹரியை — சம்ஸாரத் துன்பத்தை நீக்குபவனை, துதிக்கிறேன்.

ஆசாரிய சுவாமிகளுடைய இந்த வாக்கு உலகத்துக்குச் சாதாரணமானதாயிருந்தாலும் எம்மைப் பொறுத்தவரை அருள் நீரால் முழுக்காட்டுவதாயிருந்தது. இந்த ஆப்த வசனத்தைக் கேட்டு எமது மனம் எப்படி மகிழ்ச்சிக் கடலாடி ஆனந்த நடனம் புரிந்தது என்பதை விளக்குவது சொல்லுக்கும் எழுத்துக்கும் அப்பாற்பட்ட விஷயமாகும்.

அந்த நேரத்தில் எமது இதயத்தில் மரியாதை, சிரத்தை, பக்தி, அன்பு அனைத்தும் ஒன்றாகத் தோன்றி ஆசாரிய ஸ்வாமிகளின் மலரடிகளிலே அர்ப்பணமானதும் ஆசாரியரின் இதயத்திலே சுரந்த அருள் எம்மை நனைத்ததும் — அநுபவத்துக்கு அப்பாற்பட்டவை. அதை உணரும் பேராற்றல் காமகோடி பீடத்தின் தேவர் குழுவுக்கும் மும்மூர்த்தி தெய்வங்களுக்கும் மட்டுமே உண்டு. ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகள் யோக சித்த புருஷர். அவரைப் போன்ற தெய்வங்கள் இந்த யுகத்தில் கிடைப்பது அரிதிலும் அரிது என்பதே எமது திட நம்பிக்கை.

ஏனெனில், எமது பாரத யாத்திரை முழுவதிலும் நாங்கள் பயணம் மேற்கொண்டிருந்த அந்த ஒரு மாதமும் ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகள் எங்களுடனேயே எங்களுடைய யாத்திரை பற்றிய ஒவ்வொரு சிறிய விஷயத்தையும் கவனித்த வண்ணம், தொடர்ந்து இருந்து வருவதைப் போன்ற உணர்ச்சியே எமக்கு மேலோங்கி நின்றது.

விஜயபுரி, நாகார்ஜுன சாகர் அணை, நாகார்ஜுன சாகர் ஏரி, திருப்பதி, காஞ்சீபுரம், மகாபலிபுரம், சென்னை, தில்லி, மதுரை, ஆக்ரா, ஹரித்வார், ரிஷிகேசம், லக்ஷ்மண ஜூலா, லக்னோ, அயோத்தி, வாராணஸி, ஸாரநாத், கயா, புத்த கயா, ராஜகிருஹம், நாலந்தா, கல்கத்தா என்று நாங்கள் எங்கே போனாலும் ஒவ்வோரிடத்திலும் அவருடைய தொடர்பு இருந்து கொண்டே இருந்தது. நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ, அவருடைய சிஷ்ய பரம்பரை எங்களைக் கவனித்து எங்களுக்கு வேண்டிய வசதி செய்து தந்தது. சென்னையிலும், தில்லியிலும் அவரது அருளாணையின் கீழ் பண்டிதர் குழாம் எம்மைக் காண வந்தது.

ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகளின் அருட்பார்வையின் பலத்தில் எங்கள் பாரத யாத்திரை இன்பம் பயப்பதாக அமைந்தது. இந்தியக் கலாசாரத் தொடர்புக் குழு எமது பாரத யாத்திரையில் முழு ஒத்துழைப்பையும் நல்கி, எமக்கு ஆங்காங்கே தங்குவதற்கு வசதியும் உணவுக்கு ஏற்பாடும் செய்து தந்த சிறப்பை எம்மால் கூறாமல் இருக்க முடியாது. வண்டிக்கு நேரமாகிவிடவே, அவசரம் அவசரமாக இரவு உணவுகூட அருந்தாமல் நாங்கள் தில்லி ஸ்டேஷனை அடைந்தோம். மக்கட்பணியில் மேலோங்கி நிற்கும் ரயில்வே துறையினர் விவரம் அறிந்து எங்களுக்காக வண்டியையே மகிழ்ச்சியுடன் நிறுத்தி வைத்தனர். எல்லாம் ஜகத்குருவின் கருணைதான்.

மும்மூர்த்திகளிடமும், சகோதர நாட்டு, பாரத நாட்டுத் தெய்வங்களிடமும் யாம் வணங்கி வேண்டுவது என்னவெனில், முற்றிலும் துறந்த, பற்றற்ற — எனினும் வேதப் பற்றுக் கொண்ட, வேத மார்க்க வத்ஸலரான ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் இம் மானுட சரீரத்துடன் ஆரோக்கியமும் ஆற்றலும் நிறைந்து நீண்ட காலம் இந்த உலகத்தில் அறப் பற்றுள்ளவர்களின் நலனுக்காக வாழ வேண்டும், வாழ்ந்து வழி காட்ட வேண்டும் என்பதேயாகும்.

ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகளின் பெயர், உருவம், தண்டம், சரணபாதுகை — என்று ஒவ்வொரு பொருளும் ஞானேந்திரியங்களின் சேர்க்கையினால், நம் உள்ளத்தில் நிலைபெற்றுள்ளன. அவை எப்பொழுதுமே நம் உள்ளத்தில் நிலைபெற்றிருக்கப் பிரார்த்திப்போமாக.

# போற்றி போற்றி!

கடந்ததாய்ச் சிறக்கும் அந்தக் கடவுளை மறக்கும் வாழ்க்கை
அடர்ந்ததோர் இருட்கா டாகும்; அல்லலே வருவா யாகும்
கிடந்தது கிடக்க ஞானக் கிறுக்கதே பிடிக்க என்று
முடிந்தது யாவும் செய்ய முனைகதனை போற்றி போற்றி!

புலன்வழிச் சென்றுசென்று புரள்வதோ? பொய்ம்மைச்சேற்றை
நிலையென எண்ணிஎண்ணி நெளிவதோ? அகங்கா ரத்தின்
அலையெனப் பொங்கிப் பொங்கி அழிவதோ? துரியா தீத
மலையென இருவா என்று வாய்மலர்ந் தருள்வாய் போற்றி!



சௌந்தரா கைலாசம்

வேறுவே றென்று பேசிப் பொழுதினை விரயம் செய்யும்
தாறுமா றானபோலித் தத்துவம் தன்னை விட்டு
மாறுமாறு ஒன்று தந்த சங்கரர் மலர்த்தாள் பற்றி
ஏறுவாய் கரையென் றெம்மை ஈர்த்திடும் துரையே போற்றி!

பலகினை காட்டும் ஒற்றைப் பரம்பொருள் உண்மை சொல்லி
உலகினைத் துயிலெழுப்ப உதித்தசங் கரர் கொடுத்த
விலையினை அறியா ஞான விளக்கினை ஏந்தி மாய
வலையினில் வீழா தெம்மைக் காத்திட வந்தாய் போற்றி!

வயதினில் சிறியா ராக வாழ்ந்திடும் போதே தெய்வத்
தயவினில் பெரியா ராகத் தழைத்தசங் கரர மைத்த
நயனுடைப் பீடமொன்றின் ஞானநாய கனே! கல்விப்
பயனுடை யவனே வையப் பாதுகாவலனே போற்றி!

அன்னையார் தவத்தினாலே அவதரித் தவனே இந்தச்
சென்னை யார் காண வந்த செழுங்கருணைக் கடலே தேவே
தன்னை யார் என்று கண்ட தலைவனே! நாடி வந்திங்
குன்னை யார் கண்டா லும்நெக் குருகுவார் உண்மைதானே?

நான்என விதிவிலக்கா நைந்துநைந் துருகிப் போனேன்;
தேன்எனச் சிந்துஞ் சொல்லில் சிந்தையே குளிர லானேன்;
மான்எனத் துள்ளி ஓடும் மனமது குவியப் பெற்றேன்;
ஏன்எனக் கேட்டால் மற்றோர்க் கெவ்விதம் சொல்வேன் நானே?

மொழியதும் மனமும் மெய்யும் கடந்துறை முதல்வன் தன்னைத்
தொழுதிட நம்மை யெல்லாம் தூண்டியே பழைய பாவக்
குழியிலே வீழாவண்ணம் குறுக்கிலே வேலி கட்டும்
விழியதில் உள்ள அந்த சக்தியை விளக்கப் போமோ?

பாவடியில் மொழியை வைத்தேன் பார்புகழும் காஞ்சிப்பீடச்
சேவடியில் விழியை வைத்தேன் சிந்துகிறேன் நீரைத்தானே!
நோவடியில் பிறக்கும் ஞான நோக்குதவும் நின்முன் னாலே
ஆவடியில் கன்றாய் ஆனேன் அருட்பாலுக் கேங்கினேனே!

திகழ்வேன் நான் மேலும் மேலும் திருந்தியே நித்தம் உன்னைப்
புகழ்வேன் நான் நெஞ்சில் பக்தி பொருந்தியே துன்பம் வேரோடு
அகழ்வேன் நான் ஞானா மிர்தம் அருந்து வேன் மாயக் கன்னை
இகழ்வேன் நான் எற்றித் தள்ளி. அருளுவாய் எனக்கு நீயே!

[ஜூன் 3ந் தேதி நமது முதலமைச்சரின் பிறந்த நாள். நாற்பத்து நாலாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் அவருக்குப் பல்லாண்டு கூறுகிறோம். — ஆசிரியர்]



# சிந்தனை மின்னல்; வார்த்தைப் பின்னல்!

அண்ணாவின் வாரிசாக முதலமைச்சர் திரு மு. கருணாநிதி விளங்குவது பற்றி திரு டி. செங்கல்வராயன் அவர்கள் ஒருமுறை குறிப்பிட்டார்: ''வரிசையின் மூலம் வாரிசாக நிற்காமல் சீரிய நடவடிக்கைகள் மூலமும் வாரிசாக இருக்கிறார்.''

எதையும் மின்வெட்டும் கணத்தில் சிந்தித்துச் செயலாற்றவல்ல, அதன் மூலம் கேட்போரைக் கிறுகிறுக்கச் செய்யவல்ல திறமை அண்ணாவுக்கு இருந்தது. அந்தக் கலையிலும் அவரது வாரிசாகக் கலைஞர் மு. க. திகழ்ந்திடுவதை ஊடுருவி நோக்குவார் புரிந்து கொள்வர்.

நேருவைப் பற்றி அண்ணா ஒருமுறை குறிப்பிட்டார்: ''அவர் கட்டி முடிக்கப்பட்ட கோபுரம்; நான் கொட்டிக் கிடக்கும் செங்கல்!'' அடக்கமாகப் பேசும்போதும் அவரது இலக்கிய நயத்துடன் கூடிய நாவன்மை நம்மைக் களிப்பில் ஆழ்த்துகிறது.

ஆங்கிலத்திலும் மின்வெட்டும் நேரத்தில் சிந்தித்துச் சொற்களை அடுக்குவார் அண்ணா. சட்டப் பேரவையில் ஒரு நாள்: எதிர்க் கட்சியைச் சேர்ந்த ஒருவர் ''நீங்கள் மக்களுக்கு நல்லன செய்யவில்லை, Your days are numbered'' என்கிறார்.

உடனே அண்ணா உறுதியாக ''கனம் உறுப்பினர் கவலைப்பட வேண்டாம். My steps are measured'' என்கிறார்! மன்றமே திகைத்து — சிரித்து — களிக்கிறது!

இப்படி அண்ணாவின் வாழ்க்கை மின்னல் வேகச் சிந்தனையோட்டம் கொண்டது.

இதே போன்று கலைஞரும் வாக்குச் சாதுர்யம் பெற்றவர் என்பதற்குப் பல !நிகழ்ச்சிகள் சான்று பகர்கின்றன. இன்றைய கூட்டுறவுத் துறை அமைச்சர் சி. பா. ஆதித்தனார் அவர்களுக்கு மணி விழா சென்னை தேனாம்பேட்டை ஆபட்ஸ்பரி மாளிகையில் நடந்தபோது நிகழ்ந்த ஒரு சம்பவம்:

ஆதித்தனாரைப் பாராட்ட வந்த ஒருவர், ''நாட்டில் தலைவர்கள் இருக்கிறார்கள் கண் வலி — காது வலி — தோள் வலி என்றுள்ள தலைவர்களெல்லாம் இருக்கிறார்கள். நோயற்ற தலைவர் சி. பா. ஆதித்தனார்தான்'' என்கிறார்.

அண்ணா அவர்களுக்கு அந்த நேரத்தில் தோள் வலி ஏற்பட்டிருந்தது. அவர் சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தார். அந்தப் பிரசங்கியினுடைய பேச்சைக் கேட்டு மக்கள் கொதிப்படைந்து விட்டார்கள். அவர் வெளியே வந்தால் என்ன நடக்குமோ என்ற நிலை. கலைஞர் பேச எழுந்தார் — நிலைமையைச் சமாளிக்க!

''நண்பர் எதையோ பேச வேண்டியவர் எங்கோ போய்விட்டார். என்றாலும் அவர் பேசியதில் அண்ணா அவர்களைத் தாக்குவதாக ஏதும் இல்லை. தோள் வலி என்றால் புஜபல பராக்கிரமம் கொண்டவன் — திண் தோள் வீரன் — தோள் வலிமை மிக்கவன் என்றுதான் பொருள்....'' என்று தமது பேச்சைத் தொடங்கி

மக்களின் கொதிப்பை அடக்கியதோடு பேசியவரின் கொட்டத்தையும் அடக்கினார்.

✿ ✿ ✿

மாநகராட்சித் தேர்தல். கழகத் தோழர்களான சிலரே தலைமைக் கழகத்தினரால் அறிவிக்கப்பட்ட அதிகாரபூர்வமான வேட்பாளர்களை எதிர்த்துப் போட்டி போடுகிற கவலைக்கிடமான சூழ்நிலை. கலைஞர் அப்படிப் பட்டவர்களுக்கு அறிவுரையும் அறவுரையும் கூறி வருகிறார்.

சென்னை 12வது வட்டத்தில்—தோழர் கே. கோவிந்தசாமி கழக வேட்பாளராக அறிவிக்கப்பட்டிருந்த வட்டத்தில் அவரை எதிர்த்துக் காத்தலிங்கம் என்ற கழகத் தோழர் போட்டியிடுகிறார் என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

கோவிந்தசாமியை ஆதரித்துக் கலைஞர் அவர்கள் தேர்தல் பிரசாரம் செய்ய வந்தார். அன்று நடந்த கூட்டத்தில் கலைஞர் பேசினார்:

''தோழர் கோவிந்தசாமி கழகத்தின் அதிகாரபூர்வமான வேட்பாளராக அறிவிக்கப்பட்டிருக்கிறார். இந்த நிலையில் கழகத்தின் கட்டுப்பாட்டை மீறி — அண்ணாவின் மனம் புண்படுகிற விதத்தில் கழகத் தோழர் காத்தலிங்கம் போட்டியிடுவதாக அறிகிறேன். இந்தத் தேர்தலோடு தமது எதிர்காலமே முடிந்து விட்டதாகத் தோழர் காத்தலிங்கம் கருதிவிடக் கூடாது. பெயரே 'காத்தலிங்கம்' — அவர் காத்திருக்க வேண்டும்; ' கழகத்தின் ஆணையை ஏற்றிருக்க வேண்டும்'' என்றார். கலைஞரின் மின்னல் வேக சிந்தனை கூட்டத்தில் கலகலப்பை உண்டாக்கியது!

✿ ✿ ✿

திரு ஏ. வி. எம். செட்டியார் அவர்களின் சரஸ்வதி ஸ்டோர்ஸ் அண்ணாவின் பேச்சையும் கலைஞர் கருணாநிதியின் 'அண்ணாவுக்குக் கவிதாஞ்சலி'யையும் இசைத்தட்டுகளாக்கி வெளியிட்டது.

விழாவில் பங்கு கொண்டு பேசிய கலைஞர், அண்ணா அவர்களின் பேச்சைப் பதிவு செய்துள்ள தட்டை ஏன் இசைத்தட்டு என்று அழைக்கிறார்கள் என்பதற்கு விளக்கம் அளித்தார்:

''இசைத்தட்டு என்றாலே பாடலைப் பதிவு செய்து வழங்குவது என்றுதான் கேள்விப் பட்டிருக்கிறோம். பேச்சு எப்படி இசையாகும் என்று சிலர் கேட்கலாம்.

'இசை' என்பதற்குப் பொருள் 'பாடல்' மட்டுமல்ல: புகழ் என்றும் பொருளுண்டு. அந்த வகையில் அண்ணா அவர்களின் புகழ் பரப்பும் தட்டாக இது இருக்கிறது என்பதால் பேச்சுள்ள தட்டானாலும் இதை அண்ணா' இசைத்தட்டு என்றே சொல்லலாம்-பொருத்தம்தான்!'' என்றார்.

✿ ✿ ✿

மதுரையில் யாதவர் கல்லூரிக்கு அடிக்கல் நாட்டு விழா 13—4—69 அன்று நடைபெற்றது. கலைஞர் பேசினார்:

''வேலூர் நண்பர் வி. கே. குப்புசாமி பேசும்போது யாதவர் என்றாலே மந்திரி என்றுதான் பொருள்படும் என்று குறிப்பிட்டார். ஆக இந்தப் பதினொரு யாதவர்களை (மந்திரிகளை)யும் கொண்ட மந்திரி சபையை ஆதரிக்க வேண்டியது பல லட்சக் கணக்கான யாதவர்களுடைய பொறுப்பும் கடமையுமாகும் என்று உரிமையோடு கூறிக் கொள்கிறேன்.

தி. மு. கழகத்தில் இருக்கும் நாங்கள் அனைவருமே யாதவர்கள்தான்:

பிறமொழி ஆதிக்கத்துக்குப் பணி**யாதவர்கள்** — உழைப்பதற்குச் சலியாத**வர்கள்** — வஞ்சகம் **தெரியாதவர்கள்**—சூழ்ச்சி **அறியாதவர்கள்** — யார் எதிர்த்தும் அழி**யாதவர்கள்**'' என்றார். சிரிப்பலைகள் பொங்கிப் பிரவகித்தது.

இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள் அவரை ''மின்னல் வேகச் சிந்தனையாளர்'' என்று பறைசாற்றும்.

— **கவிஞர் மணிமொழி**

## குமாரவயலூர் கும்பாபிஷேக விழா

திருச்சிராப்பள்ளி குமாரவயலூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயிலில் கல்யாண மண்டபம், ஓய்வு விடுதி, பொய்யாக் கணபதி முன் மண்டபம், நவக்கிரஹ மண்டபம் இவை புதிதாகக் கட்டப்பட்டு, கல்யாண மண்டபத்துக்கு முன் ஒரு புதிய கோபுரம் கட்டி, பழைய கோபுரங்களைப் பழுதுபார்த்துத் திருப்பணி வேலைகள் பெருமளவில் நடைபெற்றுள்ளன.

அஷ்டபந்தன மகா கும்பாபிஷேக விழா 19—6—69 வியாழக்கிழமை காலை ஒன்பது மணிக்கு மிகச் சிறப்பாக நிகழவிருக்கிறது.

கும்பாபிஷேக விழாவை யொட்டி 11-6-69 முதல் 16-6-69 வரை திருச்சி தில்லைநகர் மக்கள் மன்றத்தில் தினசரி மாலை ஏழு மணிக்குத் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களின் ''கந்தன் கருணை'' சொற்பொழிவு நிகழும்.

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள் தலைமையில் திருப்பணிக் கமிட்டியார் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வருகின்றனர்.

திருப்பணிக்கும் கும்பாபிஷேகத்துக்கும் நன்கொடை அனுப்ப விரும்புவோர், **தலைவர், குமாரவயலூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் திருப்பணிக் கமிட்டி, 1, பெரிய சௌராஷ்டிரத் தெரு, உறையூர், திருச்சி - 3,** என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கலாம்.



"எவரெவர் எந்தெந்த மூர்த்தியை ஈடுபாட்டுடன் வழிபட விரும்பினாலும்,
அவரவர்க்கு அந்தந்த மூர்த்தியிடமே அசையாத ஈடுபாட்டை அருள்கிறேன்"

(ஸ்ரீமத் பகவத் கீதை)

# சங்கரர்-ஷண்மத மகாநாடு

## (ஜூன் 1, 1969 — ஜூன் 9, 1969)

ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாதர்களின் மகத்தான பக்திப் பணியை உலகினர் உள்ளபடி உணர வேண்டும் என்று ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் திருஉள்ளம் கொண்டிருப்பதற்கு இணங்க "சங்கரர் — ஷண்மத மகாநாடு" நடைபெறுகிறது. சென்னை, வீனஸ் காலனி, ஆஸ்திக சமாஜப் பந்தலில் ஜூன் முதல் தேதியிலிருந்து ஜூன் ஒன்பதாம் தேதி வரையில் மகாநாடு நடைபெறுகிறது.

ஜூன் முதல் தேதி மகாநாடு ஆரம்பம். இரண்டாம் தேதி முதல் ஏழாந் தேதி முடிய, ஆறு தினங்களிலும் மாலை வேளைகளில் முறையே காணபத்தியம், கௌமாரம், வைஷ்ணவம், ஸௌரம், சாக்தம், சைவம் ஆகியன குறித்துப் பாரதத்தின் பேரறிஞர்களுடைய பிரசங்கங்களும் பிரவசனங்களும் நடைபெறும். ஸ்ரீ ராமனும், ஸ்ரீ கிருஷ்ணனும் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரங்கள் என்ற முறையில் வைஷ்ணவத்தில் அடக்கமே ஆயினும், இன்று ஸ்ரீ ராமனும் ஸ்ரீ கிருஷ்ணனும் தேசமெங்கிலும் வழிபாட்டுக்குரியவர்களாக இருப்பதால், ஷண்மதங்கள் தவிர, ஜூன் எட்டாந் தேதியன்று ஸ்ரீ ராமனைக் குறித்தும், ஜூன் ஒன்பதாந் தேதியன்று ஸ்ரீ கிருஷ்ணனைக் குறித்தும் சான்றோர்கள் பேசுகின்றனர்.

### ஜூன் 1: தொடக்க விழா

ஜூன் முதல் தேதி ஞாயிற்றுக்கிழமை சூரியோதய சமயத்தில் ஷண்மத தெய்வங்கள், ஸ்ரீ பகவத்பாதர்கள், ஸ்ரீ காமகோடி பெரியவர்கள் — ஆகியவர்களின் திவ்விய சித்திரங்கள் ஸ்ரீ கபாலீசுவர ஆலயத்திலிருந்து வீனஸ் காலனிக்கு அலங்கார பவனி வரும்.

அதன்பின் காலை 9 மணிக்குப் பாரதத்தின் இடைக்கால ராஷ்டிரபதி டாக்டர் வி. வி. கிரி அவர்கள், மகாநாட்டைத் தொடக்கி வைக்கிறார்.

முன்பு ஸுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதியாக இருந்தவரும், தற்போது பம்பாய் சர்வகலாசாலையில் உப அத்யக்ஷகராக உள்ளவருமான டாக்டர் பி. பி. கஜேந்திர கட்கர் அவர்கள் தொடக்க விழாவுக்குத் தலைமை வகிக்கிறார். அன்று பிரம்ம ஸ்ரீ மண்டலீக வேங்கட சாஸ்திரி, அக்னிஹோத்திரம் ராமாநுஜ தாதாச்சாரியர், டாக்டர் வெ. ராகவன், டாக்டர் டி. எம். பி. மகாதேவன், டாக்டர் பி. நாகராஜராவ் ஆகியவர்கள் சமயங்களின் ஐக்கியத்தைப் பற்றிப் பேசுவார்கள். கல்கத்தா ஹைகோர்ட்டில் நீதிபதியாக இருக்கும் ஸ்ரீ பி. பி. முகர்ஜி சமய சமரசம் பற்றி ஆங்கிலத்திலும், ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார் தமிழிலும் சிறப்புரை நிகழ்த்துவர்.

அன்றிரவு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ஷண்மத தெய்வங்களைப் பற்றி ஸ்ரீ பகவத்பாதர்கள் அருளியுள்ள சுலோகங்களோடு, மற்ற வாக்கேயகாரர்களின் தெய்விகக் கிருதிகளைக் கானம் செய்வார்.

மகாநாட்டு ஆரம்ப தினக் கொண்டாட்டம் ஜகத்குரு ஸ்ரீ சகடபுரம் சங்கராசாரிய ஸ்வாமிகளின் சந்நிதானத்தில் நடைபெறும்.

## ஜூன் 2 — காணபத்தியம் : விநாயகர் வழிபாடு

புனாவிலுள்ள பிரஸித்த கணபதி பீடமாகிய ஸ்ரீ யோகீந்திர மடத்துச் சர்வாதிகாரிகளின் முன்னிலையில் நடைபெறுகிறது.

புனா சர்வகலாசாலை உப அத்யக்ஷகராக இருந்தவரும், மகா பண்டிதருமான மகாமகோபாத்தியாய தத்தோவாமன போத்தார் அவர்கள் இத்தினத்துக்குத் தலைமை வகிக்கிறார்கள்.

மகாராஷ்டிரம்தான் விநாயகர் வழிபாட்டுக்கு முக்கியமான பிரதேசம். இதற்கேற்ப, அன்று ஸ்ரீ எஸ். ஆர். டிகேகர் என்ற மகாராஷ்டிர அறிஞர், ''கணபதி ஆராதனை'' பற்றி ஆங்கிலத்தில் சிறப்புரை நிகழ்த்துகிறார்.

தமிழ் நாட்டில் விநாயக வழிபாடு பற்றிக் கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி.வா. ஜகந்நாதன் அவர்கள் சிறப்புரையாற்றுவார்.

ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம் கணநாயகனைப் பற்றிக் கவிதை மொழிவார்.

ஆதிசங்கரர் இயற்றிய விநாயகத் துதிகளைப் பற்றி ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா பேசுகிறார். ஸ்ரீ என். முருகேச முதலியாரும் அன்று உரையாற்றுகிறார்.

அன்றிரவு பிரம்மஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் ''ஸ்ரீ கணபதி மகிமை'' பற்றிக் கதாகாலக்ஷேபம் நிகழ்த்துவார்.

## ஜூன் 3 — கௌமாரம் : முருகன் வழிபாடு

செவ்வேள் உகந்த செவ்வாயன்று, திருப்போரூர் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான ஸ்வாமிகள் முன்னிலையில் இம்மகாநாடு நடைபெறும்.

சிறந்த முருக பக்தரும், தமிழறிஞருமான ஸர் பி. டி. ராஜன் அவர்கள் இத்தினத்துக்குத் தலைமை தாங்குகிறார்கள்.

அன்று வங்காளத்தைச் சேர்ந்த பேரறிஞரும், பாரத தேசியப் பேராசிரியர்களில் ஒருவரும், தமிழ் மொழியிடமும் முருகனிடமும் ஆழ்ந்த பற்றுக் கொண்டவருமான டாக்டர் ஸுநீதி குமார் சாட்டர்ஜி ஆங்கிலத்திலும், அகில இந்திய ரேடியோ தயாரிப்பாளர் ஸ்ரீ மீ. ப. சோமசுந்தரம் (சோமு) அவர்கள் தமிழிலும் முருகக் கடவுளைப் பற்றிச் சிறப்புரை நிகழ்த்துகிறார்கள்.

ஆதிசங்கரரது முருகத் தோத்திரங்கள் குறித்துப் பழுவூர் ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் பேசுகிறார். வித்வான் சுந்தரலிங்கம், ஸ்ரீ ந. முருகவேள், ஸ்ரீமதி ஜயகுமாரி பாஸ்கரன் ஆகியோர் உரையாற்றுகிறார்கள்.

இரவு ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் ''குமார சம்பவம்'' கதா காலக்ஷேபம் செய்வார்.

## ஜூன் 4 — வைஷ்ணவம் : திருமால் வழிபாடு

ஸ்ரீமந் நாராயணனுக்கு உகந்த புதன்கிழமை மகாநாடு பிருந்தாவனத்தில் உள்ள ஸ்ரீ புருஷோத்தம கோஸ்வாமிஜி என்ற பரம பாகவத சிகாமணியின் முன்னிலையில் நடக்கிறது.

முன்னாள் பிஹார் கவர்னர் ஸ்ரீ எம். அனந்தசயனம் அய்யங்கார் அவர்கள் அக்கிராசனம் வகிக்கிறார்கள்.

பட்னாவைச் சேர்ந்த பேராசிரியை ஸ்ரீமதி ஸுவீரா ஜெயஸ்வால் அம்மையார் அன்று வைஷ்ணவம் பற்றி ஆங்கிலத்தில் சிறப்புரை நிகழ்த்துவார்.

புகழ்பெற்ற தமிழறிஞர் ஸ்ரீ பி. ஸ்ரீ. ஆசாரியா அவர்கள் தமிழில் வைஷ்ணவம் குறித்துச் சிறப்புரை வழங்குவார். டாக்டர் பிரபாகர ஆப்தே 'பாஞ்சரத்திரம்' குறித்தும், ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்கார பட்டாசாரியார் 'வைகாநஸம்' குறித்தும் பேசுவர்.

ஆதிசங்கரரின் விஷ்ணுபரமான ஸ்தோத்திரங்களைப் பற்றிப் பேராசிரியர் ஆர். ராமநுஜாச்சாரியார் பேசுகிறார். உத்தமூர் ஸ்ரீ வீரராகவாச்சாரியார், மகா வித்வான் ம. வீ. வேணுகோபால பிள்ளை ஆகியோர் உரை ஆற்றுவர்.

அன்றிரவு ஸ்ரீமான் எம்பார் விஜயராகவாச்சாரியார் அவர்கள் 'ஸ்ரீ மகா விஷ்ணு மகிமை' பற்றிக் கதாகாலக்ஷேபம் நிகழ்த்துவார்.

## ஜூன் 5 — ஸௌரம் : சூரிய வழிபாடு

மசூலிப் பட்டணத்தில் உள்ள ஸ்ரீ காயத்ரி பீடத்தின் அதிபதிகளும், தபஸ்விகளுமான ஸ்ரீ வித்யா சங்கர பாரதி ஸ்வாமிகளின் முன்னிலையில் இந்த விழா நடக்கிறது.

தில்லியின் லெப்டினன்ட் கவர்னரும், பேரறிஞருமான டாக்டர் ஆதித்ய நாத் ஜா அவர்கள் ''ஸௌர''த்துக்கு அக்கிராஸனம் வகிக்கிறார்கள்.

சூரிய பகவான் வேதத்தில் எப்படி விளக்கப்படுகிறார் என்பது பற்றி ஸ்ரீ அக்னிஹோத்திரம் ராமாநுஜ தாதாசாரியார் உரை நிகழ்த்துவார். பேராசிரியர் ஆர். என். சம்பத் 'சம்ஸ்கிருத இலக்கியத்தில் சூரியன் குறித்துப் பேசுவார். சூரிய வழிபாடு பற்றி ஆங்கிலத்தில் பேராசிரியர் டாக்டர் வெ. ராகவன் அவர்களும், தமிழில் பிரபல எழுத்தாளர் ஸ்ரீ கு. அழகிரிஸ்வாமி அவர்களும் சிறப்புரை நிகழ்த்துவர். ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன், ஸ்ரீ கொத்த மங்கலம் சுப்பு, ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம் ஆகியோர் கதிரவன் குறித்துக் கவிதைகள் வழங்குவர்.

அன்றிரவு ஸ்ரீ துரப்புல் லக்ஷ்மி நரஸிம்மன் அவர்கள் சூரிய பகவானைப் பற்றிப் பிரவசனம் செய்வார்.

## ஜூன் 6 — சாக்தம் : தேவி வழிபாடு

ஸ்ரீ பராசக்திக்குரிய வெள்ளிக்கிழமையன்று பரம சாக்தர்களும், தபஸ்விகளுமாகிய புதுக்கோட்டை ஸ்ரீ சாந்தாநந்த ஸ்வாமிகளின் முன்னிலையில் சாக்த விழா நடக்கிறது.

காசியில் உள்ள ஸம்ஸ்கிருத ஸர்வகலாசாலையின் உப அத்யக்ஷகராகிய பண்டிதோத்தமர் டாக்டர் கௌரிநாத சாஸ்திரி அவர்கள் தலைமை வகிக்கிறார்கள்.

பஞ்சாப் சர்வகலாசாலையைச் சேர்ந்த பேரறிஞர் டாக்டர் டி. என். சுக்லா அவர்கள் ஒரு விசேஷ உரை நிகழ்த்துகிறார்.

கல்கத்தாவில் உள்ள ரவீந்த்ர பாரதி ஸர்வகலாசாலையின் உப அத்யக்ஷியான ஸ்ரீமதி ரோமா சௌத்திரி அம்மையார் 'சாக்தம்' பற்றி ஆங்கிலத்தில் சிறப்புரை நிகழ்த்துகிறார். பாண்டிச்சேரி உயர்நீதிபதி ஸ்ரீ எஸ். மகராஜன் அவர்கள் தமிழில் சக்தி வழிபாடு பற்றிய சிறப்புரை வழங்குவார்.

ஆதி சங்கரருடைய தேவி ஸ்துதிகள் குறித்து தர்மக்ஞ ஸ்ரீ ராமநாத தீக்ஷிதர் உரை நிகழ்த்துகிறார். பிரம்மஸ்ரீ ஸி. வி. ஸ்வாமி சாஸ்திரிகளும், திருசங்கோய்மலை அத்வயாநந்த ஸ்வாமிகளும் உரை ஆற்றுவர்.

அன்றிரவு ஸ்ரீமதி சிவானந்த விஜயலக்ஷ்மி ''ஸ்ரீ ராஜ ராஜேசுவரி பட்டாபிஷேகம்'' பற்றிப் பிரவசனம் நிகழ்த்துகிறார்.

## ஜூன் 7 — சைவம் : சிவ வழிபாடு

ஸ்ரீலஸ்ரீ மதுரை ஸ்ரீ திருஞான சம்பந்த மடாதிபதிகளின் முன்னிலையில் நடக்கிறது.

பாண்டிச்சேரி லெப்டினன்ட் கவர்னர் ஸ்ரீ ஜட்டி அவர்கள் அக்ராஸனம் வகிக்கிறார்கள்.

திருமுருக கிருபானந்தவாரியார், திருவாசகமணி கு. மா. பாலசுப்பிரமணியம், மகாவித்வான் ச. தண்டபாணி தேசிகர், பிரம்மஸ்ரீ ஜகதீச்வர சாஸ்திரிகள் முதலிய மெய்யடியார்கள் உரை நிகழ்த்துகிறார்கள். யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி ரத்ன நவரத்னம் என்ற பேரறிஞர் சைவம் பற்றி ஆங்கிலத்திலும், காஞ்சிபுரம் வஜ்ரவேல் முதலியார் அவர்கள் தமிழிலும் சிறப்புரை நிகழ்த்துகிறார்கள்.

ஆதி சங்கரரது சிவபரமான துதிகளைப் பற்றிப் பேராசிரியர் டி. எம். பி. மகாதேவன் சொற்பொழிவாற்றுகிறார்.

அன்றிரவு பிரம்மஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் 'சிவ மகிமை' பற்றிப் பிரவசனம் நிகழ்த்துகிறார்கள்.

இதோடு ஷண்மதங்களைப் பற்றிய மகாநாடு பூர்த்தியாகிறது.

## ஜூன் 8 காலை

**ம**று நாள் ஜூன் 8ந் தேதி, ஞாயிறு காலையில், ஷண்மதங்களைப் பற்றிய மகாநாட்டில் வெளியான கருத்துக்களை எல்லாம் தொகுத்து, அவற்றின் ஒற்றுமை அம்சங்களை சென்னை ஸர்வகலாசாலைத் தத்துவப் பேராசிரியர் டாக்டர் டி. எம். பி. மகாதேவன் எடுத்துரைப்பார்.

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பரமாசார்யர்களின் பதிவு செய்யப்பட்ட அருளுரை ஒலி பரப்பப்படும்.**

அதன்பின் ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கப்படும்.

## ஜூன் 8 — மாலை ஸ்ரீராமன்

**ம**காராஷ்டிரத்தில் ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள் ஸ்தாபித்த ஸஜ்ஜன்காட் மடத்தின் உபதலைவர் ஸ்ரீ அண்ணுபுவா ராமதாஸி ஸ்ரீ ராமனைக் குறித்த மகாநாட்டுக்குப் பிரசன்னமாகிறார்கள்.

அன்றைய தினம் காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் அவர்கள் அக்ராஸனம் வகிக்கிறார்கள். ஸ்ரீ சா. கணேசன், டாக்டர் வெ. ராகவன், பேராசிரியர் எஸ். கே. நாயர் ஆகியோர் பல்வேறு இராமாயணங்கள் பற்றிப் பேசுவர். ஸ்ரீமதி சரோஜினி வரதப்பனும், இசைப் பேராசிரியர் ஸ்ரீ எஸ். ராமநாதனும் உரை நிகழ்த்துவர்.

சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி ஸ்ரீ என். கிருஷ்ணஸ்வாமி ரெட்டியார் ஸ்ரீ ராமனைப் பற்றித் தமிழிலும், பேராசிரியர் ஸ்ரீ பி. நாகராஜ ராவ் ஆங்கிலத்திலும் சிறப்புரைகள் நிகழ்த்துவர்.

ஆதிசங்கரருடைய ஸ்ரீ ராமபுஜங்கம் குறித்துப் பேராசிரியர் ஸ்ரீ வி. ராஜகோபாலன் பேசுகிறார்.

அன்றிரவு ஸ்ரீ கோமல் சேஷாத்ரி அய்யங்கார் ஸ்ரீராம மஹிமை பற்றி உபந்யாஸம் புரிவார்.

## ஜூன் 9 — ஸ்ரீ கிருஷ்ணன்

**ம**காநாட்டின் பூர்த்தி தினமான ஜூன் 9ந் தேதி பூர்ணவதாரமான ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப் பற்றிய மகாநாடு உடுப்பியிலுள்ள பரமபக்த சிகாமணியும், துவைத சம்பிரதாய ஆசாரியருமான பண்டரிகரே மடாதிபதிகளின் முன்னிலையில் நடைபெறுகிறது.

குருவாயூரில் நாராயணாலயம் நடத்தி வரும் பரம பக்தர் ஸ்ரீ அஞ்சம் மாதவன் நம்பூதிரி அக்ராஸனம் வகிக்கிறார்.

மகாநாட்டின் பூர்த்தி தினமான அன்று மற்றொரு மகத்தான விசேஷம்: ஷண்மதங்களைப் பற்றியும், ஸ்ரீமத் பகவத்பாதர்களைக் குறித்தும், ஸ்ரீ காமகோடி பரமாசாரியாளைக் குறித்தும் உள்நாட்டு — வெளிநாட்டுப் பேரறிஞர்களின் கட்டுரைகளும், ஏராளமான வர்ணச் சித்திரங்களும் கொண்ட ஒரு மலர் இம்மகாநாட்டை ஒட்டித் தயாராகிறது. **இந்தச் சிறப்பு மலரை பூஜ்ய ஸ்ரீ ராஜாஜி அவர்கள் மகாநாட்டின் கடைசி நாளில் வெளியிடுகிறார்கள்.** இதன் பிரதிகள் உலகம் முழுவதிலும் உள்ள முக்கியமான சர்வகலாசாலைகளில் உள்ள தத்துவப் பேராசிரியர்கள், ஸம்ஸ்கிருத ஆராய்ச்சியாளர்கள், பாரத கலாசார ஆராய்ச்சியாளர்கள் ஆகியோருக்கு அன்பளிப்பாக அனுப்பப்படுகிறது.

ஸ்ரீ ''அண்ணா'' சுப்பிரமணிய அய்யர், ஸ்ரீ டி. ராமலிங்க ரெட்டியார், ஸ்ரீ சுகப்பிரம்மம் ராமஸ்வாமி சாஸ்திரிகள், ஸ்ரீமதி மோனிகாவர்மா, ஸ்ரீமதி பிரேமா பாண்டுரங்கம் ஆகியோர் பூர்த்தி நாளன்று உரை நிகழ்த்துகிறார்கள்.

வங்காளத்தில் உள்ள பர்த்வான் ஸர்வகலாசாலைப் பேராசிரியர் டாக்டர் கோவிந்த கோபால் முகோபாத்தியாயர், ஸ்ரீ கிருஷ்ணனைப் பற்றி ஆங்கிலத்தில் சிறப்புரை நிகழ்த்துவார்.

மதுரை சர்வகலாசாலை உப அத்யக்ஷகர் டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் கண்ணனைப் பற்றித் தமிழில் சிறப்புரை வழங்குவார்.

ஆதி சங்கரருடைய கிருஷ்ணன் துதிகள் பற்றி உயர்கல்வித் துணை இயக்குநர் ஸ்ரீ பி. திருஞான சம்பந்தம் உரையாற்றுகிறார்.

ஜூன் 9ந் தேதி இரவு பாகவதோத்தமரான புதுக்கோட்டை ஸ்ரீ கோபால கிருஷ்ண பாகவதரின் திவ்விய நாம பஜனையுடன் மகாநாடு நிறைவுபெறுகிறது.

---


சங்கார் - ஷண்மத மகாநாடு அலுவலகம்

'கல்கி' பில்டிங்ஸ், சேத்துப்பட்டு, சென்னை-31 போன் : 61034




# பான்

## இன்ஸ்டன்ட் காபியின் உண்மையை நன்கறியுங்கள்

- ★ பான் அசல் காபி மணமும் சுவையும் கொண்டது.
- ★ பான் நூற்றுக்கு நூறு சுத்தமான கூடுதல் ஸத்துள்ள காபி. 50 கிராம் டின் ஒன்றுக்கு 30 கப் காபி— கப் ஒன்றுக்கு 10 பைசே தான்!
- ★ பான் இந்தியாவில் மிக நவீன இன்ஸ்டன்ட் காபி ஃபாக்டரியில் தயாரிக்கப்படுகிறது.

இதனால்தான் புதிதாகக் காபி அருந்து கிறவர்கள் பெரிதும் பான் விரும்பு கிறார்கள். நீங்களே கண்டு கொள்ளுங்கள். பானின் முழு மணமுடன் சுவை. பொழியும் நல்ல தன்மை. இன்றே இப்பொழுதே அருந்திப் பாருங்கள்!

பான் சுவையில் சிறந்தது!

ப்ரூக் பாண்டால் மிக்க கவனத்துடன் தயாரிக்கப்பட்டது

Bensons 9758/8 TAM

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

அத்தியாயம் இருபத்தெட்டு

## இராஜபாட்டை

மதங்கொண்ட யானை, ஆழ்வார்க்கடியானுடைய கைத் தடிக்கும் அவனுடைய அதட்டலுக்கும் பயந்து நின்று விடுமா, என்ன? தும்பிக்கையை எடுப்பாகத் தூக்கிக் கொண்டு, வழியிலிருந்த செடி கொடிகளைச் சிதைத்துக்கொண்டு, மேலே மேலே வந்து கொண்டிருந்தது.

அடுத்த விநாடி ஆழ்வார்க்கடியானுடைய கதி அதோ கதிதான் என்பதில் இனிச் சந்தேகமில்லை!

துணைக்கு வந்த வீரர்கள் இருவரும் நின்ற இடத்தில் நின்றபடியே 'ஹாய்' 'ஹாய்' என்று கூச்சலிட்டார்கள்.

வந்தியத்தேவன் தன் கையிலிருந்து நழுவித் தரையில் விழுந்த வேலைத் திரும்ப எடுத்துக் கொண்டு கடைசியாக ஒரு முயற்சி செய்துபார்க்கஎண்ணினான்.

அதே சமயத்தில் ஆழ்வார்க்கடியான் தன் கையிலிருந்த தடியை வீசி மத யானை மீது எறிந்தான்.

மறு கணம் ஆழ்வார்க்கடியானைக் காணவில்லை!

அவனுடைய தலைப்பாகை காற்றில் பறந்து சென்று ஒரு மரக் கிளையில் விழுந்தது.

ஆழ்வார்க்கடியான் என்ன ஆகியிருப்பான் என்று சிந்திப்பதற்குள்ளே அதைக் காட்டிலும் முக்கியமான சம்பவம் ஒன்று நிகழ்ந்து விட்டது.

அவன் மறைந்த இடத்துக்கருகில் சென்ற யானை திடீரென்று மண்டியிட்டதுபோல் முன் கால்களை மடக்கிக் கொண்டு முன்புறமாகச் சாய்ந்தது.

அந்த வனப் பிரதேசம் முழுவதிலும் எதிரொலி செய்த ஒரு பயங்கரமான பிளிறல் சத்தம் கேட்டது.

மறுகணத்தில் மலை போன்ற அந்த மத யானையின் உருவம் முழுதும் மறைந்து விட்டது.

யானை அந்தப் படுபாதாளத்தில் உருண்டு உருண்டு விழுந்த போது சரிந்து விழுந்த பாறைகளின் தூசிப் படலம் மேலே எழுந்து பரவியது.

என்ன நடந்தது என்பதைச் சிந்தித்துத் தெரிந்து கொள்வதற்கு வந்தியத்தேவனுக்குச் சிறிது நேரம் ஆயிற்று.

ஆழ்வார்க்கடியானுக்குப் பின்னால் பெரும் பள்ளம் இருந்தபடியால் அவன் தடியை வீசி எறிந்த வேகத்தில் பின்புறம் சாய்ந்து விழுந்து விட்டான்.

அவனை நோக்கிச் சென்ற மதங்கொண்ட யானையும் முன்னங் கால் இரண்டையும் பள்ளத்தில் வைத்து விட்டது. பிறகு சமாளிக்கப் பார்த்தும் முடியவில்லை. அதனுடைய குன்றொத்த உடலின் பெருங் கனமே அதற்குச் சத்துருவாகி அந்தப் பள்ளத்தில் கொண்டு தள்ளி விட்டது!

மத யானைக்கும் மத யானையை யொத்த ஆழ்வார்க்கடியானுக்கும் ஒரே நேரத்தில் ஒரேவிதமான மரணம் சம்பவித்து விட்டது!

இதை வந்தியத்தேவனுடைய உள்ளம் உணர்ந்ததும் அவனுடைய உடம்பு சிலிர்த்தது.

அவனுடைய இதயத்தில் பெரும் வேதனை உண்டாயிற்று.

அந்த ஸ்ரீ வைஷ்ணவன்மீது வந்தியத்தேவனுக்கு முதலில் ஏற்பட்டிருந்த சந்தேகங்களெல்லாம் மறைந்து பிரயாணத்தின் போது அவன் பேரில் ஒருவித வாஞ்சையே ஏற்பட்டிருந்தது.

அப்படிப்பட்டவனுக்கு இத்தகைய கதியா நேர வேணும்?

அவனுடைய உதவியும் வழித் துணையும் இல்லாமல் இனித் தான் ஏற்றுக்

கொண்டு வந்த காரியத்தைத் தானாகவே செய்து முடிக்க வேணுமே என்ற கவலையும் தோன்றியது.

வைஷ்ணவனும் யானையும் பள்ளத்தில் விழுந்து மறைந்த இடத்துக்கு அருகில் வந்தியத்தேவன் வந்து நின்று கீழே உற்றுப் பார்த்தான்.

முதலில் ஒரே புழுதிப் படலமாக இருந்தது. ஒன்றுமே புலப்படவில்லை.

கொஞ்சம் கொஞ்சமாகப் புழுதி அடங்கி, யானை சென்ற வழியில் செடி கொடிகளும் பாறைகளும் ஹதமாகி விழுந்திருப்பது தெரிந்தது.

''என்ன, தம்பி! சும்மா வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறாய்! ஒரு கை கொடுக்கக் கூடாதா!'' என்ற குரலைக் கேட்டதும் வந்தியத்தேவனுக்கு ஒரு தரம் தூக்கிவாரிப் போட்டது.



அதிசயத்தினால் தள்ளாடி விழாமல் குரல் வந்த இடத்தை நோக்கினான்.

யானை விழுந்த வழியை யொட்டினாற் போல் செங்குத்தான பாறையோரத்தில் ஒரு மரத்தின் ஆணி வேரைப் பிடித்துக் கொண்டு ஆழ்வார்க்கடியான் தொங்கிக் கொண்டிருந்தான்.

வந்தியத்தேவனுடைய குதூகலத்துக்குக் கேட்க வேணுமா ? உடனே வேடிக்கைப் பேச்சும் வந்து விட்டது.

''ஓஹோஹோ ! வைஷ்ணவரே ! கஜேந்திரனுக்கு மட்டும் மோட்சத்தை அளித்துவிட்டு நீர் திரிசங்கு சொர்க்கத்தில் தங்கி விட்டீரே ?'' என்று சொல்லிக் கொண்டே, வீரர்களைக் கைதட்டி அழைத்தான்.

தன் அரையில் சுற்றியிருந்த துணிச் சுருளை அவிழ்த்து எடுத்து ஒரு முனையை இரு வீரர்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளச் செய்தான்.

இன்னொரு முனையைக் கீழே விட்டதும் ஆழ்வார்க்கடியான் மரத்தின் வேரை விட்டு விட்டுத் துணிச் சுருளைப் பிடித்துக் கொண்டான்.

மூன்று பேருமாகப் பிடித்து இழுத்து உன்பாடு என்பாடு என்று அந்த வைஷ்ணவனை மெதுவாக மேலே கொண்டு வந்து சேர்த்தார்கள்.

சிறிது நேரம் வரையில் ஆழ்வார்க்கடியான் நெடிய பெருமூச்சு விட்டுக் கொண்டு பிரக்ஞையற்றவன் போலப் படுத்துக் கிடந்தான்.

மற்றவர்கள் அவனைச் சூழ்ந்து நின்று ஆசுவாசப்படுத்தினார்கள்.

சட்டென்று எழுந்து உட்கார்ந்து, ''கிளம்புங்கள்! நன்றாய் இருட்டுவதற்குள் இராஜபாட்டைக்குப் போய்ச் சேர்ந்துவிட வேண்டும். என் தலைக் குட்டை எங்கே? தடி எங்கே?'' என்று கேட்டான்.

''ஒன்றும் அவசரமில்லை. நீர் இன்னும் சிறிது நேரம் ஆசுவாசப்படுத்திக் கொள்ளும். பிறகு நாம் புறப்படலாம்'' என்று சொன்னான் வந்தியத்தேவன்.

அப்போது ஒரு நரி ஊளையிடும் சத்தம் கேட்டது.

இன்னொரு பக்கத்தில் இன்னொரு நரி தன் இனிய கீதத்தை ஆரம்பித்தது.

நூறு இருநூறு நரிகள் கோஷ்டி கானம் இசைத்தன.

மேட்டுப் பிரதேசமாயிருந்த காட்டிலிருந்து கீழே பள்ளத்தை நோக்கிப் பல இடங்களில் சலசலப்புப் பிரயாணங்கள் ஏற்பட்டன.

புதர்களில் மறைந்து செல்லும் சிறுத்தைகளே அச்சலசலப்புகளுக்குக் காரணம் என்று சொல்லித் தெரிய வேண்டிய அவசியமிருக்கவில்லை.

பள்ளத்துக்கு மேலே கழுகுகளும் பருந்துகளும் வட்டமிடத் தொடங்கின.

''யானையின் மரணம் என்பது சாதாரண விஷயமல்ல. சுற்றுப் பக்கம் வெகு தூரத்திலிருந்தெல்லாம் ஊன் தின்னும் மிருகங்களும் பட்சிகளும் சற்று நேரத்துக்கெல்லாம் கஜேந்திரனுடைய உடலைப் பட்சிப்பதற்காக வந்து விடும். நாமும் அவற்றுக்குப் பட்சணமாகி விடுவோம். புறப்படுங்கள் உடனே!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

அவன் கூறியதை வந்தியத்தேவன் இப்போது மறுத்துப் பேசவில்லை.

நால்வரும் காட்டு வழியில் எவ்வளவு துரிதமாகப் போக முடியுமோ அவ்வளவு துரிதமாகச் சென்றார்கள்.

அஸ்தமிக்கும் சமயத்துக்கு இராஜ பாட்டையை அடைந்தார்கள்.

இராஜ பாட்டையில் வருவோரும் போவோரும் வண்டிகளும் வாகனங்களுமாக ஒரே கலகலப்பாக இருந்தது.

யானைகளின் மீது சர்வ சாதாரணமாக ஏறி வருகிறவர்களைப் பார்த்து வந்தியத்தேவன் வியப்புற்றான். ''இம் மாதிரி மிருகம் ஒன்றுதானா காட்டுப் பாதையில் அவ்வளவு பீதியை உண்டு பண்ணிவிட்டது?'' என்று எண்ணி எண்ணி ஆச்சரியப்பட்டான்.

'' இந்த இராஜபாட்டை எங்கிருந்து எங்கே போகிறது ? நாம் எங்கே வந்திருக்கிறோம்? எங்கே போகிறோம்?'' என்று கேட்டான்.

''அநுராத புரத்திலிருந்து சிம்மகிரிக்குப் போகும் இராஜபாட்டையில் வந்து சேர்ந்திருக்கிறோம். தம்பள்ளை இன்னும் அரைக்காத தூரம் இருக்கிறது. இராத்திரி அங்கே போய்ச் சேர்ந்துவிடலாம்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''இராஜபாட்டை வழியாகச் சுகமாக வந்திருக்கலாமே ? எதற்காகக் காட்டு வழியாக வந்தோம் ?''

''இராஜபாட்டையில் நாம் நெடுகிலும் வந்திருந்தால் நூறு இடத்தில் நம்மை நிறுத்திச் சோதனை செய்திருப்பார்கள். அநுராதபுரத்தில் அடியோடு நிறுத்திப் போட்டிருப்பார்கள். நாம் யாரைத் தேடி வந்திருக்கிறோமோ அவர் சிம்மகிரிப் பக்கம் சென்றிருப்பதாக அறிந்தேன். அதனால்தான் குறுக்கு வழியில் வந்தேன். இன்னமும் அவரை நாம் கண்டு பிடிக்கத்தான் போகிறோமோ, இல்லையோ? வேறு எங்கேயாவது அவர் போகாதிருக்க வேண்டும்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

இராஜ பாட்டையின் இரு பக்கத்திலும் ஏராளமான வீடுகளும் கிராமங்களும் கடைவீதிகளும் கொல்லர் — தச்சர் பட்டறைகளும் இருந்தன. அவற்றில் வசித்தவர்களும் தொழில் செய்தவர்களும் பெரும்பாலும் சிங்களவர்களாகத் தோன்றினார்கள்.

இராஜபாட்டையில் தமிழ் நாட்டுப் போர்வீரர்கள் குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் இருபுறமும் வசித்த சிங்களவர்கள் எவ்விதத் தடையுமின்றி நிர்ப்பயமாய்த் தங்கள் தொழில்களைச் செய்து கொண்டிருந்தார்கள்.

''இந்தப் பகுதியெல்லாம் இப்போது யாருடைய வசத்தில் இருக்கிறது?'' என்று வந்தியத் தேவன் கேட்டான்.

''சோழ சைன்யம் தம்பள்ளைவரையில் கைப்பற்றி யிருக்கிறது. அப்பால் சிம்மகிரிக் குன்றும் கோட்டையும் மகிந்தன் வசம் இருக்கின்றன.''

''இந்தப் பக்கங்களில் வசிக்கும் ஜனங்கள் ?''

''பெரும்பாலும் சிங்களத்தார்தான். 'பொன்னியின் செல்வர்' இங்கே வந்த பிறகு யுத்தத்தின் போக்கே மாறி விட்டது. சோழ வீரர்களுக்கும் மகிந்தனுடைய 'வீரர்களுக்குந்தான் சண்டை- அதாவது போர்க்களத்தில் எதிர்ப்படும்போது. மற்றப்படி குடிகள் நிர்ப்பயமாய் வாழலாம். புத்த குருமார்களுக்கு ஒரே கொண்டாட்டம். அநுராதபுரத்தில் இடிந்து போன புத்த விஹாரங்களை யெல்லாம் நம் இளவரசர் திரும்பப் புதுப்பித்துக் கட்டும்படி கட்டளை யிட்டிருக்கிறாராம்! கேட்டாயா கதையை? பௌத்த குருக்கள் ஏன் குதூகலமடைய மாட்டார்கள்? இளவரசரை நான் சந்திக்கும் போது, 'நீங்கள் செய்யும் காரியம் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை!' என்று சொல்லிவிடப் போகிறேன்!''

''கட்டாயம் சொல்லிவிடும். உமக்குப் பிடிக்காத காரியத்தைச் செய்வதற்கு இந்த இளவரசர் யார் ? அவருக்கு என்ன கொம்பு முளைத்திருக்கிறதா?'' என்றான் வல்லவரையன்.

''அவருக்குக் கொம்பு முளைத்திருக்கவில்லை, தம்பி ! அது உண்மையே ! ஆனாலும் அவரிடம் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது. அவருக்குப் பின்னால் யார் என்ன குறை சொன்னாலும், எதிரில் அவரைப் பார்த்ததும் மயங்கிப் போய் நின்று விடுகிறார்கள். இளவரசரை எதிர்த்துப் பேசும் சக்தி யாருக்கும் இருப்பதில்லை. அத்தகைய சக்தி, — இளவரசரைத் தம் இஷ்டப்படி நடக்கச் செய்யும் சக்தி, — ஒரே ஒருவருக்குத்தான் உண்டு....''

''ஆம், ஆம்! வீர வைஷ்ணவ ஆழ்வார்க்கடியாரின் அற்புத சக்தியை அறியாதவர் யார் ? அப்படிப்பட்ட பயங்கர மத யானையைக் கைத்தடியால் எதிர்த்துக் கொன்றவருக்கு இளவரசர் எம்மாத்திரம் !''

''நான் கூறியதை நீ சரியாகத் தெரிந்து கொள்ள வில்லை, தம்பி ! பொன்னியின் செல்வர் எங்கே? இந்த ஏழை வைஷ்ணவன் எங்கே ? மத யானையைக் கைத் தடி கொண்டு எதிர்ப்பேன்; புலியையும் கரடியையும் சிங்கத்தையும் வெறுங்கையோடு எதிர்ப்பேன். ஆனால் பொன்னியின் செல்வர் முன் நேருக்கு நேர் நிற்கும் போது என் தைரியமெல்லாம் எங்கேயோ போய் விடுகிறது. நெஞ்சு நெகிழ்ந்து விடுகிறது. தொண்டை அடைத்து விடுகிறது. வாயிலிருந்து ஒரு வார்த்தை வெளி வருவது பிரம்மப் பிரயத்தனமாகி விடுகிறது....''

''அவரை ஆளும் சக்தி படைத்தவர் என்று பின் யாரைச் சொன்னீர் ?''

''உலகம் தெரிந்த விஷயமாயிற்றே; உனக்குத் தெரியாதா? இளையபிராட்டியைப் பற்றித்தான் சொல்கிறேன். குந்தவை தேவியின் வாக்குத்தான் அவருக்கு வேத வாக்கு !''

''ஓஹோ ! பழையாறை இளைய பிராட்டியைப் பற்றியா சொல்கிறீர் ? உமது சகோதரி பழுவூர் இளையராணியைப் பற்றித்தான் சொல்கிறீரோ என்று பார்த்தேன் !''

''நந்தினியும் அபூர்வ சக்தி உடையவள்தான். ஆனால் அவளுடைய சக்தி வேறுவிதமானது.''

''எப்படி? என்ன வித்தியாசம்?''

''ஒருவன் நரகத்தில் விழப் போகிறவனாயிருந்தால், அவனைத் தடுத்து நிறுத்திக் குந்தவை தேவி சொர்க்கத்துக்கு அவனைக் கொண்டு போய்ச் சேர்த்து விடுவார். அது ஒருவித சக்தி. நந்தினி என்ன செய்வாள் தெரியுமா? அவளுடைய சக்தி இன்னும் ஒரு படி மேலானது என்றே சொல்ல வேண்டும். நரகத்தையே சொர்க்கம் என்று சொல்லிச் சாதித்து, அதை நம்பும்படி செய்து, நரகத்தில் சந்தோஷமாகக் குதிக்கும்படி செய்து விடுவாள்.''

**வ**ந்தியத் தேவனுக்கு உடம்பு சிலிர்த்தது. நந்தினியின் குணாதிசயத்தையும் அவளுடைய பயங்கர மோகன சக்தியையும் இந்த வீர வைஷ்ணவன்

எவ்வளவு சரியாக அளந்து மதிப்பிட்டு வைத்திருக்கிருன்! நந்தினி இவனுடைய சகோதரி என்று சொல்வது மெய்யாயிருக்க முடியுமா?

இந்த யோசனையில் வந்தியத்தேவன் ஆழ்ந்து விட்டபடியால் மேலே ஒன்றும் கேட்கவில்லை. சிறிது தூரம் மௌனமாக நடந்தார்கள்.

அந்த மோனத்தைக் கலைத்துச் சில குதிரைகளின் குளம்புச் சத்தம் கேட்டது. அவர்களுக்கு எதிர்ப்பக்கத்திலிருந்து அச்சத்தம் வந்தது. சில நிமிஷங்களுக்கெல்லாம் நாலு குதிரைகள் வெகு வேகமாக நாலு கால் பாய்ச்சலில் வந்தன. சூறாவளிக் காற்றைப் போல் புழுதியைக் கிளப்பி விட்டுக் கொண்டு வந்த அக் குதிரைகள் மின்னல் மின்னும் நேரத்தில் நம் கால் நடைப் பிரயாணிகளைத் தாண்டிச் சென்றன. ஆயினும் அந்தச் சிறிய நேரத்திலேயே அக் குதிரைகளின் மேலிருந்தவர்களில் ஒருவருடைய முகத்தை வந்தியத்தேவன் பார்த்துத் தெரிந்து கொள்ள முடிந்தது. ஆகா! பார்த்திபேந்திர வர்மன் அல்லவா இவன்? காஞ்சியிலுள்ள இளவரசர் ஆதித்தரின் அந்தரங்க நண்பன் அல்லவா? நம்மை அவ்வளவாகப் பிடிக்காதவன் அல்லவா? இவன் எங்கே வந்துவிட்டு எங்கே போகிருன்? எதற்காக இவன் இலங்கைக்கு வந்தான்? எப்போது வந்தான்?....

பிரயாணிகளைத் தாண்டிச் சென்ற குதிரைகள் சற்றுத் தூரம் போனதும் கம்பீரமான ஒரு குரலில் ''நில்லுங்கள்!'' என்ற கட்டளை பிறந்தது.

குதிரைகள் நின்றன. பிறகு, இந்தப் பக்கமாகத் திரும்பின. அவர்களில் தலைவனாகக் காணப்பட்டவன் குதிரையைச் செலுத்திக் கொண்டு முன்னால் வந்தான். மற்றவர்கள் பின் தொடர்ந்து வந்தார்கள்.

முன்னால் வந்தவன், வல்லவரையன் எண்ணியது போலவே, நாம் முன்னம் மாமல்லபுரத்தில் பார்த்திருக்கும் பார்த்திபேந்திர பல்லவன்தான்.

வந்தியத்தேவனை அவன் உற்றுப் பார்த்துவிட்டு, ''இது என்ன அப்பா இது? நீ எப்படி இங்கே வந்து சேர்ந்தாய்? தஞ்சாவூரில் நீ திடீரென்று மாயமாய் மறைந்து விட்டாய் என்று சொன்னார்களே? உன்னைப் பழுவேட்டரையர்கள் வேலை தீர்த்திருப்பார்கள் என்றல்லவா நினைத்தேன்?'' என்ருன்.

''பழுவேட்டரையர்களால் என்னை அவ்வளவு எளிதில் தீர்த்துக் கட்ட முடியுமா? நான் பழைய வாணர் குலத்தைச் சேர்ந்தவன் அல்லவா?''

''ஆம், ஆம்! எப்படியாவது உயிரைக் காப்பாற்றிக் கொண்டு தப்பிப் பிழைப்பதில் உனக்கு இணை வேறு யாரும் இல்லை...''

''ஐயா! உயிரைக் காப்பாற்றிக் கொள்வது அவசியமாயிருக்கும்போது காப்பாற்றிக் கொள்வேன். உயிரைக் கொடுக்க வேண்டிய சமயத்தில், கொடுக்கவும் அறிவேன். அப்படி நான் சாவதாயிருந்தால் தங்களைப் போன்ற பழைய பல்லவ குலத் தோன்றலுடன் சண்டை போட்டுச் சாவேனே தவிர, கேவலம் பழுவேட்டரையர்களின் கையினால் சாவேனா?'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் உறையிலிருந்து வாளை உருவினான்.

''சேச்சே! உன்னோடு என்னைச் சண்டை போடச் சொல்கிருயா? அதுவும் இந்தத் தூரதேசத்தில் வந்து! எனக்கு அவசர வேலை இருக்கிறது! வேண்டாம், தம்பி, வேண்டாம்! உன்னிடம் இளவரசர் ஒப்புவித்த காரியம் என்னவாயிற்று?''

''செய்து முடித்து விட்டேன் ஐயா! சக்கரவர்த்தியிடம் கொடுக்கும்படி பணித்த ஓலையைச் சக்கரவர்த்தியிடம் கொடுத்தேன். இளைய பிராட்டியிடம் கொடுக்கச் சொன்ன ஓலையை அவரிடம் கொடுத்தேன்.''

''இங்கே எதற்காக வந்தாய்?''

''இலங்கையைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை எனக்கு வெகு நாளாக இருந்தது. அதற்காக இந்த வைஷ்ணவரோடு புறப்பட்டு வந்தேன்....''

''ஆகா! இந்த ஆளைக்கூட நான் எங்கேயோ பார்த்திருக்கிறேன் போலிருக்கிறதே!''

''ஆம், மகாராஜா! பார்த்திருக்கிறீர்கள். என் சகோதரியைப் பற்றி ஏதாவது தெரியுமா என்று விசாரிப்பதற்காக இளவரசர் ஆதித்தரிடம் வந்தேன். அப்போது தாங்களும் அவர் பக்கத்தில் இருந்தீர்கள்!...''

''அது யார் உன் சகோதரி?''

''இப்போது பழுவூர் இளைய ராணியாக விளங்கும் நந்தினி தேவி!''

''ஆகா! அந்த விஷப் பாம்பினால் நாட்டுக்கு நேர்ந்திருக்கும் தீங்குகளையெல்லாம் நினைத்தால்... அவளுடைய அண்ணனாயிருப்பதற்காக உன்னைக் கழுவில் ஏற்ற வேண்டும்!''

''மகாராஜா! ஒரு நாள் நான் கழுவில் ஏறிச் சாவதாகவே சபதம் செய்து கொண்டிருக்கிறேன். அன்றைக்குத்

## கல்கி நேயர்களுக்கு



ஒவ்வொரு கல்கி இதழும் ஒரு குடும்பத்தில் உள்ளவர்களை மட்டுமின்றி அக்கம்பக்கத்து வீடுகளில் உள்ளவர்களையும் மகிழ்விக்கிறது.

பல பேர்கள் கல்கியைக் கையிலெடுத்துப் படிக்கும்பொழுது அது நைந்து போகாமல் பத்திரமாகப் பாதுகாக்க உதவும் வகையில் உயர் ரக பிளாஸ்டிக் மேலட்டை ஒன்று தயாரித்திருக்கிறோம். இந்தப் பிளாஸ்டிக் அட்டையை ஒரிதழிலிருந்து அடுத்த கல்கி இதழுக்கு மாற்றிக் கொள்ளலாம். கல்கியின் ஆதரிச தெய்வமான விநாயகப் பெருமானின் திருவுருவத்தைத் தாங்கி அழகுறப் பொலியும் இம் மேலட்டையைக் கல்கி காரியாலயத்துக்கு ஓராண்டு சந்தா ரூ. 20/- அனுப்பி வைப்பவர்கள் இலவசமாகப் பெறலாம். இம் மேலுறையைத் தனியே விற்பதற்கு இல்லை. தயவுசெய்து மன்னிக்கவேணும்.

இச் சலுகையை ஏப்ரல் முதல் தேதியிலிருந்து தொடங்கி மே இறுதிக்குள் சந்தாத் தொகை அனுப்பும் அன்பர்களுக்கு மட்டும் அளிப்பதென முடிவு செய்திருந்தோம். பல வாசகர்களின் வேண்டுகோளுக்கிணங்க இச் சலுகையை மேலும் ஒரு மாதத்துக்கு, அதாவது ஜூன் மாத இறுதிவரை நீடித்திருக்கிறோம் என்பதைப் பெரு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

சந்தாத் தொகை அனுப்ப வேண்டிய முகவரி:

மானேஜர், கல்கி காரியாலயம், சேத்துப்பட்டு, சென்னை - 31


தாங்களே வந்து தங்கள் கையினாலேயே அந்தத் திருக் கைங்கரியத்தைச் செய்து விட்டால்...''

''உன்னைக் கழுவில் தூக்கிப் போட என்னால் முடியுமா? அதற்கு நூறு ஆள் வேண்டும். இருக்கட்டும்; நீங்கள் வருகிற வழியில் இளவரசரைப் பற்றி ஏதாவது செய்தி கேள்விப்பட்டீர்களா? அநுராதபுரத்துக்கு அவர் வந்து விட்டாரா, தெரியுமா?'' என்று பார்த்திபேந்திரன் கேட்டான்.

''அதைப் பற்றியெல்லாம் எங்களுக்கு என்ன தெரியும் மகாராஜா! நாங்கள் காட்டு வழியில் வந்தோம். காட்டில் ஒரு மத யானை என்னைத் துரத்திக் கொண்டு வந்தது! அப்போது பாருங்கள்....''

''போதும் உன் கதை! யார் கண்டது? ஒருநாளைக்கு உன்னை நானே கழுவில் தூக்கிப் போட்டு உன்னுடைய ஆசையை நிறைவேற்றினாலும் நிறைவேற்றுவேன்!'' என்று சொல்லிக் கொண்டே பார்த்திபேந்திரன் குதிரையைத் திருப்பினான்.

ஆழ்வார்க்கடியான் பார்த்திபேந்திரனுடன் பேசியபடியே அவனுடனிருந்த ஆட்களை யெல்லாம் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

எல்லாரும் குதிரைகளைத் திருப்பிக் கொண்டு போன பிறகு ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனிடம் ''தம்பி! அந்த மற்ற மூன்று ஆட்களையும் பார்த்தாயா? அவர்களில் யாரையாவது உனக்கு முன்னம் தெரியுமா?'' என்று ஆவலோடு கேட்டான்.

''இல்லை, நான் பார்த்ததே யில்லை!'' என்றான் வந்தியத்தேவன்.

''ஆம், நீ பார்த்திருக்க முடியாது தான். அவர்களில் இரண்டு பேரை நான் பார்த்திருக்கிறேன். திருப்புறம்பயம் பள்ளிப்படையில் நள்ளிரவில் பார்த்தேன்! அப்பா! என்ன பயங்கரமான சபதம் எடுத்துக் கொண்டார்கள்?'' என்று கூறியபோது ஆழ்வார்க்கடியானுடைய உடம்பு முழுவதும் நடுங்கிற்று.

''அப்படி என்ன பயங்கரமான சபதம் எடுத்துக் கொண்டார்கள்?''

''சோழர் குலப் பூண்டே இந்த உலகில் இல்லாமல் அழித்து விடுவதாகச் சபதம் எடுத்துக் கொண்டார்கள்!''

''ஐயையோ!''

''இவர்கள் எப்படி நமக்கு முன்னால் இங்கு வந்து சேர்ந்தார்களோ தெரியவில்லை! கெட்டிக்காரர்கள்! இந்த முரட்டுப் பல்லவனை எப்படியோ பிடித்துக் கொண்டார்கள் பார்!'' என்று சொல்லி விட்டு ஆழ்வார்க்கடியான் மௌனமானான்.

வந்தியத்தேவனுக்குக் கோடிக்கரையில் அவன் அறிந்த ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அவன் கோடிக்கரை வந்ததற்கு முதல் நாள்தான் இரண்டு பேர் அவசரமாக இலங்கைக்குப் போனார்கள் என்றும் பூங்குழலியின் தமையன் அவர்களைப் படகில் ஏற்றிச் சென்றான் என்றும் கேள்விப்பட்டான் அல்லவா?

இவர்களில் அந்த இரண்டு பேரும் இருப்பார்களோ? அப்படியானால் பார்த்திபேந்திரனுக்கும் இவர்களுக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்?

நால்வரும் தம்பள்ளை என்னும் புத்த புண்ணிய க்ஷேத்திரத்தை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். (தொடரும்)



# எதியோப்பியா எப்படி?

மூவாயிரம் ஆண்டுகளாகச் சுதந்திரத்துடன் இருந்து வரும் ஒரு நாட்டின் பிரஜைகள் என்பது குறித்து எதியோப்பியர்களுக்கு நியாயமான பெருமை உண்டு. கடந்த இரண்டாவது உலகப் போரில் முஸோலினி இந்நாட்டினைத் தாக்கிப் பிடித்த (1936 – 41) காலத்திலும், எதியோப்பியர் மீது இத்தாலி முழு ஆதிக்கம் செலுத்த முடிந்ததில்லை. சர்வாதிகாரி முஸோலினியின் ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராடிய வண்ணமிருந்தனர் மக்கள். எதியோப்பிய சக்கரவர்த்தி ஹெய்லி செலாஸி ஐம்பது ஆண்டுகளாக ஆட்சி புரிந்து வருகிறார். மன்னரிடத்தில் மக்களுக்கு மிக்க மரியாதையும் அன்பும் உண்டு.

எதியோப்பிய மக்கள் பார்ப்பதற்கு லட்சணமான தோற்றமுள்ளவர்கள். எதியோப்பியா ஓர் ஆப்பிரிக்க நாடு என்பதால், மக்கள் நீக்ரோக்களாக இருப்பார்கள் என்று கருதினால் அது தவறு. அவர்கள் நீக்ரோ வகுப்பினர் அல்லர் என்பதைக் குறிப்பிட வேண்டும். சுருட்டையான கேசம் ஒன்று நீங்கலாக, நீக்ரோக்களிடம் காணப்பெறும் தடித்த உதடு, சப்பையான மூக்கு — இந்த அம்சங்கள் எதையும் எதியோப்பியரிடம் காண்பதற்கில்லை. அவர்களின் மேனி வண்ணமும் நீக்ரோக்களைப் போன்ற கறுப்பு அன்று.



மக்கள் பெரும்பாலோர் கிறிஸ்தவர்கள். முஸ்லீம்களும் கணிசமான அளவு உள்ளனர். ராஜ்ய மதம் **(State Religion)** கிறிஸ்தவ மதமே. மற்ற கிறிஸ்தவர்களைப்போல் இவர்கள் டிசம்பர் 25ம் தேதி கிறிஸ்துமஸ் பண்டிகையைக் கொண்டாடுவதில்லை. ஆண்டுக்குப் பதின்மூன்று மாதங்கள் இங்கு வழக்கிலுள்ளன. ஜனவரித் திங்கள் 7ம் தேதிதான் இவர்கள் கிறிஸ்துமஸ் கொண்டாடுவார்கள். இவர்களுடைய மொழி 'அமாரிக்'. எழுத்துக்கள் உண்டு; இலக்கியமும் உண்டு. 'கிஸ்' என்ற புராதன மொழியிலிருந்து தோன்றியது அமாரிக். மாதாகோயிலில் வழிபாடுகள் 'கிஸ்' மொழியில்தான் நடைபெறுகின்றன. ஆப்பிரிக்காவின் பிறபகுதிகளிலுள்ள பழங்குடி மக்கள் பேசும் மொழிகள் எதற்கும் எழுத்துக்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. அமாரிக் பாஷைக்கு அடுத்தபடியாக, இரண்டாவது மொழியாக ஆங்கிலமும் பயிலப்படுகிறது. பெயர்ப் பலகைகள், அறிவிப்புக்கள் — இவற்றிலெல்லாம் அமாரிக், ஆங்கிலம் இரண்டும் இடம் பெறுகின்றன.

இந்நாட்டில் மிகுதியாக விளையும் டெஃப் **(TEFF)** என்ற ஒருவகையான சிறு தானியம் மக்களின் முக்கியமான உணவுப் பொருள். இத்தானியத்தை மாவாக்கி, தோசை போன்ற தின்பண்டம் தயாரித்துச் சட்னியுடன் சாப்பிடுகிறார்கள் மக்கள். அரிசியும் ஓரளவு

படங்கள்: எதியோப்பியத் தலைநகர் அடிஸ் அபாபாவின் சில தோற்றங்களும், அங்கு உள்ள இந்தியத் தூதர் திரு அழகேசனும்.







இறக்குமதி செய்யப்படுகிறது. சில பகுதிகளில் கோதுமையும் விளைகிறது.

பெண்களுக்குத் தேசிய உடை உண்டு. இடையில் பாவாடை போன்ற உடை; தலையில் துணியினால் அழகாகச் சுற்றிக் கொள்வார்கள்; மேலே சால்வையால் போர்த்திக் கொள்வார்கள். ஆண்களின் தேசிய உடை: இறுகலான கால் சராய்; ஜவாஹர் சட்டை; அங்கவஸ்திரம் போன்ற மேலாடை. பண்டிகை நாட்களில் சக்கரவர்த்தியும் இதே தேசிய உடையை அணிவது வழக்கம்.

பதின்மூன்று மாதம் சூரிய ஒளி வீசும் (**Land of thirteen months sun shine**) நாடு இது. மிதமான குளிர். வருடத்தில் எட்டு மாதங்கள் மழை பொழியும். மழை விட்டதும், உடனே வெய்யிலும் தோன்றிவிடும். மற்ற நான்கு மாதங்களிலும் குறைவான அளவு மழை பெய்யும். 'திங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்'யும் நாடு இது!

1941–ல் நிகழ்ந்த கெரென் போராட்டத்தில் இந்திய வீரர்கள் இத்தாலியப் படையை முறியடித்து எரிட்ரியாவை இத்தாலியரிடமிருந்து மீட்ட வரலாறு சரித்திரப் புகழ் பெற்றதாகும். எதியோப்பியா இத்தாலியரின் ஆக்கிரமிப்பிலிருந்து மீள இந்திய இராணுவம் பெருமளவுக்குக் காரணமாயிருந்தது. இந்த இனிய நினைவு எதியோப்பிய மக்களின் உள்ளங்களில் இன்றும் பசுமையாக உள்ளது. எனவே, இந்தியாவிடம் எதியோப்பியர்களுக்கு நல்லெண்ணமும் நட்புணர்ச்சியும் இயல்பாகவே மிகுந்துள்ளது.

எதியோப்பியாவும் இந்தியாவைப்போல வளர்ந்து வரும் நாடு. நன்கு வளர்ச்சி யடைந்துள்ள நாடுகளைவிட, வளர்ந்து வரும் ஒரு நாட்டின் சாதனைகள் தங்கள் நாட்டின் முன்னேற்றத்துக்குப் பெரிதும் பயன்படும் என்பது எதியோப்பியர் கருத்து. இந்திய மூலதனம் எதியோப்பிய மூலதனத்துடன் இணைந்து இங்கு பல தொழில்கள் பெருகியுள்ளன. பருத்தி, கம்பளி நெசவுத் தொழிற்சாலைகளும் சோப்புத் தொழிற்சாலையும் இவ்வகையில் உருவாகிச் செயல்பட்டு வருகின்றன.

800 இந்திய ஆசிரியர்கள் இந்நாட்டின் கல்விக்கூடங்களில் பணியாற்றி வருகின்றனர். சில இந்திய மருத்துவர்களும் இங்கு பணியாற்றுகின்றனர். எதியோப்பியாவின் தலைநகரான அடிஸ் அபாபா, ஆப்பிரிக்க கண்டத்துக்கே முக்கியம் வாய்ந்த ஒரு நகரமாகத் திகழ்கின்றது. ஆப்பிரிக்க ஒருமைப்பாட்டுக்கென இயங்கி வரும் **Organisation for African Unity** என்ற ஸ்தாபனமும், 'ஆப்பிரிக்க பொருளாதார கமிஷன்' (**Economic Commission for Africa**) என்ற ஐ. நா. ஸ்தாபனத்தின் ஒரு பிரிவும் இந்நகரில் மையங்கொண்டு செயல்பட்டு வருகின்றன.

எதியோப்பியாவில் தேர்தல் நடப்பதுண்டு; பார்லிமென்ட் உண்டு; மந்திரிசபை உண்டு; அனைத்துக்கும் பிரதானமாய்த் திகழ்பவர் சக்கரவர்த்தி.

**(எதியோப்பியாவில் உள்ள இந்திய தூதுவர் திரு ஓ. வி. அளகேசன், சென்னை வந்திருந்தபோது பேட்டி கண்டு எழுதியவர்: 'பரணன்.')**




# 12. பகீரதன்

யாகக் குதிரையைத் தேடிச் சென்ற தன் குமாரர்கள் திரும்பி வரவில்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்த அரசன் சில நாட்கள் கழித்துப் பேரன் அம்சுமானை அழைத்து, ''பாதாளம் போன குமாரர்களுக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லை. நீ வீரன் அல்லவா? ஆயுதபாணியாகச் சென்று, பார்த்துவிட்டு வருவாய். வெற்றியோடு வருவாய்!'' என்று அம்சுமானை ஆசீர்வதித்து அனுப்பினான்.

அம்சுமான் தன் சிறிய தகப்பன்மார் சகர குமாரர்கள் பூமியைத் தோண்டிக் கொண்டு போன வழியைப் பிடித்தே சென்றான். திக்கு கஜங்களைக் கண்ட போது, அவற்றை வணங்கிப் பூஜித்துத் தன் காரியத்தைச் சொல்லிக் கொண்டான். அந்த யானைகளும், ''நீ காரியசித்தி அடைவாய்'' என்று ராஜகுமாரனை ஆசீர்வதித்தும் தைரியப்படுத்தியும் அனுப்பி வைத்தன. அதன்பேரில் தாமதமின்றி உற்சாகமாகச் சென்றான்.

பாதாளத்தில் எல்லாப் பக்கங்களும் சுற்றிப் பார்த்தான். ஓர் இடத்தில் பெரியதொரு சாம்பற் குவியலையும் பக்கத்தில் யாகக் குதிரையையும் கண்டு திருப்தியும் திகைப்பும் அடைந்தான்.

சகர ராஜாவின் பத்தினி சுமதியின் சகோதரனாகிய கருட பகவான் அங்கே தற்செயலாக வந்தவன், அம்சுமானை நோக்கி, ''திகைக்காதே! இந்தச் சாம்பற் குவியலே உன் பித்ருக்களான சகர குமாரர்களின் மிச்சம். கபில தேவரால் சபிக்கப்பட்டுச் சாம்பலானார்கள். அன்புக்குரிய குழந்தாய்! குதிரையைப் பிடித்துச் சென்று யாகத்தை முடித்துக் கொள்ளுங்கள். சபிக்கப்பட்ட ராஜகுமாரர்கள் நற்கதியடைய வேண்டுமானால் தேவலோகத்துக் கங்கையை இங்கே வரவழைத்துச் சாம்பலைக் கரைக்க வேண்டும்'' என்றான் கருட பகவான்.

குதிரையுடன் அம்சுமான் வெகு வேகமாகத் திரும்பிப் போய்ப் பாட்டன் மகாராஜாவிடம் விஷயத்தைச் சொன்னான்.

தன் புத்திரர்களுடைய கதியைக் கேட்டு அரசன் துயரக் கடலில் மூழ்கினான். குதிரை திரும்பி வந்தபடியால் யாகத்தைக் கிரமமாக முடித்துவிட்டுக் குமாரர்களின் கதியைப் பற்றியும் கங்கையைப் பற்றியும் யோசித்தான். யோசித்து யோசித்து இன்னது செய்வது என்று தோன்றாமல் அந்தத் துயரத்திலேயே உயிர் நீத்தான்.

முப்பதினாயிரம் ஆண்டு வாழ்ந்து சகரன் இறந்தான் என்று ராமாயணத்தில் சொல்லப்படுகிறது. ராமாயணத்தில் முப்பதினாயிரம் அறுபதினாயிரம் என்கிற பெரிய எண்களைப் படித்து நாம் திகைக்க வேண்டியதில்லை. முப்பது ''வருஷ சஹஸ்ரம்'' என்றால் அநேக வருஷங்கள் என்று அல்லது முப்பது வருஷமாகவேயும் வைத்துக் கொள்ளலாம். ''சஹஸ்ரம்'' என்பதை ''வருஷம்'' என்பதற்கு ஒரு மங்கள அடைமொழியாகவே வைத்துக் கொள்ளலாம். 'ஷஷ்டி சகஸ்ரம் மக்கள்' என்றால் அறுபது மக்களாகவே வைத்துக்கொள்ளலாம்.

சகரனுக்குப் பிறகு அம்சுமானும் அம்சுமானுக்குப் பிறகு திலீபனும், திலீபனுக்குப் பிறகு பகீரதனும் அயோத்தியில் அரசாண்டார்கள். அம்சுமானும் திலீபனும் தங்கள் மூதாதையர்களுடைய நற்கதிக்கு வேண்டியதைச் செய்ய முடியவில்லையே என்று எண்ணி, எண்ணி மற்ற எல்லா விதத்திலும் சம்பத்தும் புகழும் அடைந்திருந்தாலும் அந்தப் பெருங் குறையின் காரணமாகத் தலைமுறை தலைமுறையாகத் துக்கப்பட்டுக் கொண்டே காலகதியடைந்தார்கள்.

திலீபனுக்குப் பின் அவன் குமாரன் பகீரதன் அயோத்தியாபதியானான். அவன் மகா தீரன். பகீரதனுக்கு மக்கட்பேறு வாய்க்கவில்லை. அதைக் கருதியும், கங்கையைக் கொண்டு வருவதற்காகவும் ராஜ்யத்தை மந்திரிகள் வசம் ஒப்புவித்து விட்டுக் கோகர்ணத்தில் நீண்ட தவம் புரியப் போனான். நான்கு பக்கங்களிலும் தீமூட்டி, தலை மேலே வெய்யிலும் காய, மாதம் ஒரு முறையே ஆகாரம் உண்டு பல்லாண்டுகள் உக்கிரமான தவம் புரிந்தான். விடாமுயற்சிக்கு ஒரு பெயரே ஆயிற்று பகீரதனுடைய நாமம்.

பிரஜாபதிப் பிரம்மா பகீரதனுடைய தவத்தை அங்கீகரித்து அவனுக்குத் தரிசனம் தந்து, ''என்ன வேண்டும்?'' என்று கேட்டான். பகீரதன் தன் இரண்டு விருப்பத்தையும் தெரிவித்தான். ''என் பேரில் தாங்கள் இரக்கம் கொண்டால் எங்கள் குலம் அறுபட்டுப் போகாமல் எனக்குப் புத்திரப் பேறு தரவேண்டும். என் மூதாதைகள் சாபத்துக்கு இரையாகி ஜலக்கிரியை இல்லாமல் சாம்பலாகப் பாதாளத்தில் கிடப்பதைக் கங்கா ஜலத்தில் கரைத்து நீர்க் கடன் செய்து முடித்து அவர்களைச் சுவர்க்கம் சேரச் செய்ய வேண்டும். அதற்காகக் கங்கை கீழே 'இறங்கி எங்கள் குலத்தின் பெருந் துயரை நீக்க வேண்டும். இதுவே நான் கோரும் வரம்'' என்று பகீரதன் பிரம்மாவை மிக வணக்கமாகப் பிரார்த்தித்தான்.

''உன் தவம் தேவர்களுக்குத் திருப்தி தந்தது: உன் இஷ்டங்கள் நிறைவேறும். ஆனால் ஒன்று. ஹிமவானுடைய மூத்த புத்திரியான கங்கை கீழே இறங்கினால் அதன் வேகத்தை இந்தப் பூமி தாங்காதே. அதைத் தாங்கக் கூடியவன் உமாபதி ஒருவனே. அவனைக் குறித்துத் தவம் செய்வாய்'' என்று சொல்லி உடன் வந்த தேவகணங்களுடன் மறைந்தான்.

மறுபடியும் பகீரதன் நீண்ட காலம் அன்ன ஆகாரமின்றிக் கடுந் தவம் செய்து உமாபதியின் அருளைப் பெற்றான்.

பரமசிவன் பிரத்யக்ஷ தரிசனம் தந்து, ''உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன். மலைராஜன் மகளாகிய கங்கை இறங்கும் போது என் தலையில் அவளைத் தாங்குவேன். அவள் உனக்கு அருள்வாளாக'' என்றான்.

பரமேசுவரன் பகீரதனுக்கு இந்த வரத்தைத் தந்ததும் பிரம்மன் சொல்லியிருந்தபடி கங்காதேவி இறங்கினாள். தன் முழு வேகத்துடன் ஆகாயத்திலிருந்து கீழே மகாதேவனுடைய சிரசின்மேல் வீழ்ந்தாள். தன்னுடைய அபார வேகத்தால் சங்கரனையும் தள்ளிக் கொண்டு நேராகப் பாதாளம் போவேன் என்று அவள் எண்ணினாள்: அவளுடைய கர்வத்தை அடக்கவேண்டும் என்று முக்கண்ணன் உத்தேசித்தான். அந்தப்படி நினைத்த மாத்திரத்தில் தலையில் இறங்கிய பவித்திர ஜலப் பிரவாகம் அவனுடைய பெருஞ் சடையில் அகப்பட்டுக்கொண்டு வெளியில் வர முடியாமல் நின்றுபோய் விட்டது!

எவ்வளவோ முயன்று பார்த்தாள். ஆயினும் இமயமலைச் சொரூபமான மகாதேவனுடைய சடையின் குகைகளினின்று வெளிப்பட்டு வந்து பூமியில் இறங்க முடியாமல் திகைத்துப்போனாள்.

கங்கைக்காகத் தவமிருந்து சித்தி அடைந்த பகீரதன், ''ஐயோ! இப்படியாயிற்றே! ஜலப் பிரவாகமென்



லாம் எங்கே போயிற்று?'' என்று நினைத்து மறுபடியும் மகாதேவனைக் குறித்துத் தவம் செய்தான்.

மகாதேவன் அவனுக்கு இரங்கி, பிந்து ஸரஸில் கங்கையை மெதுவாக விட்டான். அங்கிருந்து ஏழு சிறு ஆறுகளாக மிக அடக்கத்துடன் கங்கா தேவி வெளிப்பட்டாள். மூன்று ஆறுகள் கிழக்கு முகமாகவும் மூன்று ஆறுகள் மேற்கு முகமாகவும் சென்றன. ஏழாவது ஆறு பகீரதன் பின்னல் சென்றது. பகீரதன் மகிழ்ச்சிப் பரவசமானன். தலைமுறை தலைமுறையாகக் காத்திருந்த தன் மூதாதைகளுக்கு நற்கதியுண்டாயிற்று என்று அவன் மனம் பூரித்து, வெற்றித் தேர் ஏறி முன் சென்றான். கங்கை ஆறு அவனைத் தொடர்ந்து துள்ளிக் குதித்துப் பெரும் பிரவாகமாகிச் சென்றது. ஜலத்துடன் பல ஜல ஜந்துக்களும் பறவைகளும் விளையாடிக் கொண்டு செல்ல மின்னல் பாய்வது போல் விளங்கிற்று. அந்த மகத்தான காட்சியைக் காண தேவ கந்தர்வர்கள் கூட்டம் ஆகாயத்தில் கூடிற்று. நதியின் கதியும் சில இடங்களில் மெதுவாகவும் சில இடங்களில் மகா வேகமாகவும், சில இடங்களில் மேலிருந்து கீழே குதித்தும், சில இடங்களில் கீழிருந்து மேலே குதித்தெழுந்தும் - கங்காதேவி மனத்தைக் கவரும் கதிகளுடன் பகீரதன் தேரைப் பின்பற்றி நர்த்தனம் செய்து கொண்டு சென்றாள். ஆகாயத்தில் தேவ கந்தர்வர் கூட்டங்களும் நதியின் கூடவே சென்றன.

இப்படிச் சென்ற புண்ணிய நதியானது வழியில் ஓர் இடத்தில் ஜன்ஹு ரிஷியினுடைய யாக வேதியைக் கலைத்துச் சேதம் செய்தது. ஒதுங்கிப் போகாமல் இப்படிச் செய்தாளே என்று ரிஷியானவர் நதியை அப்படியே கையில் எடுத்து உறிஞ்சி ஆசமனம் செய்து விட்டார். கங்கை முற்றிலும் மறைந்து ஒழிந்துபோயிற்று.

மறுபடியும் பகீரதன் ஐயோ என்று திகைத்தான். ஆனல் தேவ ரிஷி கணங்கள் ரிஷியை வணங்கிக் கங்கையின் அபராதத்தை மன்னித்து, பகீரதனுடைய தவத்தைப் பயனடையச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். ரிஷியும் அங்கீகரித்து நதியைத் தமது வலது காதின் வழியாக வெளிப்படுத்தி மேலே போக விட்டார்.

''ரிஷியின் உடலிலிருந்து வெளிப்பட்டு ரிஷியின் பெண்ணே ஆனாய். ஜான்ஹவி என்ற பெயரும் பெறுவாய்'' என்று தேவர்கள் மகிழ்ச்சியுடன் ஆசீர்வதித்தார்கள்.

பிறகு யாதொரு இடையூறுமில்லாமல் கங்கை சாகரம் சேர்ந்தாள். அங்கிருந்து பாதாளம் புகுந்து சகர புத்திரர்கள் எரிந்து சாம்பலான இடத்தைச் சேர்ந்தாள். பகீரதனும் தன் மூதாதையர்களுக்கு நீர்க் கடன் செய்து முடித்து அவர்களை உத்தம லோகம் அடையச் செய்தான்.

பகீரதன் தன் தளரா முயற்சியால் பூமிக்குக் கொண்டு வந்த புண்ணிய நதிக்குப் பாகீரதி என்று பெயர்.

''உன் முன்னோர்களாகிய சகர குமாரர்கள் வெட்டிய சாகர சரித்திரமும் பகீரதன் தவத்தின் பயனாக ஆகாய கங்கை பூமிக்கு இறங்கிய சரித்திரமும் கேட்டாய். உனக்கு மங்களமாகுக. மாலை ஆயிற்று. உன் மூதாதை உலகத்துக்குத் தந்த கங்கையில் இறங்கி சந்தியாவந்தனம் செய்வோம்'' என்று விசுவாமித்திரர் ராமசந்திரனுக்குச் சொல்லி முடித்தார்.

கங்கைக்குப் போய் ஸ்நானம் செய்தாலும், அல்லது இந்தப் புண்ணியக் கதையைப் பக்தியுடன் படித்தாலும், படிக்கச் சொல்லிக் கேட்டாலும் பாவங்கள் தீர்ந்து சுத்த உள்ளத்தை அடைந்து நல்ல சீலமும், எடுத்த காரியத்தில் தளரா முயற்சியும் மக்கள் அடைவார்கள். (தொடரும்)

## தாபம் தீர்க்கும் திருக்குளம், திருவள்ளூர்

ஸ்ரீ அகோபில மடம் ஸ்ரீ அழகிய சிங்கரின் அருளாணையினல், திருவள்ளூரில் ஹிருத்தாப நாசினி என்னும் திருக்குளத் திருப்பணி விரைவாக நடைபெற்று வருகிறது. இன்னும் பதினைந்து — இருபது நாட்களுக்குள் இது நிறைவேறிவிடக் கூடும். இப்பணிக்குப் பொருளுதவி செய்ய விரும்புபவர்கள், ஸ்ரீ காரியம், ஸ்ரீ அஹோபில மடம், திருவள்ளூர் என்ற முகவரிக்குத் தொடர்பு கொள்ளவும்.



# பரவசமாக்கும் பரிமளகந்தம்-பிளாக் ரோஸ்
# கோயா தயாரிக்கும் ஒரு அழகு சாதன பௌடர்




கோயா பிளாக் ரோஸின் சுகந்தச் சுழலில
அகபபட்டுக்கொள்ளுங்கள். நீங்கள் வெளிவரும்
போது பெண்மை சிறக்கும். வாசனை மணக்கும்.
உள்ளம் உவக்கும். எல்லாம் நீங்கள் விரும்பிய விதமே
இங்கிதமறிந்த மங்கை எந்தபபணிக்கும் தயார்.
மூன்று இதர கோயா சிருஷ்டிகள்: புதிய சிருங்கார
சாதனம் லவ் அ:ஃபோ், புது மலர் மணமுள்ள
கார்டீனியா, பரவசமூட்டும் பாஸ்போர்ட,
உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும்
புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கும்.

இந்த நறுமணப் பௌடர்களைத்
தயாரிப்போர்: **கோயா**



பாரிஸ் . லண்டன் . நியூயார்க்

அட்லாண்டிஸ (ஈஸ்ட்)
லிமிடெட் (இங்கிலாந்தில்
இணைக்கப்பட்டது)

AGC-8 TAM


அம்புலிக்கு அப்பால்... 8
கதை: புஷ்பா
படம்: ஜெயா
பிரபாகரைப் பச்சைக் கிரகத்துக்கு அழைத்துப் போகக் கூடாது என்று பேராசிரியர் சொன்னதைக் கேட்டுத் திடுக்கிட்டான் கோபி.
ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகுதான் சொல்கிறேன் கோபி! பிரபாகர் நண்பனல்ல, நச்சுப் பாம்பு!
என்ன சார் இது! இப்படிச் சொல்கிறீர்கள்? நமக்கு அவன் பேரில் சந்தேகம் உண்டு; ஆனால் எதையும் நிரூபிக்க இயலாதே!
சார்! ஒரு விஷயத்தை மறந்துவிட்டுப் பேசுகிறீர்கள்! நாங்கள் இருவரும் அந்தரத்தில் ஆதாரமின்றித் தொங்கப் போகிறோம்... எனக்குக் கெடுதல் பண்ணினால், அவன் கதையும் அத்துடன் முடிந்த மாதிரிதானே?
அதாவது...?
தன் உயிர்மேல் அவனுக்குக் கட்டாயம் ஆசை இருக்குமல்லவா! அதனாலேயே அவன் ஒழுங்காக நடந்து கொள்வான்! மேலும் பூமியில் 'கண்ட்ரோலில்' முரளி போன்ற நம்பகமான ஆள் இருந்தால்தான் நல்லது!
இரண்டு நாட்கள் கழித்துப் பேராசிரியர் மகளும் கோபியும் சந்தித்தனர்.
என்ன! அப்பாவும் நீங்களும் மண்டையை உடைத்துக் கொண்டது தான் மிச்சம் போலிருக்கிறது! ராக்கெட் புஸ்வாணமாகப் போய் விட்டதே!
ராதிகா! உனக்குக் கேலியாக இருக்கிறதாக்கும்!
நடந்ததைத்தானே சொன்னேன்! நீங்களும் மற்ற விஞ்ஞானிகளும் முதலில் ஒழுங்காகக் காற்றாடி விடக் கற்றுக் கொள்ளுங்கள்! அப்புறம் ராக்கெட் விடலாம்!


முட்டாள்தனமாகப் பேசாதே ராதிகா! ஆராய்ச்சியில் இந்தத் தோல்விகளெல்லாம் சர்வ சாதாரணம்! பார்த்துக் கொண்டே இரு! திடீரென்று ஒரு நாள் நான் ராக்கெட்டிலும் பறப்பேன்! அதற்கு ரகசியமாக ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறேனாக்கும்!
பிரயாகனின் தங்கை இந்து, மறைந்திருந்து கோபி பேசுவதைக் கேட்டாள்.
ரகசிய ஏற்பாடுகளா நடக்கின்றன!
இதற்கிடையில்... பிரயாகனின் வீட்டுக்கு மீண்டும் வந்தான் மர்ம மனிதன் எக்ஸ்.
மிஸ்டர் எக்ஸ்! நான் சொன்னால் சொன்னது தான்! பேராசிரியர் சந்திரசேகர் எவிய ராக்கெட் விழுந்து நொறுங்கியது! என்று பேப்பரில் பார்த்தீர்களா?
பார்த்தேன் பாராட்டுகிறேன்.
பாராட்டு மட்டும் தானா?
அவசரப் படாதே! இதோ இத்தனை ரூபாயும் உனக்குத் தான். ஆனால் ஒரு விஷயம்... ஒரு முறை மட்டுமல்ல, இன்னும் எத்தனை தடவைகள் உங்கள் பேராசிரியர் முயன்றாலும் நீ அவற்றை முறியடித்தே தீர வேண்டும்!
ஆ இதென்ன பிரமாதம்! கோபிக்கும் பேராசிரியருக்கும் இப்போது ஏற்பட்டிருக்கிற அதிர்ச்சியிலிருந்து மீளவே வெகு நாட்கள் பிடிக்கும்!
அப்போது அங்கு வந்தாள் இந்து.
இந்து! என்ன சொல்கிறாய் நீ!
அது தான் இல்லை! அவர்கள் விழித்துக் கொண்டு விட்டார்கள். நீதான் தூங்கிக் கொண்டிருக்கிறாய் அண்ணா! கனவும் காண்கிறாய்!
தொடரும்..

பின்னியின் பலவித பருத்தி ஸூட்டிங் ரகங்களில் குளுமையும் இயல்பான எழிலும் இணைந்துள்ளன.

நெசவு வண்ணங்கள் எல்லாம் உங்கள் மனதிற்கு பிடித்தமாதிரி கிடைக்கின்றன.

விலைகளும் அவரவர் வசதிக்கேற்ப உள்ளதெனச் சொல்லத் தேவையில்லை



# பின்னி
# பருத்தி ஸூட்டிங்குகள்

தேர்ந்தெடுக்க:
அம்பாஸிடர் A 7781, U 7791
கான்ஸல். டபின் ஜீரோ
கே கார்டன். ஹனுவா. பாம்கோர்ட்
பெடிக்ரீ. பிளெயின்ஸ்மன்
Q 551. ராயலிஸ்ட்

AUTHORISED STOCKIST OF BINNY FABRICS

உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் உள்ள அங்கீகாரம் பெற்ற விற்பனையாளரிடமிருந்து வாங்குங்கள்

**பின்னி-துணி உலகிலே புகழ் பெற்ற பெயர்**

BY-4974

## காட்சி 9

(பாதிரியார் இருப்பிடம். அவர் கையில் டாக்டர் சரவணன் எழுதிய கடிதம். அதை மீண்டும் மீண்டும் படித்தபடி தம் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறார். பூஜ்யர் அடைக்கலம். இன்ஸ்பெக்டர் லாரன்ஸ் உள்ளே நுழைகிறார். பாதிரியாருக்கு வணக்கம் செலுத்துகிறார்.)

**லாரன்ஸ்:** கூப்பிட்டீங்களா ஃபாதர் ?

**பாதிரியார்:** ஆமாம், மகனே ! உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டியிருக்கு.

**லாரன்ஸ்:** உடம்பு குணமானதும் பேசக் கூடாதா ? ஆமாம், நேற்று 'சர்ச்'சிலிருந்து வருகிற போது கீழே விழுந்துட்டீங்களாமே? ஏன் பாதர் ? தனியா, இந்தத் தள்ளாத நிலையிலே நடக்கிறீங்களே, துணைக்கு யாரையாவது இருக்கச் சொல்லக் கூடாது?

**பாதிரியார்** (சிரித்து) வெரிகுட்...என்கிட்டே இப்போ பேசறது இன்ஸ்பெக்டர் லாரன்ஸ் இல்லே ! என்னுடைய மகன் லாரன்ஸ்! இன்னொரு மகன் லாரன்ஸ்! ஆனால் அந்த முதல் மகன் ?.... லாரன்ஸ்... எனக்கு ஒரு உதவி செய்வாயா ?

**லாரன்ஸ்:** சொல்லுங்க ஃபாதர் !

**பாதிரியார்:** நான் உன்னையும் அனாதையாத் தான் எடுத்து வளர்த்தேன். நீயும் நல்லாப் படிச்சு முன்னுக்கு வந்துட்டே. அதுக்குப் பதிலுக்கு எனக்கு நீ என்ன செய்தே?

**லாரன்ஸ்:** எதை வேணுமானாலும் செய்யக் காத்துக்கிட்டிருக்கேனே !

**பாதிரியார்:** ஆமாம், மகனே ! நீ எவ்வளவோ தடவை அது வேணுமா, இது வேணுமான்னு கேட்டே..... நானும் நீ கேட்ட போதெல்லாம் வேண்டாம், வேண்டாம்னு மறுத்துக்கிட்டே வந்துட்டேன். அதனாலே இப்போ நான் ஒன்னு கேட்பேன். என் ஆசையை நிறைவேற்றுவாயா? மகனே! இதுதான் உன்னிடம் நான் கேட்கும் முதல் பிரதியுபகாரம், கடைசியா நான் கேட்கும் உதவியும் இதுவாகத்தான் இருக்கும்!

**லாரன்ஸ்:** உத்தரவு போடுங்க, ஃபாதர்!

**பாதிரியார்:** ம்... அவன் இப்போ எங்கேயிருக்கான் ?

**லாரன்ஸ்:** யாரு ஃபாதர் ?

**பாதிரியார்:** அவன்தாம்பா என் முரட்டுப் பிள்ளை அந்தோணி !

**லாரன்ஸ்:** வேலூர் சிறையிலே இருக்கான்!

**பாதிரியார்:** என்னடா? இவன் நன்றிக்கடன், பிரதியுபகாரம் அப்படி இப்படின்னு சொல்லி அபாயகரமான ஒரு காரியத்திலே மாட்டி விட்டுட்டானேன்னு நினைக்காதேப்பா! நான் உன்னைப் பார்த்துட்டேன். அவனையும் ஒரு தரம் பார்த்துடணும். லாரன்ஸ்! அவனைப் 'பரோல்'லே அழைச்சிக்கிட்டு வர முடியுமா?

**லாரன்ஸ்** (யோசித்து ஒரு முடிவுக்கு வந்தவனாக): சரி, ஃபாதர் ! நானும் உங்க பிள்ளைதான். உங்க ஆசையை நிறைவேற்றுவதுதான் என் முதல் கடமை. உத்திரவாதம் கொடுத்து என் பொறுப்பிலே நானே அழைச்சுக்கிட்டு வரேன் !






**பாதிரியார்:** தாங்க்யூ லாரன்ஸ்....

(லாரன்ஸ் தம் தந்தையின் இறுதி ஆசையைப் பூர்த்தி செய்ய -- நண்பனைக் கூட்டி வரப் போகிறார்.)

**காட்சி - (9) (அ)**

(பாதிரியார் தமது மகனைப் பார்க்க உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு சாய்வுநாற் காலியில் படுத்தவாறு காத்துக் கொண்டிருக்கிறார்.

லாரன்ஸ் கைதி அந்தோணியுடன் நுழைகிறார்.)

**லாரன்ஸ்:** ஃபாதர்....

**பாதிரியார்** (நன்றிப்பெருக்குடன்): தாங்க்யூ லாரன்ஸ்! நான் இவன்கிட்டே கொஞ்சம் தனியாப் பேசணும். அனுமதிப்பியா?

**லாரன்ஸ்:** ஐந்து நிமிஷம் அனுமதிக்கிறேன் ஃபாதர்.

(போகிறார்)

**பாதிரியார்** (மூலையில் தலை குனிந்து நிற்கும் அந்தோணியைப் பார்த்துச் செல்லமாகச் சிரித்தபடி): டேய், முரட்டுப் பயலே! ஏண்டா நிக்கிறே... கிட்டே வாடா....

(அந்தோணி அவர் அருகே நெருங்கி வருகிறான்.)

**பாதிரியார்:** ஏண்டா, சும்மா நிக்கிறே? வழக்கமா நான் இது மாதிரி இங்கே உட்கார்ந்திருந்தா எனக்கு விரல் சொடுக்குப் போடுவியே, போடுடா!

(அந்தோணி தரையில் மண்டியிட்டு அமர்ந்து விரல் சொடக்குப் போடுகிறான்.)

**பாதிரியார்:** டே.... டே... மெதுவாடா! இதுவும் கழுத்து இல்லே!.... உன்னே எடுத்து வளர்த்த கைடா!

**அந்தோணி:** சாமீ!

(குழந்தை போல் தேம்பித் தேம்பி அழுகிறான். அன்போடு அவன் தலையை வருடுகிறார் அடைக்கலம் பாதிரியார்.)

**பாதிரியார்:** டேய்! நீயும் மனுஷனா மாற முடியுமான்னு சோதனை பண்ணிப் பார்த்தேன். ம்... இப்ப மட்டும் நீ வரலேன்னா, நீ வரும் போது நான் இருக்க மாட்டேன்! அழுவாதேடா! அதான் உன்னைப் பார்த்துட்டேனே.... ம்... எவ்வளவு செல்லமா வளர்த்தேண்டா உன்னே!

(அவன் கையைத் தடவிப் பார்க்கிறார்)

**பாதிரியார்:** ஏண்டா, காப்புக் காச்சுப் போயிருக்கு உன் கை? ம்...கல்லு உடைக்கச் சொல்றாங்களா? (அவன் தலையசைத்ததைப் பார்த்து) இல்லியா? பின்னே, என்ன வேலே கொடுக்கிறாங்க?

**அந்தோணி** (விசும்பியபடி): அச்சு வேலே. அங்கே இருக்கிற 'பிரஸ்'ஸிலே எழுத்துக் கோக்கற வேலே....

**பாதிரியார்** (சிரிப்புடன்): உனக்கு எழுத்து வாசனையே அங்கேதான் வந்திருக்கு! எழுத்துக்கு உயிர் இருக்கு. ஆனால் உன் தலை யெழுத்தைத்தான் அச்சடிச்சிருக்கே! நீ உருவானதிலே தப்பில்லேடா! நான் உன்னே உருவாக்கினதிலேதான் ஏதோ தப்பு!

**அந்தோணி:** சாமி!

**பாதிரியார்** (பெருமூச்செறிந்து): நான் இந்த 'இமாகுலேட் மதர் சர்ச்'சைப் பற்றி எவ்வளவெல்லாம் கனவு கண்டேன். எப்படியெல்லாம் வளரணும்னு ஆசைப்பட்டேன்!

உன் மகளைப் பற்றி நீ மனக்கோட்டை கட்டினுயே அது மாதிரி நானும் இந்த மாதா கோயிலைப் பற்றி மனக் கோட்டை

கட்டினேன். அதெல்லாம் உன் ஒருத்தனுக்கு மட்டும்தான் தெரியும்! என் எண்ணம் நிறைவேறுமல் போய் விட்டால்....

காலப் போக்கிலே வேறு யாராலேயாவது நிறைவேறினால் அப்போ அடைக்கலம் பாதிரின்னு ஒருத்தன் இருந்தான். இந்த மேரி மாதா கோயிலுக்காகச் சேவை செய்தான்னு பேர் சொல்லவே நீ ஒருத்தன் தான் இருக்கே. இந்தச் சரணாலயந்தான் உன்னுடைய சரணாலயமும்கூட. பறவைகளுக்கெல்லாம் சரணாலயம் இருக்கே, அது மாதிரி. ஆனால் இப்போ? நீ சிறை என்கிற கூண்டிலே அடைஞ்சுகிடக்கிறே. கூண்டுக்கிளியாகிட்டே! எப்படி என் லட்சியம் நிறைவேறும்? ம்.... அது பற்றிக் கர்த்தர் என்ன முடிவு செய்திருக்கிறாரோ ? யாருக்குத் தெரியும்?

அந்தோணி ! உனக்குத் தெரிய வேண்டிய ஒரே ஒரு ரகசியம்.... உன் மகள் போகலே! உயிரோடுதான் இருக்கா !

**அந்தோணி** (பரபரப்புடன்): மேரி இருக்காளா? எங்கே சாமி இருக்கா ?

**பாதிரியார்:** ஸ்.... கத்தாதே!... நீ இப்படித் துடிக்கக் கூடாதுன்னுதான் அதை ரகசியம்னு சொன்னேன். நீ சிறையிலே நிம்மதியா இரு! அவளும் இந்த உலகத்திலே ஏதாவது ஒரு மூலையில் அமைதியா இருக்கட்டும்.....

**அந்தோணி :** இதைச் சொல்லிட்டு அமைதியா இருடான்னு எப்படி இருக்க முடியும், சாமி?

**பாதிரியார்:** வேறே வழி? டேய்....! என்னுடைய அந்த மெழுகுவர்த்தியை ஏற்றி எடுத்துக்கிட்டு வா.... போ... சீக்கிரண்டா!

(தமது கடைசிக் காலம் நெருங்குவதை உணர்ந்தவர் போல் பேசுகிறார் பாதிரியார். அவன் சென்று மாதாவின் அருகே 'ஸ்டாண்'டில் பொருத்தப்பட்டுள்ள மெழுகுவர்த்தியைக் கொண்டு வருகிறான். பாதிரியார் என்று வது மனம் சஞ்சலப்படும் போது மட்டும் ஏற்றி வைத்துப் பிரார்த்தனை புரியும் விசேஷ மகத்துவம் வாய்ந்த மெழுகுவர்த்தி அது. அதைக் கையில் வாங்கிக் கொண்டு நடுங்கும்குரலில் பேசுகிறார் பாதிரியார்.)

**பாதிரியார்:** இது சாதாரண மெழுகுவர்த்தி இல்லேடா ! என் ஒரே சொத்து. எப்போ உனக்குச் சஞ்சலம் வருதோ






அப்போ மட்டும் உன் கையாலேயே ஏற்றி வைக்கப் பிரார்த்தனை பண்ணனும்.

இப்போ நாம் ரெண்டு பேருமே மனசஞ்சலத்திலே உழன்றுகிட்டு இருக்கிறோமில்லையா?

(அந்தோனி நடுங்கும் கரங்களால் அவர் கையிலிருக்கும் மெழுகுவர்த்தியை ஏற்றுகிறான்.)

**பாதிரியார்:** டேய்! பிரார்த்தனை சொல்கிறேன். திருப்பிச் சொல்லு.... ம்....

(ஆங்கிலத்தில் அவர் சொல்லிக் கொடுக்கும் பிரார்த்தனையை அந்தோனி தட்டுத் தடுமாறி விசும்பியபடி திருப்பிக் கூறுகிறான்.)

**பாதிரியார்:** ஆமென்! இந்தா... நான் கொடுக்கிறது சாதாரண மெழுகுவர்த்தி இல்லேடா... என்னையே உன்கிட்டே ஒப்படைச்சிருக்கேன். ஆமாம்! ஜாக்கிரதை!

(மெழுகுவர்த்தியை அந்தோனிக்கே பரிசாகத் தருகிறார் பாதிரி. அப்போது நேரம் ஆனதால் லாரன்ஸ் நுழைகிறார்.)

**பாதிரியார்:** ஓ! நேரம் ஆயிடுச்சா, லாரன்ஸ்! கைதியை உன்கிட்டே ஒப்படைச்சுட்டேன். மனித சட்டப்படி இவன் குற்றவாளிதான். தண்டனையை 'அனுபவிச்சே தீரணும். ஆனால்.... மதச் சட்டப்படி இன்று மன்னிக்கப்பட்டவன். செஞ்ச குற்றத்தை உணர்ந்து திருந்துகிறவன் ஆண்டவனாலே மன அமைதியையும், மகிழ்ச்சியையும் அடைய முடியும்! இப்போ நீங்க ரெண்டு பேருமே எனக்கொரு சத்தியம் செய்து தரணும்!

**லாரன்ஸ்:** சொல்லுங்க ஃபாதர்!

**பாதிரியார்:** நீ உன் கடமையைச் செய்யறே! இவன் குற்றவாளி! நீ போலீஸ் அதிகாரி! ஆனா என்னைக்காவது இவன் தண்டனை முடிஞ்சு வெளியே வந்தால்.... அப்போதும் நீ உன் கடமையைத் தொடர்ந்து செய்வியா லாரன்ஸ்? அதாவது நான் என்ன சொல்றேன்னா, எனக்கு நீங்க ரெண்டு பேருமே ஒண்ணுதான். ரெண்டு பேரும் என் பிள்ளைகள் தான். ஆனால் இவன் தன் வாழ்க்கையையே வீணடித்துக் கொண்ட 'பிராடிகல் ஸன்'. அவ்வளவுதான் வித்தியாசம். ஒரு வேளை இவன் சிறையிலேயிருந்து திரும்பி வந்தால் அப்போது இந்தச் சமுதாயம் இவனை ஏற்றுக் கொள்றது கஷ்டம். கொலைகாரன்னு சொல்லித் தள்ளி வைச்சுடும். இவனோட அப்பனுக்கு நடந்ததுதான் இவனுக்கும் நடக்கும். அதனாலேதான் கேட்கிறேன். அந்த நேரத்திலே நீ இவனை மனுஷனா மாற்றி வாழ வைப்பேன்னு சத்தியம் செய்து கொடுக்கணும்.

(ஒரு பணப் பையை லாரன்ஸிடம் தருகிறார் பாதிரியார்.)

இந்தா! என் சர்வீஸுக்குக் கிடைச்ச பணம். உன் சத்தியத்தை நிறைவேற்றக் கட்டாயம் இது தேவைப்படும். (அந்தோனியிடம்) டேய், முரட்டுப் பயலே... 'சாமீ! நானும் என்னைக்காவது உலகத்தைப் புரிஞ்சுக்கிட்டு மனுஷனா மாறி வாழ்வேன்'னு எனக்குச் சத்தியம் செய்து கொடுடா.... சீக்கிரன்டா...ம்... சீக்கிரம்!

(இருவரும் இருபுறமும் நின்று அவர் கரங்களைப் பற்றிச் சத்தியம் செய்து தர அவர்களை வளர்த்த அந்தப் பாதிரியார்--எத்தனையோ அநாதைகள், ஏழைகள், என்னற்ற மனிதர்களின் தந்தையாக விளங்கியவர் கண்களை மூடி அமரராகிவிடுகிறார்.) (தொடரும்)

# கால்கேட் மூலம், வாய்நாற்றத்தைத் தடுத்து நாள்முழுதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள் !



ஏனெனில்: ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் க்ரீம் வாய் நாற்றத்தையும் பற்சிதைவை விளைவிக்கும் கிருமிகளையும் 85 சத விகிதம் வரை அகற்றுகிறது.

கால்கேட் 10க்கு 7 பேர்களில் வாய்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறதென்றும் உணவு உட்கொண்டவுடனேயே கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால் இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப்படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. கால்கேட் மட்டுமே இந்த நிரூபணம் பெற்றது !

'அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையே தனி. கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள்தவறாது பல் துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பா பல மாதங்களுக்கு வரும்.




இன்றே!
வாங்குங்கள்
ஸூபர் சைஸ்... அது
சிக்கனமானது!

தூய்மையான இன் மூச்சோடு வெண்மையான பற்களும் பெறவே... மற்றெந்தப் பற்பசையையும் விட உலகிலே அதிக மக்கள் கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்.

DC.G.38 TAM

# அறுவகைச் சமயம் வைத்தார்



மனிதனை மனித நிலையிலிருந்து தெய்விக நிலைக்கு உயர்த்தும் வழியே சமயமாகும். அதுவே அன்பு நெறியும் பண்பு நெறியுமாம். அங்கு வேற்றுமைக ளுக்கோ பூசல்களுக்கோ இடமில்லை. 'யார் யார் எந்தெந்த உருவங்களை வழிபட்டாலும் அவ்வழி பாடுகள் அனைத்தையும் நான் ஏற்றுக் கொள்கி றேன்' என்பது கீதைப் பேருரை. ஒருவரே பல தெய்வங்களையும் உள் ளன்போடு வணங்குதல் முடியும். அதுவே வேத காலத்தில் காணப்படும் பண்பு. இந்திரன், அக் கினி, வருணன்,சோமன், ருத்திரன் முதலிய பல தெய்வங்களையும் அன்று வாழ்ந்தோர் வணங்கி னர். ஒவ்வொரு தெய் வத்திடம் ஒவ்வொரு காலத்திலே ஈடுபாடு கொண்டு வணங்குவதும் ஒரே தெய்வத்திடம் வாழ்நாள் முழுதும் ஈடு பாடு கொண்டு வழி பட்டு வாழ்வதும் பல் வேறு மனித இயற்கை யாகும். இது நம் வழிவழி வந்த மரபு. இதையே சநாதன தர்மம் என்றும் குறிப்பர்.

வேத காலத்தில் பல் வேறு தெய்வங்கள் வழி படப்பட்டன. இத்தெய்வச் சக்திகள் ஒன்றோடு ஒன்று இணைந்து ஆறு முக்கிய பகுதிகளாகக் குறைந்தன. சிவபெருமானைப் போற்றும் சைவ சமயமும், திருமாலைப் போற்றும் வைணவ சமயமும், சக்தியைத் தெய்வமாகக் கொண்ட சாக்தமும், கணபதியைக் கடவுளாகக் கொண்ட காணபத்தியமும் முருகனை முதல்வனாகக் கொண்ட கௌமாரம் என்னும் சமயமும் சூரியனைத் தலைவ னாகக் கொண்ட சௌரமும் இவ்வாறு தோன்றிய சமயங்களாகும். இவ்வாறு சமயங்களையும் ஆதி சங்கர பகவத் பாதர் நிலைநிறுத்தினார். ஷண்மத ஸ்தாபனாச்சாரியர் என்று அவருக்கு ஒரு பெயர் உண்டு.

இது முடியுமா? தீவிர வைஷ்ணவர் சிவபெரு மானை வணங்க முடியுமா? சைவர் திருமாலின் திருவடியைப் போற்றத்தான் முடியுமா? இன்று வாழும் சிலருக்கு இது முடியாததாகவே தோன்ற லாம். ஆனால் உண்மையாக சநாதன தர்மத்தை

● மண்டகப்பட்டு நந்திகேசரன்



● மகேந்திர பல்லவன் தோற்றுவித்த மண்டகப்பட்டு குகைக்கோயில்.

நம் பண்டைய நெறியைப் பின்பற்றி அதை உள்ளபடி உணர்ந்து அவ்வழியிலேயே நிற்பவர்களால் முடியும் என்பதும் அவர்கள் நின்றே தீரவேண்டும் என்பதும் வரலாறு திட்டவட்டமாக உணர்த்தும் உண்மையாகும்.

திரும்பிப் பாருங்கள், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நம் ஆன்றோர்கள் தோற்றுவித்த ஆலயங்களை! அங்கு அறு வகைச் சமயங்களும் ஒன்றாக இணைந்து விளங்குவதைக் காண லாம். ஆறு தெய்வங்களும் இல்லாத கோயில்களே இருக்க முடியாது என்று ஆகமங்கள் கூறுகின்றன. திருமாலுக்குகந்த கோயில்களே ஆயினும் சிவபெருமானும், சக்தியும், குமரனும், கணபதியும் ஆதவனும் அங்கு இருக்க வேண்டும். அது போன்ற வையே சைவப் பெருங் கோயில்களும்.

சங்க காலத் தமிழகத்தில் சமய வாழ்வு நல்ல பண்பு நெறியாக மலர்ந்திருந்தது. அந்தி விழவில் மழுவாள் நெடி யோனாகிய சிவபெருமானைத் தலைவனாகக் கொண்ட தெய்வங்கள் அனைத்துக்கும் உணவை உயர் பலியாக இட்டுப் போற்றினர் என்று அறிகிறோம். ஞாயிற்றின் பெருமையும், சிவபெருமான் அருளும் திருக்குறிப்பும், திருமாலின் செங்கமலத் திருவடியும், மறையேற்றவே நிற்கும் கொற்றவையின் மாண்பும், செந்தி லும் செங்கோடும் ஏரகமும் நீங்கா எம்மான் முருகனின்

இரா. நாகசாமி எம்.ஏ.,

ஏற்றமும் சிலப்பதிகாரம் எடுத்துரைக்கும் பண்பாம்.

தாழ்சடையும் நீண்முடியும்
    ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும்
    தோன்றுமால், – சூழும்
திரண்டருவி பாயும்
    திருமலைமேல் எந்தைக்கு.
இரண்டுருவு மொன்றாய்
    இசைந்து.

என்பது வைணவப் பெருந்தகை பேயாழ்வார் பனுவல்.

தமிழகத்தின் வடபகுதியிலே கி. பி. 275 லிருந்து பல்லவப் பெருமன்னர்கள் ஆண்டார்கள். இவர்களில் மகேந்திரவர்மனை அனைவரும் அறிவர். அவன் சமண சமயத்தானாக இருந்து பின்னர் அப்பர் பெருமானால் சைவ சமயத்துக்கு மாற்றப்பட்டவன் என்பதைச் சேக்கிழார் திருவாக்குகளினின்று அறிகிறோம். இவன் முதன் முதலில் எடுப்பித்த கோயில் ''மண்டகப்பட்டு'' என்ற இடத்திலிருக்கிறது. செஞ்சியிலிருந்து விழுப்புரம் செல்லும் நெடுஞ்சாலையில் சுமார் 12 கல் தொலைவில் இவ்வூர் இருக்கிறது. அங்குள்ள ஒரு குன்றைக் குடைந்து இக்கோயிலைத் தோற்றுவித்திருக்கிறான். சைவ சமயத்துக்கு மாற்றப்பட்ட இவன் யாருக்குக் கோயிலைத் தோற்றுவித்தான்? சிவபெருமானுக்கா? நான்முகன், சிவன், நாராயணன் ஆகிய முப்பெருந்தெய்வங்களுக்குமே இக்கோயிலைத் தோற்றுவித்துள்ளான். குகையின் பின்

● மண்டகப்பட்டு கருடன்





● திருச்சி கீழ்க்குகையில் சூரியன்

புறத்தில் ஒரே வரிசையில் முப்பெருந் தெய்வங்களுக்கும் மூன்று கருவறைகளை அமைத்துள்ளான். மண்டபத்தின் புறத்தே சிவபெருமானின் வாயிற் காப்பாளர் நந்திகேச்சரனும், மற்றொரு புறத்து திருமாலின் வாயிற்காப்பான் கருடனும் காத்து நிற்கின்றனர். கல்வெட்டில் ''விசித்திர சித்தேன நிர்மாபிதம் நிரும்பன பிரம்ம ஈச்வர விஷ்ணு லக்ஷிதாயதனம்'' என்று உணர்த்துகின்றான். பரம சைவனாகிய பெருமன்னன் நாரணனையும் நான்முகனையும் போற்றும் பண்பை இங்கு காண்கிறோம். அது மட்டுமா?

● திருச்சி கீழ்க்குகையில் கணபதி, குமரன், நான்முகன்






திருச்சிராப்பள்ளி மலையில் அம்மன்னன் இரண்டு குகைக் கோயில்களைத் தோற்றுவித்துள்ளான். ஒன்று உச்சிப் பிள்ளையார் கோயில் போகும் வழியில் இருக்கிறது. இது சிவபெருமானுக்கு உகந்த கோயில். இதை மேல் குகை என்று கூறுவது வழக்கம். மற்றொன்று மலையின் கீழ் அடிவாரத்தில் உள்ளது. இதைக் கீழ்க் குகை என்பார்கள். கீழ்க் குகை மிகவும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த குகைக் கோயிலாகும். மண்டபம் போன்ற அமைப்புடைய இக் குகைக் கோயிலின் இரு பக்கச் சுவர்களிலும் இரண்டு கருவறைகள் குடையப் பெற்றுள்ளன. ஒன்று சிவபெருமானுக்கும் மற்றது திருமாலுக்கும் அமைக்கப்பட்டவை. பின்புறச் சுவரின் நடுவில் நான்முகனின் உருவம் உள்ளது. மும்மூர்த்திகளைத் தவிர பின்புறச் சுவரில் கணபதி, குமரன், சூரியன், கொற்றவை ஆகிய நாற்பெரும் தெய்வங்களின் சிற்பங்களும் இங்கு உள்ளன. இங்கு நான்மறையின் தலைவனும் நான்முகன் நடுவில் நிற்க மற்ற அறுவகைச் சமயங்களின் அரும் பெரும் தெய்வங்களும் உள்ளது நம்மை வியப்பில் ஆழ்த்தும்.

மாமல்லபுரத்திலே மும்மூர்த்தி குகை என்று ஒரு குகை இருக்கிறது. அதில் முருகன், சிவபெருமான், திருமால் ஆகிய மூவருக்கும் மூன்று கருவறைகள் உள்ளன. அவ்வறைகளின் பின்புறத்தே அத்தெய்வங்களின் உருவங்கள் உள்ளன. அவை தவிர அருகில் கொற்றவையின் உருவமும் காணப்படுகிறது. இங்கு நான்கு சமயங்களும் ஒன்றாய் அமைந்ததைக் காண்கிறோம். மகிஷாசுர மர்த்தினி குகையில் நடுவில் சிவபெருமானும் ஓர்புறத்தே பள்ளி கொண்ட திருமாலும் மறுபுறம் கொற்றவையும் இருக்கக் காண்கிறோம். பல்லவ மன்னர்கள் தங்களை தர்ம மகா ராஜாதி ராஜன் என்று கூறிக் கொண்டனர். ஒரே பல்லவ மன்னன் பரம மாஹேச்வரன், பரம பாகவதன் பரம பிரம்மண்யன் எனப் பெயர் சூட்டிக் கொள்கிறான். இதுபோன்று பல பல்லவ மன்னர்களுக்குப் பட்டங்கள் உள்ளதைக் காண்கிறோம். இதிலிருந்து பரம வைணவன் ஆன ஒருவன் பரம மாஹேச்வரனாக விளங்கலாம் என்பதும் பரம சைவனான ஒருவன் திருமாலை வணங்க முடியும் என்பதும் வரலாறு கூறும் நெறியாம். அதுவே நமது தர்மம் என்பதும் தெள்ளத் தெளிவாகும்.

பல்லவர்கள் மட்டுமல்ல, பாண்டிய மன்னர்களும், பின் வந்த சோழப் பேரரசர்களும் இப்பெருநெறியைப் பின்பற்றி வந்தனர் என்பதற்குப் பல சான்றுகள் கூறலாம். திருப்பரங்குன்றில் இன்று முருகப் பெருமானது கோயிலாக விளங்கும் குகைக் கோயில் அன்று பாண்டிய மன்னன் ஒருவனால் நான்முகன், நாரணன், ஐங்கரன், சிவபிரான், கொற்றவை ஆன ஐம்பெருந் தெய்வங்களுக்கும் தோற்றுவிக்கப்பட்டது என்பது தெளிவு. இதுபோன்ற பல்வேறு கோயில்களில் சென்று பார்த்தால் அன்று நிலவிய




# எடுத்துச் செல்ல ஒரு புதியமுறை

வெஸ்ட கோஸ்ட் கராப்ட காகிதம் பலவழிகளில் பயன்படுகிறது. இங்கே நீங்கள் பார்க்கும் அலாதியான பணிக்கும் அதை பயன்படுத்தலாம்! வழககமான உபயோகஙகள் பலவும் கூட அதற்கு உண்டு. எம்மாதிரி-யான பேக்கிங் வேலையையும் எளிதாககுகிறது அது. ஏனெனில் முரட்டுத்தனமாகக் கையாளும்போது கூடத தாஙகுமபடி. உறுதியாகவும், நீடிதது உழைக்கும்படியும் கராப்ட காகிதத்தைத்தயாரிக்கிறது வெஸ்ட் கோஸ்ட்.

**உபயோகியுங்கள் வெஸ்ட் கோஸ்ட் க்ராப்ட்...பல்வகைப் பயனுள்ள காகிதம்**

**வெஸ்ட கோஸ்ட் பேப்பர்** சீனிவாஸ ஹவுஸ், வாடபி ரோடு, பமபாய-1.

# உங்களுக்கு விருப்பமான ஹார்வி துணியைத் தேர்ந்தெடுங்கள்



## ஹார்வி டுவின் டஸ்கர்

அதிநேர்த்தியான தரமுள்ள துணிகள் — பாப்ளின்கள், டிரில் வகைகள், லாங் கிளாத் முதலியன — விலையில் நயமானவை. உறுதியானவை. நீடித்து உழைப்பவை, பல சலவைகளுக்குப் பிறகும் அவைகளின் மிருதுவான அமைப்பும் 'புதுத் தன்மையும்' குன்றாதிருக்க வேண்டி சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டவை.

## ஹார்வி ஸாராடோகா

'டெரீன்' காட்டன் ஷர்டு துணிகள்

மாசற்ற நெசவும், பகட்டான தோற்றமுமுள்ள இந்த ஷர்டு துணிகள் மனதுக்குப் பிடித்த பற்பல வண்ணங்களில் அளிக்கப்படுகின்றன.





## ஹார்வி ஸாராபாண்ட்

'டெரீன்' இணைந்த ஸூட்டிங் துணிகள்

ஆடவர்களின் சீருடைக்கு என்றைக்கும் ஏற்றவை. தேர்ந்தெடுக்க வசதியாக, நேர்த்தியான வெள்ளை நிறத்திலும் மற்றும் லேசான க்ரே முதலிய பல நிறங்களிலும் இவை வழங்கப்படுகின்றன.

*Bensons-1086 JITAM*

தயாரிப்போர்:
மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்,
மதுரை

மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்



## "சிறந்ததுதான்; ஆனால்......?"

"சிறு வயதிலேயே கைத்தொழிலும் பழக வேண்டும். படிப்பும் கற்க வேண்டும். உடல், மனம் ஆத்மா இம்மூன்று அபிவிருத்திகளும் சிறுவயதி லேயே ஏற்பட வேண்டும். இத்தகைய கல்வியினால் தான் நாடு முன்னேற முடியும்"—இந்த எண்ணத் துடன்தான் காந்திஜி 'வார்தா கல்வி' திட்டம் என்கிற அடிப்படைக் கல்வித் திட்டத்தைத் தொடங்கினார்.

இத்திட்டத்தின் ஆதர்ச புருஷராக விளங்கியவர் ஜாகீர் ஹுசேன். கல்விக்காகவே தம்மை அர்ப்பணித் துக்கொண்டவர். ஜமியத் மிலியா இஸ்லாமியா என்கிற கல்வி ஸ்தாபனத்தின் தலைவராக இவர் சேவை செய்தபோது இந்த ஆதாரக் கல்வித் திட்ட வளர்ச்சிக்காக அரும்பாடு பட்டார்.

இந்த ஆதாரக் கல்வி திட்டம் காரிய சாத்யமற்றது. ஒரு 'பைத்தியக்காரத்தனமான திட்டம்' என்றெல் லாம் சிலர் குறைகூறி வந்தனர்.

சென்னை ராஜ்யத்தில் 1952-54ல் திரு ராஜகோபா லாச்சாரியார் முதல் மந்திரியாக இருந்தபோது அமுல் நடத்த முயன்றது இந்த ஆதாரக் கல்வித் திட்டத்தின் அம்சங்களை யொட்டியதுதான்.

ஒரு சமயம் ஜாகீர் ஹுசேனிடம் ஒரு தலைவர் "இந்தக் கல்வித் திட்டம் சிறந்ததுதான். ஆனால் இதை நடத்தி வைக்க நல்ல ஆசிரியர்கள் வேண்டுமே!" என்றாராம். உடனே ஜாகீர் ஹுசேனிடமிருந்து வந்த பதில்: "மற்றக் கல்வித் திட்டத்தை அமுல் நடத்த 'கெட்ட' ஆசிரியர்கள் இருந்தால்போதுமா? -"நஜன்"

---

சமயப் பண்பு அறுவகைச் சமயங்களையும் அடிப்படையாகக் கொண்டது என்பது அறிய முடியும்.

ஒரு முதுபெரும் நாட்டின் நீண்ட வர லாற்றில் ஒருசில சமயங்களில் குறைபாடு உள்ள மக்களின் கை ஓங்குதலும் கூடும். ஒரு தெய்வத்தின் சிறப்பை போற்ற வந்த ஒருசிலர் அத்தெய்வத்தின் போற்றுதலை விடுத்து மறு தெய்வங்களை இகழ முனைவதும் கூடும். மற்றவை நம் நெறிக்குப் புறம் பானவை என்று கூட அவர்கள் துணிந் திருக்கக் கூடும். அவர்களையும் நல்வழிப் படுத்தத் தோன்றிய ஆதி சங்கர பகவத் பாதர் அறுவகைச் சமயங்களும் நம் பண் டைய நெறிக்கு உகந்தவையே என்பதை நிலைநிறுத்தினார். ஒரே தெய்வத்தை வணங் கினாலும், பல்வேறு தெய்வங்களை வணங் கினாலும் அவை பரம்பொருளையே சென் றடைகின்றன என்பது அவரது கோட்பாடு. பக்திப் பெருக்கூட்டும் பல பாமாலைகளைப் பல்வேறு தெய்வங்களின் மேலும் பாடி மகிழ்ந்த ஆதி சங்கரர் நம் பண்டைய நெறி எது என்பதை நமக்கு எடுத்துக் காட்டி யுள்ளார். வாழி அவர் வகுத்த நெறி!

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது ஸன்லைட்




ஸன்லைட் சோப்பினுல் சலவைசெய்து பார்த்தீர்களானுல் தெரியும் வெட்ட வெளிச்சமான உண்மை! சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி! சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை—தூய்மை ஓங்க வெளுக்கும் ஒளி நிரக்க. உங்கள் துணிகள் அனைத்துக்கும் உரியது ஸன்லைட்.

**உங்கள் அன்றாடத் துணிகளின்**
**சலவைக்குரியது ஸன்லைட்**

லின்டாஸ்– S. 62-140 TM (R)

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.



## செய்திப் படங்கள்

✽ சமீபத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய மடத்தின் ஆதரவில் விஜயவாடாவில் ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர்களின் திவ்விய பிம்பம் சீடர்கள் புடைசூழப் பிரதிஷ்டை செய்யப்பட்டது.



✽ கொழும்பு மகளிர் கல்லூரியில் சமீபத்தில் செல்வி பிரமீளாவின் கர்நாடக சங்கீத அரங்கேற்றம் இலங்கைப் பிரதம மந்திரி திரு டட்லி சேனநாயகா அவர்கள் தலைமையில் விமரிசையாக நடைபெற்றது.




✽ ஆனந்த மார்க்கப் பிரசாரகர்கள் மதுராந்தகத்தில் பஞ்சப் பகுதிகளுக்குச் சென்று பஞ்ச நிவாரணப் பணிகளில் முழுமூச்சுடன் ஈடுபட்டனர். சிறுவர் சிறுமிகளுக்கு உணவு வழங்குவதைப் படத்தில் காணலாம்.

✽ சென்னை நகரசபை ஸ்டேடியத்தில் சமீபத்தில் விட்டல் கோப்பை கால்பந்தாட்டப் போட்டியின் இறுதி ஆட்டம் ரிஸர்வ் பாங்க் குழுவினருக்கும் ஐ.ஸி.எப். குழுவினருக்கும் நடைபெற்றது. ஐ.ஸி.எப். குழுவினர் ஒரு கோல் போட்டு வெற்றி பெற்றனர். இறுதி ஆட்டத்தில் கலந்து கொண்டவர்களையும் கால்பந்தாட்ட நிர்வாகிகளையும் காணலாம்.





# தீராத விளையாட்டு

## அத்தியாயம் 12

சித்திரா பௌர்ணமி. வைகையாற்றில் அழகர் எழுந்தருளும் திருநாள். மதுரை நகரமே கொள்ளாதவாறு பல லட்சக் கணக்கில் வெளியூர்வாசிகள் திரண்டு வந்திருந்தார்கள். ஆற்றின் விசாலமான மணற் பரப்பிலும் சரி, நகரத்தின் சின்னஞ்சிறு சந்து பொந்துகளிலும் சரி, எங்கு பார்த்தாலும் ஒரே மக்கள் வெள்ளம். சுட்டுப் பொசுக்குகிற அந்த வெய்யிலின் உக்கிரத்தை யாருமே பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. பெரும்பாலானவர்களுக்குக் காலில் செருப்பு கிடையாது. அழகர் கோயிலுக்குச் சென்று முடியிறக்கி விட்டு வந்ததால் பலருக்குத் தலையில் கூந்தலும் இல்லை. காலுக்கும் தலைக்கும் பாதுகாப்பின்றி ஆடவரும், பெண்டிரும், குழந்தைகளும் நிலவில் நடப்பதுபோன்று சாவகாசமாக இங்கும் அங்கும் போய்க்கொண் டிருந்தார்கள். அப்படி நடந்து கொண்டேதான் சிற்றுண்டி யருந்தித் தங்கள் பசியைத் தணித்துக்கொண்டார்கள்; தாய்மாரும் கைக்குழந்தைகளுக்குப் பால் கொடுத்தார்கள். உட்காருவதற்கு இடமும் கிடையாது ; நேரமும் கிடையாது.

கிராமத்துப் பக்த கோடிகளில் பலர் கோஷ்டி கோஷ்டியாகப் பாடிக்கொண்



# கு. அழகிரிசாமி

டும் ஆடிக் கொண்டும் போனார்கள். சில இடங்களில் ஒரே ஒருவன் மட்டும் தீப்பந்தம் பிடித்து ஆடிக் கொண்டு, சற்றைக்கொரு தடவை தன் காலி லேயே கனமான நூல் சவுக்கினால் சுற்றி நிற்பவர்களின் காதுகள் செவிடு படச் 'சடேர் சடேர்' என்று அடித் துக் கொள்வான். அவனைச் சுற்றி ஒரு கூட்டம். இப்படிப் பந்த சேவை எடுக் கும் பக்தர்கள் நூற்றுக் கணக்கில் மூலைக்கு மூலை தனித் தனியாக ஆடிக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவர் உடம்பும் வேர்வையில் குளித்திருந் தது. நெற்றியில் மிகப் பெரிய பட்டைகளாகப் போட்டிருந்த திருமண் ணும் ஸ்ரீ சூர்ணமும் கரைந்து முகத்தி லும் மார்பிலும் வழிந்து, அவர் களுடைய பக்தி ஆவேசத்தின் உச்சத் தைச் சித்திரமாக எழுதிக் காட்டுவது போல் காட்சியளித்தன.

எங்கே திரும்பினாலும் கண்ணுக்கு ஜன சமுத்திரம் தென்பட்டது போல், எல்லாத் திசைகளிலும் சந்தடிகளும், இரைச்சல்களும், நானாவித ஒலிகளும் விண்ணை முட்டிக் கொண்டு முழங் கின. பறைகள், உருமிக் கொட்டுகள், காதைத் துளைக்கும் 'சத்த'க் குழல்கள், தப்பட்டைகள் — இவற்றின் முழக்கம் கேட்காத பகுதி இல்லை. கண்ட கண்ட இடங்களிலெல்லாம் ஒலி பெருக்கிகள் சினிமாப் பாட்டுக்களை யும் அலறிக் கொண்டிருந்தன.

அந்தக் கடும் வெய்யிலையும், ஊர் தாங்காத ஜனக் கூட்டத்தையும், தலை கிறங்கச் செய்யும் இரைச்சல்களை யும் பார்த்து, இன்று ஒரு நாளாவது மதுரையை விட்டு வெளியே போய் விட்டால் நல்லது என்று சிலர் நினைத் திருப்பார்கள். ஆனால் பெரும்பாலான வர்கள்—முக்கியமாக வெளியூர்வாசிகள்—ஆயிரம் அசௌகரியங்களுக்கு உள் ளானாலும் கூட்டத்தையும், நெரிசலை யும், இரைச்சலையும் ஒரு சமயம் வியப்பதும் ஒரு சமயம் ரஸிப்பது மாகத்தான் இருந்தார்கள். அவர் களுக்குத் திருவிழாவின் பெருமையே அந்த நெருக்கடியிலும் சந்தடியிலும் தான் பெரும்பாலும் அடங்கியிருந் தது. 'என்ன கூட்டமப்பா, என்ன கூட்டம்! என்னுப் போட்டால் என்னு விழாது. மதுரைச் சித்திரா பௌர்ணமி கூட்டத்தைப் போல் இந்தப் பூலோ கத்திலே இன்னொரு கூட்டத்தைப் பார்க்க முடியுமா? எல்லாம் அந்த அழகருடைய மகிமை!' என்று தங்கள் தங்கள் கிராமங்களுக்குப் போய் அடுத்த ஆண்டு சித்திரா பௌர்ணமி வரும் வரையில் சொல்லிச் சொல்லி அனுபவித்து மகிழ விரும்புகிற அந்த மக்களுக்கு இந்தப் பெருங் கூட்டத் தைப் போல், கண்ணுக்கு விருந்தும், இந்தப் பேரிரைச்சலைப் போல் செவிக்கு உணவும் வேறு இருக்க முடியுமா?

கண்ணுக்கும் காதுக்கும் மட்டு மல்ல, ஐம்புலன்களுக்குமே அந்த விழாவில் விருந்து கிடைத்தது. மூக்கு நுகர்ந்த பல்வேறு நெடியான மணங் களை வகைப்படுத்திச் சொல்ல முடி யுமா? மல்லிகை, மருக்கொழுந்து, சந்தனம் போன்ற நறுமணங்களுடன் திக்குமுக்காட வைக்கும் புகை மண்ட லம், செவிகளைத் தூர்க்கும் புழுதிப் படலம், நினைக்கக்கூட முடியாத பல் வேறு துர்க்கந்தங்கள் போன்றவை யும் ஒன்று கலந்து ஊர் முழுதும் ஒரு மூட்டமே போட்டிருந்தது. மக் களின் நாவுக்கு விருந்தளிக்கத் தெருத் தெருவாகக் குவிக்கப்பட்டிருந்த பல வர்ணப் பலகாரங்களைப் பெயர் குறிப் பிட்டுச் சொல்ல முடியாது. அத்தனை வகைகள்; அத்தனை வர்ணங்கள்.

மொத்தமாக இத்தனையையும் சேர்த்து வைத்துப் பார்க்கும் போது வெறுக்கத் தோன்றுமா, அல்லது விரும்பத் தோன்றுமா என்பது அவர் அவர்களுடைய ரசனையைப் பொறுத்த விஷயம் என்றே சொல்ல வேண்டும். ஆனால் ரங்கராஜனுக்கு அப்போது எதுவுமே தோன்றவில்லை. 'திருவிழா என்றால் இப்படித்தான் இருக்கும்' என்ற ஓர் எண்ணம் மட்டுமே அவ உள்ளத்தில் நிறைந்திருந்தது. அதி விருப்புமில்லை; வெறுப்புமில்லை. சன்னு சிப் புதூருக்குப் போய்க் கிராமவாசி களைப் பார்த்து, அவர்களோடு பேசி, அவர்களில் சிலருடைய பேரன்பையும் உபசரிப்பையும் பார்த்து விட்டு வந் திருந்த அவனுக்கு நாட்டுப்புறக் கூட் டத்தைப் பார்க்கும்போது ஒருவித பரிவும்கூட உண்டாயிற்று. 'மாட சாமியைக் குடும்பத்துடன் திருவிழா வுக்கு வரச் சொல்லியிருக்கலாம்' என்று கூட ஒரு முறை நினைத்துக் கொண் டான். முந்தின நாள் இரவு தன் வீட்டில் வந்து தங்கி விட்டுப் போன ஒரு கிராமக் குடும்பத்தின் நினைவும் அவனுக்கு அப்போது வந்து ஒருவித திருப்தியை அளித்தது.

திருவிழாவை முன்னிட்டு அருணாசல முதலியாரும் அவருடைய மனைவி கோமதியம்மாளும் சாத்தூரிலிருந்து வந்திருந்தார்கள். திருச்சியி லிருந்து சுந்தரியின் கணவன் கணேசன் வந் திருந்தான். இவர்களெல்லாம் எதிர் பார்த்த விருந்தினர்கள். எதிர்பாரா மலே ஒரு குடும்பமும் முந்தின நாள் வந்து சேர்ந்தது.

இரவு ஏழு ஏழரை மணியிருக்கும். மாடியில் சிலரும், கீழ் வீட்டில் சிலரு மாக இருந்தார்கள். வீட்டில் இல்லா மல் வெளியே போயிருந்தவர் நட ராஜ முதலியார் ஒருவர்தான். தங்கம் சொன்னாள்: "பெரியப்பா எங்கே போயிருப்பார்? அம்மாவுக்குப் பூ வாங் கப் போயிருப்பார்."

தெரு வாசலிலிருந்து திடீரென்று அருணாசல முதலியார் கூச்சல் போடு வது மாடிக்குக் கேட்டது. ரங்கராஜ னுக்குத் தூக்கிவாரிப் போட்டது. கூச்சலைச் செவிமடுத்துக் கேட்டான்.

"அட போப்பான்னு போகமாட்டே போலிருக்கே! இது என்ன மடமா சத்திரமான்னு கேட்டேன். சொல்லச் சொல்ல உன் பாட்டிலே மூட்டை முடிச்சை இறக்கி வைக்கிறியே!...."

யாரைப் பார்த்து அவர் இப்படிப் பாய்கிறார் என்று தெரியவில்லை. ரங்க ராஜன் வேகமாக மாடியை விட்டு இறங்கி வந்தான். வாசல் நடையில் நின்று எட்டிப் பார்த்துக் கொண் டிருந்த சுந்தரியையும், தங்கத்தையும் கணேசனையும் விலக்கிக் கொண்டு முன்னே சென்றான். அவன் போன வேகத்தில் எல்லோருக்கும் பின்னால் சற்று விலகி நின்று கொண்டிருந்த தாயாரை அவன் பார்க்கவில்லை.

தெரு வாசற்படிக்குச் சென்றதும், அருணாசல முதலியார் பாய்ச்சலோடு

# ராம்தீர்த் பிரஹமி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)

கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கரு நிறத்தையும், பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக்கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்குக் குளிர்ச்சி யளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும், அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதி யான நித்திரையை அளிக்கிறது.

**SHRI RAMTIRTH YOGASHRAM**

**DADAR - BOMBAY-14**

## "YOGIC CLASSES"

எமது சென்னை ஆபீஸில் யோகாசன வகுப்புகள் நடத்தப்படுகின்றன

மதராஸ் பிராஞ்சு: 25, நைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ் – 3

போன்: 34258

பண்டிட்
D.கோபாலாசார்லுவின்

# பால ப்ராஸ

## குழந்தைகளுக்கு ருசியான டானிக்

*1898 ஆண்டிலிருந்து பிரசித்தி பெற்றது...*

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட்

# எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந் திருந்து, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு, மேலாகப் பரவும் படை, தோல் உரிதல், எரிச்சல், பருக்கள், படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டுபண்ணுகின்றன. சாதாரண சிகிச் சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக் கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைக ளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவ தில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து நிக்ஸோடர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்று விடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், வசீகர மாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதை களின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்று பூர்ண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.

நிற்பதைப் பார்த்தான். அவருக்கு எதிரே ஒரு வெளியூர்க்காரனும், அவன் மனைவியும், சுமார் எட்டு வயது மதிக்கத் தகுந்த ஒரு சிறுவனும் நின்று கொண்டிருந்தார்கள். பெண்ணின் இடுப்பில் ஒருவயதுக் குழந்தை. அவள் தலையில் ஒரு பெரிய துணி மூட்டை இருந்தது. அவளுக்கு முப்பது வயதுக்கு மேல் இராது.

அவளுடைய கணவன் பெரிய கறுப்பு மீசையோடும் முரட்டுச் சட்டையோடும் தலையில் முண்டாசுடனும் நின்றான். ஒரு பெரிய சாக்கு மூட்டை அருணாசல முதலியாரின் காலடியில் ஒரு படியில் இறக்கி வைக்கப்பட்டிருந்தது.

''சித்தப்பா ! என்ன சமாசாரம் ?'' என்று கேட்டான் ரங்கராஜன்.

அவர் இவனுக்குப் பதில் சொல்லாமல், வந்தவனை விரட்டுவதிலேயே குறியாக இருந்தார்.

''ஏய்!' தூக்கு மூட்டையை! பேசாமல் வண்டியை விடு. போய் எங்கேயாவது கோயில் குளத்திலே கிடந்து திருவிழாப் பார்த்துட்டுப் போவியா, என்னமோ சித்தப்பன் வீட்டுக்குள்ளே நுழையற மாதிரியில்லே உள்ளே வாறே ? தூக்கு மூட்டையை !''

ரங்கராஜன் அவரைத் தடுத்து, அவருடைய ஒரு கையையும் பிடித்துக் கொண்டு, ''சித்தப்பா ! கொஞ்சம் இருங்க.... இவங்க யாருன்னு முதல்லே சொல்லுங்க '' என்றான்.

''யாரப்பா கண்டா, இவன் யாரு எவரு என்கிறதை ! திருப்பூவணத்துக் காரனும். பிள்ளைக்கு மொட்டையடிக்க வந்தானும். வந்தவன், நேரே கோயிலைப் பார்த்துப் போவானா, இங்கே வருவானா ? எப்பவோ இங்கே வந்து இருந்திருக்கிறானும்! பேசற பேச்சைப் பாரேன் !....'' — உடனே அவன் பக்கம் திரும்பினார்.

''போய்யா நீ! எடு மூட்டையை. தொண்டைத் தண்ணியை ஏன் வாங்குறே?'' என்று இரைந்தார் முதலியார்.

இதைக் கண்டு தங்கமும் சுந்தரியும் அவளுடைய கணவனுமே ரஸித்துக் கொண்டு நின்றார்கள். சிரித்த வாயை யாருமே மூடவில்லை.



படாதிபதி-1 : என் பெண்ணுக்குப் பாடத் தெரியுமான்னு கேட்டீர்களே ! அவளுக்காகப் பின்னணிப் பாடகி சக்குவை ஏற்பாடு பண்ணிவிட்டேன். இனி பெண் பார்க்க உங்க பையனை அழைத்து வரலாம்.

படாதிபதி-2 : சந்தோஷம் ! என் பையனுக்குப் பதிலாக 'டூப்' பாக நடிக்கும் சுந்தரத்தை அனுப்புகிறேன்.

ரங்கராஜன் மறுபடியும் அவரைக் கையமர்த்தி விட்டு, வந்தவனை நோக்கி, ''நீங்க இந்த வீட்டுக்கு வந்திருக்கீங்களா?'' என்று கேட்டான்.

அவனுடைய மரியாதையான பேச்சையும், தாழ்ந்த குரலையும் பார்த்த முதலியார், அவனைப் பரிகசிக்கும் குரலில் தம் குரலையும் அதே மாதிரி மாற்றிக் கொண்டு ''அவாள் இந்த வீட்டுக்கு முன்னாலே வந்திருக்கிறாங்களாம். வந்து நாலு நாட்கள் இருந்து விருந்து சாப்பிட்டு விட்டுத்தான் போனாங்களாம் ! இந்தப் பெரிய மனுஷாளை அப்போ இந்த வீட்டிலே எதிர்கொண்டு அழைச்சு உபசாரம் பண்ணினாங்களாம் !...... '' என்று சொல்லி விட்டு, ''ராஜா ! நீ உள்ளே போ !'' என்றார்.

பெண்கள் கலகல வென்று சிரித்தார்கள். திருச்சி மாப்பிள்ளையும் சேர்ந்து சிரித்தார்.

ரங்கராஜன் மேலும் ஒரு படி கீழே இறங்கிச் சென்று, ''நீங்க யாரு ? எந்த ஊரு ?'' என்று அந்தரங்கமாக அவனைக் கேட்டான்.

வெளியூர்க்காரன் ஏற்கனவே அருணாசல முதலியாரிடம் சொன்னதைத் திரும்பவும் சொல்லத் தொடங்கினான். அவன் பேசுவதற்கு வாயைத் திறந்தானோ இல்லையோ, அவனுடைய மனைவி முகத்தைச் சினந்து கொண்டு, ''அட, நீங்க ஒண்ணு ! பேசாமல் வாங்க. திலுப்பித் திலுப்பிக் கதை சொல்லிக்கிட்டு நிக்கிறீங்களே! அந்தப் பெரிய மனுஷன் இந்தப் பேச்சைப் பேசுறார். இங்கே ஏன் நிக்கணும்னு கேட்கிறேன். வேத்து ஆளுகன்னு தெரிஞ்சதும் பேசாமல் போயிற வேண்டாம் ? அதில்லே மருவாதை ?'' என்று சொல்லி அவன் கையைப் பிடித்து ஒரு வெட்டு வெட்டி இழுத்தாள்.

அவனும் முண்டாசை இறுக்கிக் கொண்டு மூட்டையைப் படியிலிருந்து தூக்கப் போனான்.

ரங்கராஜன் அந்தப் பெண்ணைப் பார்த்து, ''கொஞ்சம் பொறுமையாய்ப் பேசுங்களேன் ! இப்படிக் கோபிச்சுக்கிட்டா எப்படி ?'' என்று உரிமையோடு கேலி செய்வதைப்போல் பேசி விட்டு மூட்டையைத் தூக்கப்

போனவனைப் பார்த்து, "உங்களுக்கு எந்த ஊர்?" என்று கேட்டான்.

அவன் மனைவி அப்புறம் தடுக்காததால் அவனும் முழுக்கவே 'கதை'யைச் சொல்லி முடித்தான்.

முதலியார் தம் தலையில் இலேசாகத் தட்டிக் கொண்டு, "சிவ சிவா!" என்றார். பிறகு, "ராஜா, நீ உள்ளே வா, ராஜா! தெருவிலே போறவனெல்லாம் பார்த்துச் சிரிச்சுட்டுப் போறானே!" என்றார்.

"நீங்களும் சேர்ந்து சிரிங்க, சித்தப்பா!"

இவ்வாறு சொன்ன ரங்கராஜன் தன் தாயாரின் முகம் தெரிகிறதா என்று உள்ளே எட்டிப் பார்த்தான். வாசல் நடையில் நின்று கொண்டிருந்த அந்த நால்வரின் முகங்கள்தாம் தெரிந்தன.

'அம்மா எங்கே போயிட்டா?' என்று யோசித்த அவனுக்கு அவள் ஏன் வெளியே வரவில்லை என்பதும் புரிந்தது. மைத்துனரும் மாப்பிள்ளையும் நிற்கும்போது, தான் அங்கே வந்து நிற்பது சரியல்ல என்று, சம்பிரதாய முறைப்படி அவள் வெளியே தலை காட்டவில்லை.

'நல்ல வேளை! அம்மா இங்கே நடந்ததைப் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் அவளால் தாங்கியிருக்கவே முடியாது.'

ரங்கராஜன் வெளியூர்க் குடும்பத்தை உள்ளே அழைத்தான். அந்த எட்டு வயதுச் சிறுவனின் கையைப் பிடித்து, "வா, தம்பி!" என்று முகமன் சொன்னான். சிறுவன் பயத்தினால் அவனிடமிருந்து தன் கையைப் பிடுங்கித் தன் முதுகுக்குப் பின்னால் மறைத்து வைத்துக் கொண்டான்.

அருணாசல முதலியாருக்கு ஒன்றுமே ஓடவில்லை. "ராஜா!....." என்று திகைப்போடு ஒரு குரல் கொடுத்துவிட்டு மௌனமாகி விட்டார்.

ரங்கராஜன் உடனே தன் தாயார் இருக்கும் திசை நோக்கி, "அம்மா!" என்று அழைத்தான்.

ஞானகியம்மாள் வெளியே வருவதற்கு வழி விலகிக் கொடுப்பது போல் முதலியாரும், மாப்பிள்ளையும் வேகமாக அவ்விடத்தை விட்டு நகர்ந்து மாடிக்குப் போய் விட்டார்கள். அம்மாள் சிரித்துக் கொண்டே வெளியே வந்து நின்றாள்.

"இவங்களுக்குத் திருப்பூவணமாம். பிள்ளைக்கு முடியிறக்க அழகர் கோயிலுக்கு வந்திருக்கிறாங்க. இந்தப் பெரிய பையனுக்கு முடியிறக்க வந்திருக்கிறாங்க. இவங்களைச் சித்தப்பா வெரட்டு வெரட்டுன்னு வெரட்டுறார்!"

தங்கம் உடனே குறுக்கிட்டு,—"கண்ணுசாமிப்பிள்ளை இப்போ இல்லையே!" என்றாள். 'அவர் எப்பொழுதோ இந்த வீட்டை யாருக்கோ விற்று விட்டுப் போய் விட்டார், அப்படியிருக்க, அவரைத் தேடி வந்தவர்களை — அதிலும் அசல் பட்டிக்காட்டு அழுக்கு மூட்டைகளை — நாம் எதற்காக உள்ளே அழைப்பது?' என்று கேட்கும் பாவனையில் தங்கம் பேசினாள்.

ரங்கராஜன் அவளைப் பார்த்துத் திரும்பினான்: "தங்கம்! கண்ணுசாமிப் பிள்ளை இங்கேதான் இருக்கிறார். உனக்குத் தெரியாது. ஒருத்தன் நம்பித் தேடி வர்ற மாதிரி வாழ்ந்த மனுஷனுக்குச் சாவுகூடக் கிடையாது. அவன் இங்கேயும் இருப்பான்; திருப்பூவணத்திலும் இருப்பான்."

இவ்வாறு சொல்லிவிட்டு அம்மாவைப் பார்த்து, "ஒரு காலத்திலே இது கண்ணுசாமிப்பிள்ளை என்கிறவருக்குச் சொந்தமா இருந்த வீடுன்னு நமக்குத் தெரியும். ஆனால் அவர் எப்பேர்ப்பட்ட மனுஷன் என்கிறது இப்பத்தான் தெரியுது. இல்லையா, அம்மா?" என்றான்.

கிராமத்துக் குடும்பத்தை மீண்டும் உள்ளே அழைத்தான். ஜானகியம்மாளும் 'வாங்க' என்றாள்.

வந்தவர்கள் ஆச்சரியப்பட்டு நின்றார்கள். ரோஷம் மிகுந்த அந்தக் கிராமத்துப் பெண்ணும் கணவனைக் கையைப் பிடித்து இழுத்துச் செல்லாமல் ஜானகியம்மாளின் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

அவன் அவளைப் பார்த்து, "வா, பெரியம்மா கூப்பிடுறாங்க, சும்மா வா" என்று சொல்லி மூட்டையைத் தூக்கிக் கொண்டு வாசல் நடைப் பக்கம் நகர்த்தி வைத்து, "இன்னிக்கு ராத்திரி ஒரு பொழுது; நாளை ராத்திரி ஒரு பொழுது — இப்படி இங்கேயே இருந்துட்டுப் போறோம். கோயிலிலே போய்ப் பொங்கிச் சாப்பிட்டுக்கிடுறோம்" என்றான்.

"நீங்க உள்ளேயே வந்து இருக்கலாம்" என்று அவர்களை நடையைத் தாண்டி நடுக் கூடத்துக்கே அழைத்துக் கொண்டு வந்து உட்கார வைத்தான் ரங்கராஜன். அப்போது தங்கம் யாருக்கும் தெரியாமல், ஆனால் சுந்தரிக்கு மட்டும் தெரியும்படியாகத்

# ஓர் பரிபூரண சேவைத் திட்டம்

பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு - கப்பல் - விபத்து

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர் கோயமுத்தூர், கொச்சி கோவில்பட்டி

4





உங்களுக்கும்
உங்கள் நண்பர்களுக்கும்

மகிழ்ச்சி அளிப்பது......
நீடித்த நறுமணம் வீசுவது



Priya
PERFUME

பிரியா
வாசனை

புத்தம் புதிய மலர்களின்
வாசனைக்கு ஒப்பானது

பெங்கால் கெமிகல்

கல்கத்தா ▪ பம்பாய் ▪ கான்பூர் ▪ டெல்லி

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

**பிரைவேட் லிமிடெட்**

(ஸ்தாபிதம் : 1947)

**"வீணு விகார்" 17-A, ஃபினாங்க் ரோடு**

ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்

**சயான் (கிழக்கு) பம்பாய் - 22 D. D.**

டெலிபோன் : 471455 – தபால்பெட்டி : 6759 – தந்தி : GROWRICH

**1969 ஜூனுக்குரிய புதிய குருப்புகள் ஆரம்பம்**

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட குருப்புகள்

| குறுகிய காலம் : 25 மாதங்கள் | | | நீண்ட காலம் : 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி : 7-6-1969 | | | சேருவதற்கு கடைசி தேதி : 21-6-1969 | | |
| முதல் ஏலத் தேதி : 8-6-1969 | | | முதல் ஏலத் தேதி : 22-6-1969 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| A | 200/- | 5,000/- | E | 500/- | 20,000/- |
| B | 100/- | 2,500/- | | | |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | | | |
| G | 20/- | 500/- | G | 125/- | 5,000/- |

நீண்ட காலம் : 50 மாதங்கள் :– ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு.

சேருவதற்கு கடைசி தேதி : 14-6-1969 – முதல் ஏலத் தேதி : 15-6-1969

| வகுப்பு | தவணை | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/- | 1,000/- |

வேலை நேரம் : காலை 8 மணி முதல் 10-30 மணி வரை<br>மாலை 4 மணி முதல் 7-30 மணி வரை

**வார விடுமுறை : திங்கட்கிழமை**

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி 414, மதராஸ்-5

கிளைகள் : பெங்களூர் – கல்கத்தா – புது டில்லி

தெளிவான விலாசதாரர்களுக்கு விதிகள் அடங்கிய புத்தகம் இலவசமாக அனுப்பப்படும்

சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

தன் மூக்கைப் பொத்திக் கொண்டாள்.

மேற்கொண்டு செய்ய வேண்டியதைத் தன் தாயாரே செய்து விடுவாள் என்பது அவனுக்குத் தெரியும். அதனால் அவன், ''அம்மா! நான் மாடிக்குப் போறேன்'' என்று மட்டும் சொல்லி விட்டு மேலே போனான்.

அவனைக் கண்டதும் சித்தப்பா தம் முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

ரங்கராஜனே பேசினான்: ''சித்தப்பா! ஏழு வருஷங்களுக்கு முன்னாலே, இங்கே கண்ணுச்சாமிப் பிள்ளை இருக்கிறப்போ இவங்க இங்கே வந்து வாசல் வராந்தாவிலே உட்கார்ந்திருந்தாங்களாம். அவர் 'முன்பின் தெரியாத இவங்களை நீங்க விரட்டின மாதிரி விரட்டாமே, அன்பாதரவாப் பேசினாராம். வராந்தாவில் தங்கியிருக்க இடமும் கொடுத்தாராம். அதனாலே, 'மதுரையிலே நமக்கு வேண்டிய ஒரு வீடு'ன்னு நினைச்சி இந்த வீட்டுக்கு வந்துட்டாங்க.....''

''ராஜா!.... நீ இன்னும் இப்படி விவரம் தெரியாத பிள்ளையாயிருக்கிறயே! உம்? நாளைக்கு நீ வக்கீல் வேலை பார்க்கப் போகிறவன். பெரிய பெரிய பணக்காரனெல்லாம் உன்னைத் தேடி வரணும். நீயும் அந்தஸ்தா கௌரதையா இருக்கணும். ஆனா, நீ இந்த மாதிரி இருக்கிறயே?'' என்று அங்கலாய்த்தார் முதலியார்.

''எந்த மாதிரி இருக்கிறேன்?'' என்று சிரித்துக் கொண்டே அவன் கேட்டான்.

''இப்படி இருந்தால் உன்னை எவன் மதிப்பான்? கூலிக்கார ஜனங்களையெல்லாம் நீ வீட்டுக்குள்ளே விட்டால் உன்னை எவன் மதிப்பான்னு கேட்கிறேன். தினமும் ஒரு பைத்தியக்காரப் பயலுக்கு நீயும் உங்க அம்மாவும் சேர்ந்து உபசாரம் பண்றதாத் தங்கம் சொன்னாள். அது பத்தாதுன்னு, இந்தப் பட்டிக்காட்டுக் கூட்டத்தையும் உள்ளே விட்டிருக்கிறே....இதெல்லாம் எங்க தப்பு! உனக்குக் காலாகாலத்திலே ஒரு கால் கட்டுப் போட்டிருந்தால், பொறுப்புத் தெரிஞ்சிருக்கும். நாங்க அதை இன்னும் செய்யாமல் இருக்கிறோம் பாரு. அதனாலே இன்னும் நீ வெள்ளையாட்டுப் பிள்ளையாவே இருக்கே! .... பொறு! இந்த வருஷத்துக்குள்ளேயே எல்லாத்தையும் ஒழுங்கு பண்ணிப்புடுறேன். சொல்லப் போனால், நான் இப்போ மதுரைக்கு வந்ததே அதுக்குத்தான். என்னமோ திருவிழாவுக்கு வந்திருக்கிறேன்னு நினைச்சிக்கிடாதே!....''



''உன் கை மூளியா இருக்கு வளையல் போட்டுக்கோன்னு சொல்லிண்டு வர்றேனே, அதைக் காதில் போட்டுக்கக்கூடாதா ?''

'' அதைத்தான் காதில் போட்டுக் கொண்டு விட்டேனே !''

அருணாசல முதலியார் பேசிக் கொண்டிருக்கும் போதே, அது வரையிலும் மொட்டை மாடியில் உலாவிக் கொண்டிருந்த மாப்பிள்ளை கணேசன் அறைக்குள் வந்து நுழைந்தான்.

மாப்பிள்ளையை அருகில் வைத்துக் கொண்டு, ரங்கராஜனின் பைத்தியக்காரத்தனங்களைப் பகிரங்கமாகக் கண்டனம் பண்ணிப் பேசுவது குடும்ப கௌரவத்துக்கு இழுக்கு என்று கருதிய முதலியார், ''மாப்பிள்ளை வாங்க, உட்காருங்க'' என்று சொல்லி விட்டு, ரங்கராஜனைப் பார்த்து, ஏற்கனவே பேசிக் கொண்டிருந்த ஏதோ தமாஷ் பேச்சின் தொடர்ச்சி போல, ''உனக்கு என்னப்பா, நீ ராஜா! பெரும் ராஜாதான்; யோகமும் ராஜயோகம்தான்!'' என்று குரலை எக்களிப்பாக உயர்த்தி நீட்டி முழக்கினார்.

அவருடைய சமயோசித சாமர்த்தியத்தைக் கண்ட ரங்கராஜன் பிரமித்துப் போய் விழித்தான். உடனே வயிற்றைப் பிடித்துக் கொண்டு குலுங்கக் குலுங்கச் சிரித்தான்

''சித்தப்பா! என்ன இது...! அடேயப்பா! உங்களை ஜயிக்க அந்த ஆண்டவனாலும் முடியாது போலிருக்கே, சித்தப்பா!....''

அவன் வியப்பை வெளிப்படுத்திப் பேசிய ஒவ்வொரு சொல்லையும் முதலியார் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் கேட்டுக் கொண்டிருந்தார். அப்புறம் அப்பாவி மாதிரி முகத்தை வைத்துக் கொண்டு, ''உம், பேசு! என்னைப் பார்த்தால் உனக்கு அப்படி இருக்கப்பா, நீ என்ன செய்வே?'' என்று சொல்லிவிட்டு எழுந்தார்.

(தொடரும்)

# இளங்கோவின் துறவு

அய்க்கண்



முன்னுரை : 'அரசனாகும் ஊழ், இளையவனுக்கே இருக்கிறது' என்று சொன்ன சோதிடத்தைப் பொய்யாக்க, தமையன் செங்குட்டுவனுக்காக அரச பதவியைத் தியாகம் செய்தார் இளங்கோ. அரச வாழ்வைத் துறந்து, மனைவியும் மக்களுமாக இல்லறத்தாராக வாழ்ந்திருக்கலாமே? வாழ்வையும் துறந்து ஏன் சமண அடிகளாக வேண்டும்? - என்ற வினா, நான் சிலப்பதிகாரத்தைப் படிக்கும்போதெல்லாம் தோன்றும். அதற்குச் சரியான விடை எந்த அறிஞரும் விமரிசகரும் சொல்லவில்லை. 'இப்படி இருக்கலாமோ? ஏன் இப்படி இருக்கக் கூடாது?' என்று சிந்தித்து, இந்தக் கதையைச் சிலரிடம் சொன்னேன் நான். சிலர் 'துணிச்சலான கற்பனை' என்றார்கள். சிலர் 'அபத்தமான கற்பனை' என்றார்கள். புதுமையான முயற்சி என்றால் இப்படி இரு வகை விமர்சனம்தானே வரும்?

இந்தக் கதையை ஏனோ தானோ என்று பொறுப்பற்ற முறையில் கற்பனை செய்து விடவில்லை. கல்லூரியில் தமிழாசிரியனாயிருப்பதால் சிலப்பதிகாரத்தைப் பல தடவை படிக்கும் அவசியத்துக் குள்ளானவன்தான் நான். சிலப்பதிகாரத்தில் காணப்படும் செய்திகளுக்கு முரண்பாடான நிகழ்ச்சி எதுவும் இக்கதையில் இல்லை என்று உறுதியாகச் சொல்கிறேன். சிலப்பதிகாரத்திலும் அக்கால வரலாற்றிலும் கூறப்பட்டுள்ள செய்திகளுக்கு இடையே சில கற்பனைகளை நுழைத்து நிகழ்ச்சிகளை இணைத்திருக்கிறேன். நான் செய்தது அவ்வளவே.

இக் கதை, உண்மை வரலாறு என்று என்னால் எப்படிச் சாதிக்க முடியாதோ அதேபோல் இது முழுக் கற்பனை என்றும் உங்களால் தள்ளிவிட முடியாது. இது வரலாறு கலந்த கற்பனை; அல்லது கற்பனை கலந்த வரலாறு - எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்!

இக் கதை எழுதுவதற்குப் பெருதவியாக இருந்த சிலப்பதிகார நூலாசிரியர் இளங்கோவடிகளுக்கும், 'சேரன் செங்குட்டுவன்' என்னும் அரிய ஆராய்ச்சி நூலாசிரியர் மு. இராகவய்யங்கார் அவர்களுக்கும் என் பணிவார்ந்த நன்றியும் வணக்கமும் உரித்தாகுக.

★

**வ**ஞ்சியில் பேரத்தாணி மண்டபத்தில் கொலுவிருந்தான் இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன்.

மன்னரின் வலது புறத்தில் செங்குட்டுவனும் இடது புறத்தில் இளங்கோவும் அமர்ந்து, அரசவை அலுவல்களைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அமைச்சர் அழும்பில்வேள், செங்குட்டுவன் அருகில் உட்கார்ந்து, ஏதேதோ வருவாய் சம்பந்தப்பட்ட ஏடுகளைப் புரட்டிக் கொண்டிருந்தார். இளங்கோவின் பக்கத்தில் படைத் தலைவன் வில்லவன் கோதை கம்பீரமாக அமர்ந்திருந்தான். ஐம்பெருங் குழுவின் மீதி உறுப்பினர்களாகிய பெருங்கணியரும், தூதுவர் தலைவன் சஞ்சயனும், சாரணரும், அம்மாபெரும் மண்டபத்தின் வலப் பக்கத்தில் அமர்ந்திருந்தனர். இடது பக்கத்தில் கரணத்தியலவர், கரும விதிகள், கனகச் சுற்றம், கடை காப்பாளர், நகர மாந்தர், படைத் தலைவர்கள், யானைவீரர் என்னும் எண்பேராயத்தவரும் அவையை அலங்கரித்தார்கள்.

அப்போது உள்ளே நுழைந்தான் வாயிற்காவலன் ஒருவன்.

''மன்னர் பெருந்தகை வாழ்க! அவையை நாடி, மாளுவ நாட்டிலிருந்து ராஜ சோதிடர் வந்துள்ளார்.''

'' அவரை உரிய மரியாதையுடன் அழைத்து வா'' என்று கட்டளை யிட்டான் நெடுஞ்சேரலாதன்.

சிறிது நேரத்தில் உள்ளே நுழைந்தார் மாளுவ நாட்டு ராஜ சோதிடர். சிவந்த மேனியும், அறிவுக் களை ததும்பும் முக ஒளியும், கம்பீரமான நடையும், கையில் நிறைந்த ஓலைச் சுவடிகளும், பார்ப்பவர் மனத்தில் பயம் கலந்த பணிவை ஏற்படுத்தும் எடுப்பான தோற்றமும் கொண்ட சோதிடர் உள்ளே நுழைந்ததும், அவையினர் எழுந்து, மரியாதை செய்து வரவேற்றனர்.

''வருக வருக ராஜ சோதிடரே! உங்களை அன்போடு வரவேற்கிறோம்... நமது நண்பர் மாளுவ வேந்தர் நலமாயிருக்கிறாரா?.... இதோ — இங்கே அமருங்கள்!'' என்று தன் அருகே ஓர் ஆசனத்தில் அவரை அமரச் செய்தான் சேரலாதன்.

''வாழி மன்னவா! தமிழகம் முழுதும் தன்னடிப்படுத்தியதோடு அமையாது, வடநாட்டரசரையும் வென்றி கொண்ட வேந்தே நீ வாழ்க! யவன அரசரைப் போரில் வென்று அவர் தலையில் நெய்யைப் பெய்து கையைக் கட்டிக் கொண்டு வந்து, அவர்களுடைய அணி மணிகளை யெல்லாம் வஞ்சி நகர மக்களுக்கு வாரி வழங்

கிய மன்னவனே வாழ்க! கப்பற் படையுடன் சென்று கடம்பை வெட்டிப் பகையரசர்களைக் கடலிலிருந்தே விரட்டியடித்த கொற்றவனே, வாழ்க! உன்னைக் கண்டு பேசும் வாய்ப்புக்கிடைத்ததற்காகப் பெரிதும் மகிழ்கிறேன். மாளுவ நாட்டு வேந்தன், மிகவும் நலமா யிருக்கிறார். க்ஷேத்திராடனம் செய்து வரும் போது வஞ்சியில் சேரரைப் பார்த்து வர வேண்டுமென்று எம் அரசன் எனக்குக்கட்டளை இட்டிருந்தனன். அதன் பொருட்டே யானும் இப்போது இங்கே வந்தேன்'' என்றார் ராஜ ஜோதிடர்.

அரசன் பக்கத்திலிருந்த இரு அரசகுமாரர்களையும் கூர்ந்து பார்த்தார் அவர். அவர் முகத்தில் ஏதேதோ சிந்தனைக் கோடுகள் எழுந்து நெளிந்து புரண்டன. அந்தக் கோடுகளுக்குள் எத்தனை கணிதமோ, எத்தனை சாஸ்திரங்களோ, யார் அறிவார்?

''சேர மன்னா! முன்பொரு முறை வடநாட்டரசர்களை வென்று இமயத்தில் உன் வில்லைப் பொறித்து வந்தாயல்லவா? அதேபோல் மற்றொரு வடபுல வெற்றி விஜயம் விரைவிலே நடக்கப் போகிறது.''

''அப்படியா? மிக்க மகிழ்ச்சி!...அந்தப் போர் எப்போது நடைபெறும், கணியர் பெருமானே?'' என்று ஆவல் பொங்க, தோள்கள் விம்மக் கேட்டான் நெடுஞ்சேரலாதன். வயதிலே கிழவனானால்தான் என்ன? உடலுக்கு முதுமை உண்டு; வீரத்துக்குமா?



''அரசே! அந்த வீரப் போர், உனக்குப் பிற்காலத்தில் உன் மகன் காலத்தில் நடக்கப் போகிறது.... அதோ, உனது இடப் பக்கத்தில் இருக்கும் இளவரசன், அரசனாகும் காலத்தில் நடக்கப் போகிறது.''

அவையில் எல்லோரும் திடுக்கிட்டனர்.

அரசரின் இடது பக்கத்தில் இருப்பவன் இளங்கோ. பட்டத்துக்கு வரும் உரிமை பெற்ற செங்குட்டுவன் வலது புறமல்லவா இருக்கிறான்?

செங்குட்டுவன், இளங்கோவைப் பார்த்தான். இளங்கோ தந்தையைப் பார்த்தான்.

''மன்னிக்க வேண்டும், கணியரே! எனக்குப் பின் அரசனாகப் போகிறவன், இதோ, இந்தச் செங்குட்டுவன்... அவன் இளங்கோ—இளைய மகன்'' என்று விளக்கினான் மன்னன்.

ஜோதிடர் புன்முறுவலுடன் தலையை அசைத்தார்.

''மன்னிக்க வேண்டும் மன்னவா! நீங்கள் சொல்வது, 'இப்படி நடக்க வேண்டும்' என்று ஆசைப்படுவது; நான் சொல்வது, 'இப்படி நடக்கப் போகிறது' என்று கணக்குப் போட்டது.''

''தந்தைக்குப் பிறகு மூத்தவன் பட்டத்துக்கு வருவதுதான் மரபு... அரச பாரம்பரியம்'' என்றான் மன்னன்.

''நான் சொல்வது விதி. விதி, மரபையும் பாரம்பரியத்தையும் மீறியது. இளங்கோவின் முகத்தைப் பார்த்தே சொல்கிறேன். இவன்தான் வருங்கால மன்னன் என்று.''

இந்தப் பேச்சைக் கேட்ட செங்குட்டுவன் முகத்தில் சினமும் ஏமாற்றமும் நிழலாடின. சட்டென்று எழுந்து பின்புறமாக வெளியேறிவிட்டான்.

''ராஜ சோதிடர், ஏட்டைப் பார்த்துச் சோதிடம் சொல்வதில் கெட்டிக்காரராயிருக்கலாம்; ஆனால் முகத்தைப் பார்த்துச் சொல்வதில் அவர் உறுதியாகத் தோல்விதான் அடைவார்'' என்று எழுந்து சொன்னான் இளங்கோ.

''வருங்கால மன்னரே! என்னைக் கேலி செய்ய வேண்டாம்.... நான் சொல்வது எல்லாம் வல்ல ஊழ். 'ஊழிற் பெருவலி யாவுள, மற்றொன்று சூழினும் தான் முந்துறும்' என்பது உங்கள் நாட்டுப் பெரும் புலவன் வள்ளுவரின் வாக்கல்லவா?'' என்று கேட்டார் ராஜ சோதிடர்.

''ஊழையும் உப்பக்கம் காண்பவர்களைப் பற்றி அவர் பாடியுள்ளதைத் தாங்கள் இன்னும் படிக்கவில்லை போலும்!.... உங்கள் சோதிடத்தையும் ஊழையும் பொய் என்று நிரூபித்துக் காட்டுவேன்'' என்று எழுந்தான் இளங்கோ. அவன் குரலில் ஒலித்த உறுதியையும் திண்மையையும் கண்டு அவை நிசப்தமாயிருந்தது.

ராஜ சோதிடர் மெதுவாகச் சிரித்தார்.

''ஊழை வெல்லுகிற வீண் முயற்சியிலே சேர நாட்டு எதிர்கால அரசர், நேரத்தை வீணாக்க வேண்டாம். அதற்குப் பதிலாக, வட நாட்டுப் படையெடுப்புக்கான ஆயத்தங்களில் ஈடுபடலாம்!''

இளங்கோவின் முகம் 'செவ்' என்று சிவந்தது. கண்களில் ஒரு புதிய கனல் கீற்று. வலது கை விரல்களை இறுக மூடிக்கொண்டு அவனுடைய வைராக்கிய முடிவை எடுத்துக் காட்டியது. ஒரு விநாடி — ஒரே விநாடி சிந்தித்தான் அவன்.

''ராஜ சோதிடரே! இதோ... இப்பொழுதே — உங்கள் சோதிடத்தையும் விதியையும் உடைத்துத் தூள் தூளாக்குகிறேன். இப்பொழுதிருந்து அரச வாழ்க்கையை விடுத்து அரண்மனையை விட்டு, துறவியாக — சமணத் துறவியாக மாறுகிறேன்.''

கையிலிருந்த வாள், அரச உடைகள் எல்லாவற்றையும் கழற்றி வைத்து விட்டு, கீழே இறங்கி நடந்தான் இளங்கோ.

கண்ணிமைக்கும் நேரத்தில் நடந்த இந்தக் காட்சியில் அனைவரும் மெய்மறந்து நின்றுவிட்டார்கள்!

வஞ்சிக்குக் கிழக்கேயுள்ள குணவாயிற் கோட்டத்தில் துறவியாகி, இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்டுவிட்டான் இளங்கோ.

நெடுஞ்சேரலாதனும் தாயார் நற்சோணையும் செங்குட்டுவனும் அமைச்சரும் இன்னும் எல்லோரும் எவ்வளவோ சொல்லியும் இளங்கோ பிடிவாதமாக நின்றான்.

''தந்தையே! யாரும் எனக்காக வருந்த வேண்டாம். தமிழ் இலக்கியங்களையும் நாட்டிய இசைக் கலை நூல்களையும் நானும் நண்பர் சீத்தலைச்சாத்தனாரும் ஆராய்ந்து கொண்டிருக்கிறோம். இதிலே நான் நிறைந்த மகிழ்ச்சியடைகிறேன், அப்பா! உங்களை வருங்காலம் நிச்சயம் பாராட்டும். வீரத்துக்கு மூத்த மகனையும் மொழிக்கு இளைய மகனையும் கொடுத்தவர் என்று உலகம் உங்களைப் புகழப் போகிறது...''

''எனக்காக நீ இவ்வளவு பெரிய தியாகம் செய்ய வேண்டுமா தம்பி? வேண்டாம்...'' என்று துடித்தான் செங்குட்டுவன்.

''அண்ணனுக்காகப் பட்டத்தைத் துறந்தது சரி; ஆனால் யாருக்காக நீ வாழ்க்கையையே துறக்க வேண்டும்?'' என்று கேட்டழுதாள் நற்சோணை. தன் மகனைத் திருமணக் கோலத்தில் கண்டு மகிழ வேண்டுமென்ற இயல்பான ஆசை அந்தத் தாயாருக்கு மட்டும் இருக்காதா?

இளங்கோ தாயாரின் கேள்வியைக் கேட்டதும் திகைத்தான்.

'இது என்ன சாதாரணக் கேள்வியா?'

இளங்கோவின் உதடுகள் துடித்துத் தடுமாறின. தலை தானே குனிந்தது. நண்பன் சாத்தன், இளங்கோவின் உணர்ச்சியலைப் பைப் புரிந்து கொண்டான்.

எல்லோரும் வருத்தத்துடன் அரண்மனைக்குத் திரும்பிய பிறகு, கோட்டத்தில் இளங்கோவும் சாத்தனும் தனித்திருந்தனர்.

''இளவரசே! நீங்கள் எல்லோரையும் ஏமாற்றி அனுப்பி விட்டீர்கள். ஆனால் என்னை ஏமாற்ற முடியாது. காரணத்தைச் சொல்லத்தான் வேண்டும். நீங்கள் ஏன் வாழ்க்கையையே துறந்து அடிகளாக வேண்டும்? இல்லற வாழ்க்கை உங்களுக்குப் பிடிக்கவில்லையா?'' என்று மெதுவாகக் கேட்டான் சாத்தன்.

சுவடிகளைப் புரட்டிக் கொண்டிருந்த இளங்கோ, நிமிர்ந்து நண்பனைப் பார்த்தான். அவன் கண்கள் ஈரமாவதைக் கவனிக்கத் தவறவில்லை சாத்தன்.

''நண்பா! நீ புலவன்; உணர்ச்சிகளை ஆள்பவன்; உணர்ச்சிகளால் ஆளப்படுபவன். உன்னிடமிருந்து உணர்ச்சிகளை மறைக்க முடியாதுதான். ஆனால்.. ஒரே ஒரு வேண்டு கோள்!... நான் ஏன் இல்லறத்தையே மேற் கொள்ளாமல் துறவியானேன் என்பதற்கான காரணத்தை இப்பொழுது கேட்காதே! ஆனால் என்றாவது ஒரு நாள், தகுந்த சமயம் வரும்போது நானே அதை உன்னிடம்—உன் னிடம் மட்டுமே - தெரிவிப்பேன்'' என்றான் இளங்கோ.

பேசும்போதே இளங்கோவின் கண்களில் நீர் புரண்டது.

சாத்தன் திகைத்தான். துறவியாகும் அளவுக்கு இளவரசருக்கு என்ன ஏற்பட் டிருக்கும்?

ஆண்டுகள் பல பறந்தோடி விட்டன.

இளங்கோவடிகள், குணவாயிற் கோட்டத் தில் அமர்ந்து, "*பெருங்குருகு நாரின் ஏடுகளைப் பார்த்துக் கொண்டிருந்தார். அப் பொழுது உள்ளே நுழைந்தார் சீத்தலைச் சாத்தனார்.

''இளங்கோவடிகளே! வணக்கம்.''

''வருக! வருக! பேரியாற்றங்கரைக்குச் சென்றிருந்தீர்களே, எப்பொழுது வந் தீர்கள்? அண்ணன் வந்து விட்டாரா?''

''நேற்றுத்தான் வந்தோம். அரசர், தேவியுடன் இலவந்திகை வெள்ளி மாடத் தில் தங்கி யிருக்கிறார்.''

''இயற்கைக் காட்சிகளை ரசித்திருப்பீர் களே! ஏதாவது சிறப்பு நிகழ்ச்சி உண்டா?''

''உண்டு, அடிகளாரே! மிகச் சுவையான செய்தி.., நாங்கள் பேரியாற்றங்கரையில் இயற்கை எழிலை அனுபவித்துக் கொண்டிருந்த போது, மலைக் குறவர்கள் வந்து வணங் கினார்கள். வேங்கை மரத்தின் கீழ் ஒரு முலை இழந்த பெண்ணொருத்தி நின்றபோது வானு லகத்திலிருந்து விமானம் வந்ததாகவும் அதி லிருந்து தன் கணவனோடு அவளும் வானுல கம் சென்றதாகவும் அவள் யார் என்று தெரியாது எனவும் கூறினார்கள்.''

''அப்படியா? வியப்பான செய்தியாக வல்லவா இருக்கிறது?''

''ஆம். அந்தப் பெண் யார் என்று எனக் குத் தெரியும். புகார் நகரத்து வணிகனாகிய கோவலன் என்பானுடைய மனைவி கண்ணகி தான் அவள்'' என்றதும் திடுக்கிட்டார் இளங்கோ.

''என்ன நண்பரே, கோவலன் மனைவி கண்ணகியா? அவள் எப்படி அங்கு வந்தாள்? அவர்களுக்கு என்ன தீங்கு நேரிட்டது?''

''கோவலன் — கண்ணகியைப் பற்றி உங் களுக்கு முன்னமே தெரியுமா?'' என்று வியப்படைந்தார் சாத்தனார்.

''புகாரிலே ஒரு வணிகன் கோவலன் என்பதும் அவன் மனைவி கண்ணகி என் பதும்தான் தெரியும்.... மேலே சொல் லுங்கள்'' என்று ஆர்வத்தோடு கேட்டார் இளங்கோ.

''கோவலன் நாடகக் கணிகை மாதவி யோடு வாழ்ந்து, தன் குன்றமன்ன பொரு ளைத் தொலைத்து விட்டு, அவளைப் பிரிந்து கண்ணகியின் காற்சிலம்பை விற்க மதுரை

* பழங்காலத்து இசைத் தமிழ் நூல்களில் ஒன்று.




காதலன்: ''சூடா காப்பி கொண்டா!''

வந்து, திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டுக் கொல்லப்பட்டான். நீதி தவறிய பாண் டியன் முன் தன் கணவன் கள்வன் அல்லன் என்று நிரூபித்து, மதுரையை எரித்தாள் மாபத்தினி கண்ணகி. 'யானோ அரசன், யானே கள்வன்' என்று பாண்டியன் உயிர் துறந்தான். 'மன்னவன் சென்ற இடத்துக்கு யானும் செல்க' என்று தன்னுயிர் கொண்டு கணவனுயிர் தேடுபவள் போல், கோப்பெருந் தேவியும் உடனே மாண்டாள். 'வேந்த னுடைய கொடுங்கோல் தன்மை இத்த கையது' என்று காட்டுவதுபோல், கண்ணகி உங்களுடைய சேர நாட்டுக்கு வந்திருக் கிறாள்' என்று அரசரிடம் சொன்னேன்'' என்றார் சாத்தனார்.

இளங்கோவின் கண்கள் பனித்தன. அவர் துறவிதான் — என்றாலும் அவர் ஒரு கவிஞர்; கலைஞர். எனவே அவரும் உணர்ச்சி வயப் பட்டவர்தானே?

''இதைக் கேட்டு மன்னர் பெரிதும் வருந் தினார். தான் நீதி தவறிய செய்தி பரவு முன், தான் உயிர் விட்ட செய்தி பரவட்டும் என்று எண்ணிப் பாண்டியன் விட்ட உயிர், ஊழ்வினை வளைத்த செங்கோலை நிமிர்த்தி மீண்டும் செங்கோலாக்கி விட்டது' என்று மனமுருகிச் சொன்னார் மன்னர். அடுத்து ஒரு கேள்வி கேட்டார்.''

''என்ன கேள்வி?''

''உயிரான கணவன் இறந்ததுமே உயிர் துறந்த கோப்பெருந்தேவி — கணவனுக்குற்ற பழியைத் துடைத்து மதுரையை எரித்த வீர பத்தினி கண்ணகி — இவர்களில் பாராட்டத் தக்க கற்புடையவர் யார் என்று கேட்டார்.''

''ஆகா! அருமையான கேள்வி. நீங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?''

''நாங்கள் பதில் சொல்வதா? எங்களைக் கேட்டிருந்தால் திணறிப் போயிருப்போம். நல்லவேளை! மன்னர் எங்களைக் கேட்க வில்லை. வேண்மாள் தேவியையே கேட்டார்'' என்று ஆறுதல் பெருமூச்சுவிட்டார் சாத்தனார்.

''அண்ணன் கெட்டிக்காரர். கற்பைப் பற்றி எடை போடக் கற்புரசிகளால்தான்

முடியும்; பாம்பின் கால் பாம்பறியும் என்பது பழமொழியாயிற்றே!'' என்று புன்னகை புரிந்தார் இளங்கோ.

''ஆம், அடிகளாரே!...'கணவனோடு உயிர் துறந்த கோப்பெருந்தேவி விண்ணுலகத்தில் சிறப்புப் பெறுவாள். நம் நாடு வந்த பத்தினிக் கடவுளாம் கண்ணகியை வணங்குதல் நமது கடன்' என்று அருமையான பதிலைச் சொல்லி விட்டார். அடேயப்பா! அரசியார் எவ்வளவு நுண்ணறிவுடையவர்!''

''அதில் என்ன வியப்பு? அவர் என் அண்ணனின் தேவியாயிற்றே!... அது சரி, அப்புறம்?'' என்று ஆர்வத்தோடு கேள்வியைத் தொடர்ந்தார் இளங்கோ.

''உடனே மன்னவரும் ஒப்புக் கொண்டு, கண்ணகிக்குக் கோயில் எடுக்க விருப்பம் தெரிவித்தார். இமயத்தில் கல் எடுத்துக் கங்கையில் நீராட்டி, கண்ணகியின் சிலை சமைப்பதென்றும், அரசனது வடநாட்டுச் செலவு பற்றி வஞ்சியில் முரசறைவிப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது. அதன்படி நேற்றே வஞ்சியில் பறையறைந்துவிட்டார்கள். மன்னரும் வஞ்சினம் கூறி, நன் முகூர்த்தத்தில் வெற்றி வாளையும் கொற்றக் குடையையும் அனுப்பி 'நாட்கோள்' செய்தாகிவிட்டது'' என்று சாத்தனார் கூறிக் கொண்டிருக்கும்போதே, கோட்டத்தின் வெளியே ஆரவாரம் கேட்டது.

'மாமன்னர் குட்டுவன் வாழ்க, வாழ்க!' என்ற வாழ்த்தொலி கட்டியம் கூற, செங்குட்டுவனே இளங்கோ முன் வந்துவிட்டான். உடனே இளங்கோ எழுந்தோடி அண்ணனை வணங்கினார்.

''தம்பி! நலந்தானே?''

''ஆம், அரசே!... எல்லா விவரங்களையும் சாத்தனார் கூறினார். நீங்கள் வட நாட்டுப் போரில் வென்று இமயத்தின் தலையில் வில்லைப் பொறித்து வெற்றியுடன் திரும்ப வாழ்த்துகிறேன்'' என்று பூரிப்புடன் கூறினார் இளங்கோ.

''தம்பி!... கண்ணகியின் கதை எத்தகைய உணர்ச்சி மிக்க கதை கேட்டாயா?''

''ஆம், அரசே! அவளுடைய கதை உங்கள் வீரத்தைத் தூண்டியது; அதுபோல் என்னுள்ளே இருக்கும் இலக்கிய ஆர்வத்தையும் தூண்டி விட்டிருக்கிறது. அவளுடைய வரலாற்றை ஒரு காவியமாக எழுத வேண்டும் என்று விரும்புகிறேன்'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார் கவிஞர் இளங்கோ.

இதைக் கேட்டதும் செங்குட்டுவன் தம்பியைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

''தம்பி! நான் எவ்வளவு கொடுத்துவைத்தவன்!... சேர நாட்டு வீர மன்னனாக நான் வரலாற்றில் இடம் பெறுகிறேனோ இல்லையோ, புலவர் இளங்கோவின் அண்ணன் என்ற முறையிலாவது என் பெயர் சரித்திரத்தில் வாழும், தம்பி!... நான் வட நாடு சென்று கொண்டு வரும் படிமக் கல் லையை விட, உன் கவிதை வடிவம் சிரஞ்சீவியாக இருக்கப் போகிறது!''

''அரசே! சேர நாட்டின் மூத்த மகன், கண்ணகிக்குக் கற்கோயில் எழுப்புகிறார். இளைய மகன் அவளுக்குச் சொற்கோயில் படைக்கிறார். ஆகா, கண்ணகி எத்தகைய அதிர்ஷ்டசாலி! மூன்று நாடுகளுக்கும் உரிய இந்தக் கதையைப் பாடுவதற்கு, காய்தல் உவத்தல் அற்ற இளங்கோ அடிகள்தான் ஏற்றவர்'' என்று பெருமிதத்துடன் சொன்னார் சாத்தனார்.

செங்குட்டுவன், இளங்கோ அடிகளிடம் விடைபெற்றுச் சென்ற பிறகு, சாத்தன் இளங்கோவின் முன் உட்கார்ந்தார்.

''அடிகளாரே! கோவலன் — கண்ணகியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன் என்றீர்களே, எப்படி அவர்களைத் தெரியும்?'' என்று கேட்டார் அவர்.

இளங்கோவின் உதடுகள் சிரித்தன. ''சாத்தனாரே! இதற்கு விடை தக்க காலம் வரும் போது நானே சொல்வேன்.''

''இதே பதிலைச் சில ஆண்டுகளுக்கு முன்பும் சொல்லியிருக்கிறீர்கள்?'' என்றார் சாத்தன் குறும்பாக.

இளங்கோ வாய் விட்டுப் பலமாகச் சிரித்தார். ''அதை மறக்கவில்லை, நண்பரே! இரண்டு கேள்விக்கும் ஒரே பதில்தான் — ஒரே காலம்தான்!''

**கா**லம் ஓடிக் கொண்டிருந்தது.

முப்பத்திரண்டு மாதங்களுக்குப் பிறகு... ஒரு நாள்—

செங்குட்டுவன் வட நாடு சென்று இமயத்தில் கல் எடுத்துக் கங்கையில் புனிதப்படுத்தி, வஞ்சியில் கண்ணகி சிலை அமைத்து எழுப்பிக் கொண்டிருக்கும் கோயிலைப் பார்த்துவிட்டு, குணவாயில் கோட்டத்துக்கு வந்தார் சீத்தலைச் சாத்தனார்.

இளங்கோவடிகள் முத்தமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரத்தை உருவாக்கிக்கொண்டிருந்தார்.

''அடிகளாரே! மாமன்னர் கண்ணகிக்காக வடிக்கும் கல்லோவியத்தைக் கண்டு வந்தேன். தங்களுடைய சொல்லோவியம் எந்த அளவில் இருக்கிறது என்று அறியலாமா?'' என்று கேட்டவாறு அடிகள் முன்பு அமர்ந்தார் சாத்தன்.

''புகார்க் காண்டம் முழுவதும் மதுரைக் காண்டத்தில் ஐந்து காதைகளும் எழுதி விட்டேன். இன்னும் சில நாளில் கோயிலில் பத்தினித் தெய்வத்துக்குக் கடவுள் மங்கலம் நிகழ்த்தும்போது, வஞ்சிக் காண்டத்தில் பாதி முடிந்து விடும். பத்தினிக் கோயில் வழிபாட்டின்போது நடக்கும் நிகழ்ச்சிகளையும் இணைத்து வஞ்சிக் காண்டத்தை முடித்து விடுவேன்....இதோ, இதுவரையில் நான் எழுதி முடித்த காதைகள்; படித்துப் பார்த்து உங்கள் கருத்தைச் சொல்லுங்கள், நண்பரே!'' என்று ஓலைச்சுவடிகளைச் சாத்தனாரிடம் அள்ளிக் கொடுத்தார் இளங்கோ.

ஆவலுடன் அதை வாங்கிய சாத்தனார், அங்கேயே உட்கார்ந்து, முழுவதையும் சில நாழிகைகளில் படித்து முடித்தார்.

''சிலப்பதிகாரம் எப்படி இருக்கிறது, நண்பரே?'' என்று கேட்டார் இளங்கோ.

''தங்களுடைய காவியம் சிறப்பாக இருக்கிறது என்று சொல்வது, தேன் சுவையாக இருக்கிறது என்று சொல்வது போன்றது.




# Exide

தி ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி
ஆப் இந்தியா ' லிட்,
சென்னை, கோயமுத்தூர், பெங்களூர், எர்ணாகுளம், செகந்தராபாத்.

உயர்ந்த பானங்கள், தின்பண்டங்களுக்கு

# வின்ஸென்ட்




- நாகரீக பார்ட்டிகளுக்கேற்றது பெப்பியோ & ஜூலா-கோலா
- உற்சாகத்துடன் சுவைக்க மாங்கோஸிப், விடோலா, வின்கோலா
- ஆரோக்கியமும், சந்துஷ்டியும் அளிக்க நான்கு வகை பழரச பானங்கள் ஆரஞ்சுவின், மாங்கோவின், பைனேவின், கிரேப்வின்
- மேலும் சுவைமிகுந்த ஜிஞ்சர், ஆரஞ்சு, லெமன் எல்லாம் உண்டு.

**வின்ஸென்ட்**

சத்துள்ள ரொட்டி, கேக், பிஸ்கட் வகைகள் ஒவ்வொருவரையும் மகிழ்விக்கிறது

VC: 108

ஆனால் ஒரு விளக்கம்—'' என்று தயங்கினார் சாத்தன்.

''ஏன், ஏதாவது குற்றங்கள் உள்ளனவா?''

''இல்லை. கதிரவனிடம் களங்கம் காண முடியுமா அடிகளாரே?...நான் கேட்பது ஓர் ஐயம். மாதவியைக் கண்ணகிக்குச் சமமான ஒரு கற்பரசியாகப் படைத்திருக்கிறீர்களே? அவளைப் பற்றி நான் அப்படிக் கூறவில்லையே! மாதவி என்னும் 'நாடகக் கணிகையோடு ஆடிய கொள்கையின் அரும்பொருள் கேடுற்றது' என்று சொன்னேன். ஆனால் நீங்களோ, கோவலனுடைய செல்வம் தொலைந்ததற்கு மாதவியைக் காரணமாக்காமலும், அவளைக் கோவலனுடைய உண்மைக் காதலியாகவும், உரிமையுள்ள மனைவியாகவும் எழுதியிருக்கிறீர்களே? ஒரு கணிகை அப்படி இருக்க முடியுமா?''

இளங்கோவடிகள் சிரித்தார்: ''நண்பரே! ஒரு கணிகை 'கூடலும் ஊடலும் கோவலனுக்கு அளித்து' உரிமையோடு வாழ முடியாதுதான். ஆனால் மாதவி கணிகையல்லள்; அவள் பிறப்பால் கணிகை; பண்பால் குடும்பப் பெண்.''

சாத்தனார் திகைத்தார். ''அடிகளாரின் கற்பனைப் படைப்பா இது?''

''இல்லை, நண்பரே! இது கற்பனையல்ல; உண்மை.''

சாத்தனார் மேலும் திகைப்புடன் அடிகளின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். சாத்தனின் உணர்ச்சியைப் புரிந்து கொண்ட இளங்கோ, சிறிது நேரம் அமைதியாக இருந்தார். அவர் கையிலிருந்த சுவடியையும் எழுத்தாணியையும் கீழே வைத்தார்.

''நண்பரே! நீங்கள் முன்பு கேட்ட இரு கேள்விகளுக்கும் இப்பொழுது எழுப்பிய ஐயத்துக்கும் விடை சொல்ல வேண்டிய தருந்த காலம் வந்து விட்டது என்று நினைக்கிறேன்...'' என்று பெருமூச்சு விட்டுப் பேசத் தொடங்கினார்.

''நண்பரே, நான் மாதவியைப் பார்த்துப் பேசியிருக்கிறேன்.''

திகைப்புடன் பார்த்தார் சாத்தன். ''என்ன சொல்கிறீர்கள், அடிகளாரே!''

''வியப்படைய வேண்டாம். ஏறத்தாழப் பத்து ஆண்டுகளுக்கு முன்பு வரை அடிக்கடி நான் புகார் நகர் செல்வேனல்லவா?''

''ஆம். உங்களுடைய மாமன் முறைக்காரரான புகார் மன்னர் கிள்ளி வளவனையும், அவர் தம்பி நலங்கிள்ளியையும் பார்க்கச் செல்வீர்கள்.''

''அதற்காக மட்டுமல்ல; புகார் கலைகள் செழித்தோங்கும் நகரம். அங்கு கலைஞர்களையும், அறிஞர்களையும் கண்டு உரையாடவும் அடிக்கடி நான் செல்வேன். எனக்கு இளமையிலிருந்தே இசைக் கலையிலும் நாட்டியக் கலையிலும் ஆர்வம் உண்டல்லவா?''

''அந்த உண்மை எனக்கு மட்டுமல்ல. சிலப்பதிகாரத்து அரங்கேற்றுக் காதை வாழும்வரை எதிர் காலத்தினரும் உங்களுடைய நாட்டியக் கலைப் புலமையை உணர்ந்து பாராட்டத்தான் போகிறார்கள்.''

''அப்படி ஒரு முறை புகாருக்குப் போயிருந்தபோது, கோவலனைச் சந்தித்தேன். நானும் நலங்கிள்ளியும் கடற்கரையில்



''இந்தப் புடவைமேலே எத்தனை பேர் கண் போட்டிருக்கா தெரியுமா?''

இந்திர விழாக் காட்சிகளைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தபோது, அங்கே யாழ் வாசித்துக் கொண்டிருந்தான் கோவலன். அவனை எனக்கு அறிமுகப்படுத்தினார் நலங்கிள்ளி. உண்மையிலேயே அவன் மிகச் சிறந்த கலைஞன். பாணன். அவன் எப்பொழுதும் பாணர்களோடும் கலைஞர்களோடும்தான் பழகிக் கொண்டிருப்பானும். அவனுடைய தந்தை பெரும் வணிகர் என்றும், அவர் மனைவி பெயர் கண்ணகி என்றும் தெரிந்து கொண்டேன். மறு நாள் 'தலைக் கோல்' பட்டம் பெறுவதற்காக மாதவியின் நாட்டிய அரங்கேற்றம் நிகழ்ந்தது. அங்கு நாங்கள் சென்றிருந்தோம். ஆடலும் பாடலும் அழகும் குறைவு படாமல் ஏழாண்டு பயிற்சி பெற்ற மாதவி, அரங்கில் ஏறி ஆடிய அழகே அழகு!'' என்று சொன்ன இளங்கோவடிகள், மெய்மறந்து, கண்களை மூடிக் கொண்டார். ஒருவேளை மீண்டும் அந்த அழகுக் காட்சியை நினைவுத் திரைக்குக் கொண்டு வந்து பார்த்து மகிழ்கிறாரோ?

மாதவி அரங்கில் ஏறி ஆடிய அழகு!

ஆடற்குரிய ஆசானும், இசையோனும் நன்னூல் புலவனும், தண்ணுமையாசிரியனும், குழலோனும், யாழ்ப் புலவனும் சுற்றியிருக்க...

பூ தரையில் எழுதி, தூண் நிழல் மறையுமாறு விளக்கு அமைத்து, ஒருமுக எழினியும் பொருமுக எழினியும் கரந்துவரல் எழினியும் வகுத்து, ஓவிய விதானத்தில் முத்து மாலைகள் அசையும் அழகிய அரங்கத்திலே..

பகை மன்னரது கொற்றக் குடையின் காம்பை வைத்து, பொன்னும் மணியும் இணைத்துச் செய்த தலைக்கோலை, பொற்குடப் புண்ணிய நீரால் நீராட்டி மாலை அணிவித்து, முரசும் இசைக் கருவிகளும் முழங்க, தேரில் வைத்து ஊர்வலமாய்க் கொண்டு வந்து எதிரே வைத்திருக்க...

முறைப்படி மாதவி அரங்கத்தில் வலக் கால் முன்வைத்து ஏறி, வலத் தூணை சேர்ந்து நின்றாள். உடனே இசைக் கருவிகள்

ஒலித்தன. குழலை ஒட்டி யாழும், யாழை ஒட்டித் தண்ணுமையும், தண்ணுமைக்குப் பொருத்தமாக முழவும், முழவைத் தொடர்ந்து ஆமந்திரிகையும் ஒலித்தன.

மாதவி ஆடிய அந்தரக் கொட்டின் அழகைச் சொல்வதா? அவள் ஆடிய தேசிக் கூத்தின் சிறப்பைப் பாராட்டுவதா? அவளது மார்க்கக் கூத்தின் திறமையைப் புகழ்வதா? அவள் ஆடிய....

அவையினர் மாதவியின் நாட்டியத்திலே தம்மை மறந்து விட்டனர்.

அவள் அரங்கிலே ஆடிக்கொண்டிருந்தாள். ஆனால் தன் இதயத்தில் அவள் ஆடிக்கொண்டிருப்பதாக உணர்ந்தான் இளங்கோ. அவன் இதுவரை கற்றிருந்த — இன்னும் கற்க வேண்டிய நடனக் கலையின் அற்புதக் கூறுகளெல்லாம் ஒருங்கே சேர்ந்த கலாவல்லியாக மாதவி அவனுடைய இதயத்துக்குள் புகுந்து விட்டாள்.

ஆம்! இளங்கோ மாதவியைக் காதலித்தான்.

அன்று முழுதும் சிந்தனையில் ஈடுபட்டான் இளங்கோ. எப்படியும் மாதவியை மணந்து கொள்ள வேண்டும் என்று முடிவு செய்தான். அத்தகைய கலையரசியை வெறும் கணிகையாகத் தாழ்வுறச் செய்துவிடாமல், உயர்ந்த நிலையில் வைத்துப் போற்ற வேண்டும் என்று விரும்பியது அவன் உள்ளம்.

ஆ! மனம்தான் எவ்வளவு விரைவாக, கற்பனைக் கோட்டைகளைக் கட்டி விடுகிறது!

மாதவிதான் தன் வாழ்வு; அவள் இல்லையேல் வாழ்வே இல்லை என்ற எல்லைக்கே போய் விடுகிறான் இளங்கோ!

மறுநாள் முதல் வேலையாகத் தன்னுடைய எண்ணத்தை நலங்கிள்ளியிடம் கூறினான் இளங்கோ. அவனுடைய உறுதியான முடிவைக் கண்டு நலங்கிள்ளி வியப்படைந்தான்.

வணிகன் போன்று உடையணிந்து இளங்கோவை அழைத்துக் கொண்டு நலங்கிள்ளி மாதவியின் வீட்டுக்குப் புறப்பட்டான்.

அவர்கள் வீட்டு வாசலை அடைந்தபோது உள்ளே மாதவி யாழை மீட்டியவாறு பாடும் மதுரமான இசை வெளியே கேட்டது. அதன் இனிமையிலே மனம் ஒன்றித் திளைத்த இளங்கோ, "இப்பொழுது உள்ளே போக வேண்டாம். பாடல் முடியட்டும்" என்று தடுத்தான். இருவரும் வெளியே நின்றார்கள்.

ஆகா! என்ன அமுதமான குரலினிமை! குரலால் யாழொலி இனிமை கூடுகிறதா? யாழால் குரலொலி சிறப்படைகின்றதா?

மாதவியின் மணிக் காந்தள் விரல்கள் யாழ் நரம்பின் மேல் படரும்போது, எழுந்த வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை.... ஒவ்வொன்றும் இளங்கோவின் இதய வீணையில் விருத்தல்லவா எழுகின்றது? மாதவி, அவனுடைய உள்ளத்தை யல்லவா இசைத்துக் கொண்டிருந்தாள்?

பாடல் முடிந்ததும் உள்ளே நுழைந்தார்கள்.

மன்னரின் தம்பி தங்கள் வீட்டுக்கு வருவதைக் கண்டு வியந்த மாதவி, சட்டென்று யாழைக் கீழே வைத்து விட்டு எழுந்து வணங்கினாள்.

"மாதவி! இதோ இந்த நண்பர் வஞ்சி நகரத்தில் ஒரு வணிகர். நாட்டியக் கலையிலும் ஆழ்ந்த அறிவும் ஆர்வமும் உள்ளவர். இவர் நேற்று உன்னுடைய நடனத்தைப் பார்த்து அப்படியே மெய்ம்மறந்து போய் விட்டார்" என்று நலங்கிள்ளி சொன்னதும், மாதவி நாணத்துடன், "வணக்கம் ஐயா!" என்று இளங்கோவைக் கைகூப்பி வணங்கினாள்.

"இந்தப் பாராட்டைச் சொல்வதற்கு இளவரசர் ஏழையின் வீட்டுக்கு வரவேண்டுமா? தாங்கள் சொல்லி யனுப்பி யிருந்தால் நாங்களே அரண்மனைக்கு வந்திருப்போமே!" என்று பணிவாகச் சொன்னாள், மாதவியின் தோழி வயந்தமாலை.

"பாராட்டு சொல்வதற்கு மட்டுமில்லை. இத்தகைய அருமையான கலைச் செல்வத்தை வஞ்சிக்கே கொண்டு செல்ல விரும்புகிறார் இவர். அதாவது, மாதவியை இவர் மணம் புரிந்து கொள்ள விரும்புகிறார்" என்று நேரடியாகவே சொல்லி விட்டான் நலங்கிள்ளி. கணிகையரிடம் ஏன் சுற்றி வளைத்துக் குறிப்பாகப் பேசி நேரத்தை வீணாக்க வேண்டும் என்று அவன் நினைத்தான்போலிருக்கிறது!

இதைக் கேட்டதும் மாதவி திடுக்கிட்டுப் போனாள். அதைக் கண்ட இளங்கோ திகைத்தான். கலவரப்பட்ட முகத்தினளாய் மாதவி தோழியைப் பார்த்தாள். 'நீயே சொல் தோழி!' என்பது போலிருந்தது அந்தப் பார்வை.

வயந்தமாலை மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பேசினாள். "இளவரசே! மன்னிக்க வேண்டும். அரசருடைய கட்டளையை நிறைவேற்ற முடியாத நிலையில் இருக்கிறாள் மாதவி. அவள் ஏற்கனவே ஒருவரைக் காதலிக்கிறாள்."

இளங்கோ திடுக்கிட்டு நிமிர்ந்து மாதவியைப் பார்த்தான். அவள் கண்கள் கால் பெருவிரல் போடும் அரை வட்டத்தைப் பார்த்தவாறு இருந்தன.

"மாதவி காதலிக்கிறாளா?" என்று வியப்படைந்தான் நலங்கிள்ளி. கணிகையாவது காதலிப்பதாவது? பொருளையே காதலிக்கும் பண்புள்ள கணிகை ஒரு மனிதனைக் காதலிப்பாளா?

இளங்கோவின் இதயத்தில் எழும்பி யிருந்த காதற் கனவுக் கோட்டைகள் ஏமாற்ற இடியால் இடிந்து, தூள் தூளாய்ச் சிதறின. என்றாலும் அவனால் அந்த ஏமாற்றத்தைத் தாங்கிக் கொள்ள முடியும். அவன் ஒரு வீரரின் புதல்வன்!

"ஆம், இளவரசே! இந்நகரில் கோவலன் என்னும் கலைஞரை மாதவி காதலிக்கிறாள். அவரும் மாதவியை உள்ளன்போடு காதலிக்கிறார்."

"அப்படியானால் உங்கள் குல வழக்கம்?" என்று குறுக்கிட்டான் நலங்கிள்ளி.

"குல வழக்கப்படிதான் செய்யப் போகிறோம். மாதவியின் மாலையைக் கூனி கையில் கொடுத்து, கடைத் தெருவில் விலை கூறுவது போல் கோவலனிடமே விற்க ஏற்பாடு செய்திருக்கிறோம்."

"இன்னொருவன் அந்த மாலைக்கு அதிக விலை கொடுக்க முன் வந்து விட்டால்?"

# தலைவலியா ?



## உடனடியாக நிவாரணம் பெற



# அவேதன் சாப்பிடுங்கள்

SQUIBB
SARABHAI CHEMICALS



©இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பொரேட்டட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். சாம்சந்த் பிரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமைபெற்றவர்கள்.

அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன் தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு மற்றும் இதர சாதாரண வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது.




இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு (ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்). AST.2-140

''கோவலன் பின்வாங்க மாட்டார் போட்டியில். எவ்வளவு தொகையானாலும் போட்டி போட்டு வாங்கி விடுவார். செல்வத்தில் அவரோடு போட்டி போட இங்கு யார் இருக்கிறார்கள்?'' என்றாள் வயந்தமாலை.

'ஓகோ...கோவலன் பெரும் செல்வந்தன் என்பதற்காகத்தான் இந்தக் காதல் வலை வீசுகிறாள் போலிருக்கிறது' என்று யூகித்தான் நலங்கிள்ளி.

''வயந்தமாலை! இந்த நண்பர் யார் தெரியுமா? சேர நாட்டு இளவரசர் இளங்கோ — நெடுஞ்சேரலாதரின் இளைய புதல்வர். இவர்தான் மாதவியை அரசியாக்க முன் வந்திருக்கிறார்'' என்றான் நலங்கிள்ளி.

மாதவியும் வயந்தமாலையும் திடுக்கிட்டு நின்றார்கள். ''ஒரு கணிகையை அரச குடும்பத்தினர் ஏற்றுக் கொள்வார்களா?'' என்று திகைத்தாள் வயந்தமாலை.

''சேற்றில் பிறந்தது என்பதற்காகச் செந்தாமரையை யாராவது தள்ளி விடுவார்களா? மாதவி பிறப்பால் கணிகை யானாலும் அரசியாவதற்குத் தகுதியானவள் என்று எனக்குத் தெரியும்'' என்றான் இளங்கோ.

''சேர நாட்டு இளவரசர், மாதவியை மனைவியாக்கிக் கொள்ள விரும்புகிறார். என்ன சொல்கிறீர்கள்?'' என்ற நலங்கிள்ளியின் குரலில் ஒலித்த கடுமையையும் அதிகாரத்தையும் பெண்கள் இருவரும் புரிந்து கொண்டார்கள். தன் நாட்டு மாதவியைப் பலாத்காரமாகவே சேரநாட்டு இளவரசனுக்கு மணம் முடித்து விடுவான் போலிருந்தது.

''இளவரசே! குலத்தால் நான் கணிகையானாலும் பண்பால் உயர்ந்தவள் என்றீர்களே, நான் பணத்துக்காகவும் பதவிக்காகவும், அந்தஸ்துக்காகவும், காதலித்தவனை மறந்து உங்களை மணந்து கொண்டால், நான் நடத்தையால் கணிகையாகி விடுவேனே, அப்புறம் எப்படி நான் அரசியாகும் தகுதியுடையவளாவேன்?'' என்று கேட்டாள் மாதவி.

என்ன அருமையான கேள்வி கேட்டுவிட்டாள்? அவளுடைய அறிவு நுட்பத்தைக் கண்டு வியந்தான் இளங்கோ.

''அரசே! கணிகையும் ஒரு பெண்தான்: அவளுக்கும் மனம், உணர்ச்சிகள் உண்டு. நான் மணந்தால் கோவலனைத்தான் மணப்பேன். நான் அவருடைய பணத்தை விரும்பவில்லை : அவருடைய கலை உள்ளத்தைத் தான் காதலிக்கிறேன்.''

இளங்கோ எழுந்து மாதவியை ஏறிட்டுப் பார்த்தான். சேற்றில் செந்தாமரையாய், சிப்பியுள் முத்தாய், கணிகையரில் ஒரு கற்பரசியாய் விளங்கும் அந்த மங்கை நல்லாளின் முகத்தைக் கடைசி முறையாகப் பார்த்தான். அவன் பார்த்த கடைசி மங்கை முகம் அதுதான்! அதன்பின் அவன் வேறெந்தப் பெண்ணையும் ஏறிட்டும் பார்க்கவில்லை!

அந்த மன உறுதியோடு வருசி வந்த சில நாட்களில்தான, அரசவையில் ராஜ ஜோதிடர் கூறிய ஆருடத்தைப் பொய்ப்பிக்க எழுந்தான இளங்கோ.

அண்ணனுக்காக அரச பதவியைத் துறக்க எழுந்த இளங்கோ, காதல் விரக்தியால் இல்லறமென்னும் வாழ்க்கையையும் துறந்து விட்டான்.

நடந்தவைகளைக் கேட்ட சீத்தலைச் சாத்தன், சிறிது நேரம் திகைத்திருந்தார்.

'' சாத்தனாரே ! மாதவியைப் பற்றிச் சிலப்பதிகாரத்தில் கூறியிருப்பதெல்லாம் முழு உண்மை. கண்ணகிக்கு எந்த விதத்திலும் குறைவு இல்லாத கற்பரசியான மாதவியைப் பாராட்டவோ, புகழவோ, வணங்கவோ இப்போதைய சமுதாயம் சம்மதிக்காமல் இருக்கலாம். ஆனால் எதிர்கால உலகம், நிச்சயம் அவள் பெருமையைப் புரிந்து கொண்டு புகழும். அவளுக்குப் பத்தினிக் கோட்டம் அமைக்க இன்னொரு செங்குட்டுவன் நிச்சயம் தோன்றுவான்..... தெய்வமாகிவிட்ட கண்ணகியின் கதையைக் காவியமாக எழுத, நான் இல்லாவிட்டால், இனிமேல் எத்தனையோ கவிஞர்கள் முன் வருவார்கள். அவர்கள் கண்ணகியை உயர்த்திக் காட்டுவதற்காக, மாதவியைக் கீழே தாழ்த்தி விடுவார்கள். ஆகவே தான் நானே இக்கதையைச் சிலப்பதிகாரமாக உருவாக்கினேன். நான் மாதவியெனும் கலையரசிக்குச் செய்யும் தொண்டு இதுதான்... என்னுடைய காவியத்தால் கண்ணகியின் புகழ் உயர்கிறதோ இல்லையோ, மாதவியின் பெயர் காப்பாற்றப்படும்: அதுதான் எனது ஆசை: குறிக்கோள் '' என்றார் இளங்கோ.

'சிலப்பதிகாரத்துக்குள்ளே இப்படி ஒரு துயரக் கதை சொல்லப்படாமல் புதைந்திருக்கிறதா?' என்று மனமுருகினார் சாத்தன்.

அப்பொழுது உள்ளே நுழைந்தான் அரசாங்கப் பணியாள் ஒருவன்.

''அடிகளே, வாழ்க! வாழ்க! தண்டமிழ்ப் புலவரே ! வாழ்க ! இலங்கைக் கயவாகு மன்னரும் மாளுவ வேந்தரும், பத்தினிக் கோயில் கட்டப்படுவதைப் பார்வையிட வந்திருக்கிறார்கள். அரசர் பெருமான் தங்கள் இருவரையும் அழைத்து வரச்சொன்னார்.''

இளங்கோவும் சாத்தனாரும் எழுந்து, பத்தினிக்கோட்டத்துக்குப் புறப்பட்டார்கள்;



'' என்ன பழனியா ? திருப்பதியா ?''
'' இண்டி !''

# இக்கட்டான நிலை!

அந்தக் கல்யாணக் கடிதம் நாங்கள் வெகு நாட்களாக எதிர்பார்த்த ஒன்று. மதராஸிலிருக்கும் எனது நாத்தனார் தன் ஒரே பெண்ணான ருக்குவுக்கு முகூர்த்தத்தை வைத்துவிட்டுத் தனது ஒரே அண்ணாவான இவருக்குக் கடிதமும் பத்திரிகையும் அனுப்பியிருந்தாள். எந்தச் சாக்கும் சொல்லாமல் வரும்படி எழுதிவிட்டாள். குழந்தைகளுக்கோ முதல் நாள் வரை இறுதிப் பரீக்ஷை. என்ன செய்வது? பரீக்ஷை முடிந்த அன்று இரவே கிளம்பிச் சீக்கிரம் ரயில்வே ஸ்டேஷனை அடைந்தோம்.

ஸ்டேஷனில் இருந்த கூட்டத்தைப் பார்த்தவுடன் தலையைச் சுற்ற ஆரம்பித்து விட்டது. கஷ்டப்பட்டு மூன்றாவது வகுப்பு டிக்கட்டு வாங்கிக் கொண்டு சென்றோம். எந்தப் பெட்டியிலும் இடம் இல்லை. வந்தது வரட்டும் என்று முதல் வகுப்பிலேயே ஏறி விட்டோம். நல்ல மழை. ஸ்டேஷனில் இறங்கி டிக்கட்டை மாற்ற முடியவில்லை. டிக்கட் பரிசோதகர் வரவேயில்லை. காலை ஐந்தரை மணிக்குப் போக வேண்டிய வண்டி ஆறரை மணிக்குத்தான் சென்னை போய்ச் சேர்ந்தது. டிக்கட் பரிசோதகரை அப்போது பார்த்தோம். நாங்கள் ஏறும்போது இருந்த சிரமத்தைச் சொல்லி அதிகப்படிப் பணத்தைக் கட்டிவிடுவதாயும் கூறிக் கொண்டிருக்கும்போதே ஒரு "வித்தவுட் டிக்கட்" நைசாக நழுவவும் சில பேர்கள் கத்தவும் டிக்கட் பரிசோதகர் அந்தப் பக்கம் போய்விட்டார். மணியைப் பார்த்தால் ஏழு!



குழந்தைகளோ 'மாலை மாற்றி ஊஞ்சல் ஆடி முடிந்திருக்கும்; வேடிக்கை பார்க்க முடியாதே' என்று அழ ஆரம்பித்தார்கள். நாத்தனாரின் குணம் அறிந்த நான் முகூர்த்த நேரம் நெருங்கி விட்டதால் நடுங்கினேன். என் கணவர் வந்தது வரட்டும் என்று பெட்டி படுக்கையை எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டார்.

வெளியில் தயாராக ஒரு டாக்ஸி கிடைக்கவும் அதில் ஏறினோம். நல்ல வேளை! கெட்டி மேளம் கொட்டப் பத்து நிமிஷம் பாக்கி இருந்தபோது போய்ச் சேர்ந்து விட்டோம். எல்லோருக்கும் ஒரே சந்தோஷம். மாலை ஐந்து மணிவாக்கில் என் கணவர் ஊரைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருவதாகச் சொல்லிவிட்டு ஸ்டேஷனை நோக்கிப் போனார். அதே டிக்கட் பரிசோதகர் புதையலைக் கண்டெடுத்தவர் போல் அவரைப் பார்த்தார்.

என் கணவர் அவசரத்தை முன்னிட்டுக் காலையில் செய்த தவறுக்காக வருந்துவதாகச் சொல்லி, "நீங்கள் என்ன தண்டனை உண்டோ கொடுங்கள்" என்றார்.

பரிசோதகர், "சார், நீங்கள் ஆயிரத்தில் ஒருவர். உங்களை மாதிரிச் சிலபேர் இருப்பதால் தான் மழை பெய்கிறது. இந்தச் சென்னை ஜனசமுத்திரத்தில் உங்களை எங்கிருந்து தேடுவேன்? கண்ணியமாக நடந்துகொண்டு என் மானத்தையும் காப்பாற்றினீர்கள். அபராதமாக உள்ள தொகையைக் கட்டிவிட்டுப் போங்கள்" என்றார்.

திருமதி என். சுந்தர்

---

எங்கள் உறவினர் வீட்டில் சாந்திக் கல்யாணம். அவர் ரொம்பச் செட்டு என்றே சொல்ல வேண்டும். அன்றைய இரவு விருந்துக்குச் சம்பந்திகள் உள்பட ஐம்பது பேருக்குப் போதுமான உணவு தயாரிக்கப்பட்டிருந்தது. மரியாதைக்காக ஊரில் இருக்கிற எல்லோரையும் கூப்பிட்டிருந்தார். ஆனால் இப்படி எல்லோரும் படையெடுப்பார்கள் என்று கண்டாரா? இருநூறு பேர்கள் கூடி விட்டார்கள். அதில் பாதிப் பேர் ஆளுக்கு ஒரு ரூபாய் ஆசீர்வாதத்தின் பொழுது வேறு ஓதிவிட்டார்கள். பணம் கொடுத்தவர்களைச் சாப்பிட்டுவிட்டுப் போகலாம் என்று சொல்லாமல் இருக்க முடியுமா? பரிசாரகன் என்ன கெட்டிக்காரனாக இருந்தாலும் ஐம்பது பேர்கள் ஆகாரத்தை நூறு பேர்களுக்கு இழுத்துப் பரிமாறிவிடலாம். அப்புறம் பாக்கிப் பேர்களுக்கு என்ன பண்ணுவது? மேலே தயாரிப்பதற்கோ உக்கிராணத்தில் ஒருவிதப் பண்டமும் இல்லை. இந்த இக்கட்டான நிலையில் என்ன பண்ணுவதென்று தெரியாமல் கலங்கினார்.

"அண்ணா! உங்களுக்கேன் இந்தக் கவலை? எனக்கு என்ன கெட்ட பேர் வந்தாலும் பாதகமில்லை. நான் சமாளித்து விடுகிறேன். யாரையாவது சைக்கிளில் அனுப்பி நூறு ஏடு இலை வாங்கிக் கொண்டு வரச் சொல்லுங்கள்" என்றார் தலைமைப் பரிசாரகர்.

எல்லாரும் சாப்பிட்டுவிட்டுப் போனார்கள். "இவ்வளவு பணம் செலவழிச்சாரே! ஒரு நல்ல பரிசாரகனைப் போடக்கூடாதோ? இந்த மோசமான பரிசாரகன் இவருக்கு எங்கேயிருந்து கிடைத்தான்!" என்று பரிசாரகனைத் தூற்றிக்கொண்டே போனார்கள். காரணம்: பச்சடி முதல் பாயசம் வரை ஒரே உப்பாய் இருந்தது. "என்ன பண்ணுவார் பாவம்! அவருக்கு எல்லாருக்கும் சாப்பாடு போட வேண்டும் என்றுதான் ஆசை. பரிசாரகன்தான் கெடுத்து விட்டான்" என்று என் உறவினருக்கு நல்ல பெயர் கிடைத்தது.

நீங்கள் நம்ப மாட்டீர்கள்! எல்லாரும் சாப்பிட்டு விட்டுப் போன பிறகு இன்னும் பத்துப் பேருக்கு வேண்டிய உணவு மிகுந்திருந்தது!

—ஆர். சீதா





**ப**ள்ளியில் படித்துக் கொண்டிருந்த நாட்களில் நடந்த நிகழ்ச்சி இது.

பள்ளியில் ஏதோ விழா. அதை முன்னிட்டு நாடகம் ஒன்று நடத்த ஏற்பாடு ஆயிற்று. நாங்கள் 'சாம்ராட் அசோகன்' நாடகத்தைத் தேர்ந்தெடுத்தோம். சுமார் நான்கு அல்லது ஐந்து காட்சிகளைக் கொண்ட சிறிய நாடகம் அது. கலிங்க நாட்டின்மீது படையெடுத்த அசோகன் போர்க்களத்து நிகழ்ச்சிகளைக் கண்டு மனம் மாறிப் புத்த மதத்தைச் சார்ந்து அதன் கொள்கைகளைப் பரப்புவதை விளக்குவது அது.

நாடக நாளும் வந்தது. முதலிரு காட்சிகள் முடிந்தன. அசோகன் பாகத்தை ஏற்று நடித்த நான் இரண்டாவது காட்சியிலேயே எனக்குக் கட்டப்பட்டிருந்த மீசை தாடி சரியாக இல்லாமல் நழுவுவதை உணர்ந்தேன். எப்படியோ அதைக் கட்டிக் கொண்டே நடித்துக் கொண்டிருந்தேன்.

நாடகத்தின் கடைசிக் காட்சி. போர்க்கள நிகழ்ச்சிகளைக் கண்டு மனம் மாறி என் உடைவாள், கிரீடம் முதலியவற்றை ஒவ்வொன்றாக வசனம் பேசிக்கொண்டே தூக்கி எறிய வேண்டிய காட்சி. தாடி மீசை தொந்தரவு தாள முடியவில்லை. இடத்தை விட்டு நழுவிக் கொண்டே இருந்தது. பொறுக்கவே முடியவில்லை. ''இந்த உடை வேண்டாம்; கிரீடம் வேண்டாம்'' என்று வசனம் பேசிக் கொண்டே போன நான், திடீரென்று, ''இந்தத் தாடி வேண்டாம், மீசை வேண்டாம்''. என்று சொந்த வசனங்களைச் சேர்த்துத் தாடியையும் மீசையையும் தூக்கி எறிந்தேன். அப்பாடா என்றிருந்தது. சபையோரிடமிருந்து சிரிப்பொலி எழுந்து அடங்க வெகு நேரமாயிற்று.

இதுபோன்ற என் 'திறமை'யால் ஒரு வீர நாடகத்தை நகைச்சுவை நாடகமாக்கிய எனக்கு நாடகம் முடிந்த பிறகு ஆசிரியரிடமிருந்து கிடைத்த 'பாராட்டு'களை மறக்க முடியுமா?

—''வசந்தப் பித்தன்'

---

**ப**ல வருடங்களுக்கு முன்பு நான் குமாஸ்தாவாக வேலையில் சேர்ந்த புதிது.

அப்போது திருமணம் ஆகவில்லை. அடிக்கடி லீவு வாங்கிக்கொண்டு சொந்த ஊரான முத்துப்பேட்டைக்குப் போவது வழக்கம். என் பாட்டி சமையல் செய்து போட்டு வந்தாள்.

அப்போது ஆபீஸ் தலைமைக் குமாஸ்தாவாக இருந்தவரிடம் முதல் தடவையாக லீவு விண்ணப்பம் முத்துப்பேட்டை போவதாய் எழுதிக் கொடுத்தேன். உடனே அவர், ''நீ திரும்பி வரும்போது முத்துப்பேட்டை தேங்காய் பதினைந்து வாங்கிவா. நல்ல காயாக இருக்கும். வந்ததும் பணம் தருகிறேன்'' என்றார். நான் வாங்கி வந்தேன். அவர் பணம் தரவில்லை. நானும் கேட்கவில்லை. அதன் பின் நான் அறிந்தது - யார் எந்த ஊர் போவதாய் லீவு கொடுத்தாலும் அந்தக் குறிப்பிட்ட ஊரில் விசேஷமாக உள்ள பொருளை வாங்கி வரச் சொல்லுவார். அது அவர் வழக்கமாம்.

சில மாதங்களுக்குப் பின் மறுபடியும் நான் முத்துப்பேட்டைக்குப் போக லீவு விண்ணப்பிக்கும் போது முத்துப்பேட்டை என்று குறிப்பிடாமல் திருச்சியில் என் சகோதரி வீட்டுக்குப் போவதாய் லீவு மனு எழுதிக் கொடுத்தேன்.

முத்துப்பேட்டை என்றால் தேங்காய் கேட்பார் என்ற பயம். திருச்சி என்றால் மலைக்கோட்டை கதம்பம் அல்லது மாவடு கேட்பார். நாம் வேறு எங்கேயாவது வாங்கி வந்து மலைக்கோட்டைக் கதம்பம், மாவடு என்று கொடுக்கலாம் எனக் குயுக்தி செய்தேன்.



அடுத்த நிமிடம் அவர் சொன்னதைக் கேட்டுத் தூக்கிவாரிப் போட்டது.

''நல்ல வேளை என் தாயாரைத் திருச்சிக்கு என் தம்பி பெண் பிரசவத்துக்கு அனுப்புவதாய் எழுதியிருக்கிறேன். யாராவது துணை இருந்தால் அவளை அனுப்ப எண்ணினேன். நீ போவது சௌகரியமாய்ப் போயிற்று. அழைத்துப் போய்ச் சிங்காரத் தோப்புத் தெருவில் விட்டுவிடு'' என்றார்.

எப்படிப்பட்ட இக்கட்டான நிலை. ஊருக்கும் போக முடியாது. அனாவசியமாகத் திருச்சி போக வேண்டும்.

திருடனுக்குத் தேள் கொட்டியது போல் ஆகி விட்டது எனக்கு.

— ஸ்ரீவத்ஸன்

கர்ப்பம் ஏற்பட்டுவிடுமே என்று அச்சமின்றி இல்லற வாழ்க்கையை இன்பமாக அனுபவியுங்கள்.

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு மிகவும் பத்திரமான முறை ஆண்களுக்கு இப்பொழுது உண்டு. அதுதான் **நிரோத்**

ஆடவர்களின் உபயோகத்திற்கு உகந்த உயர்தரமான குடும்பக் கட்டுப்பாடு சாதனம்.

# நிரோத்

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு

மூன்றின் விலை 15 பைசா
அரசாங்க ஆதரவு விலையில்
கிடைக்கிறது.





காந்தி வேகமாய் நடப்பாராம். நடையில் மட்டுமல்லாமல் அன்றாடம் செய்ய வேண்டிய பிற வேலைகளையும் விரைந்து சுறுசுறுப்பாய்ச் செய்வாராம். வாழ்வு முழுதும் இவ்விதம் விரைந்து செயலாற்றிய அவர், நம்மைப் பார்த்து, ''ஓடாதே, நில்!'' என்கிறார். இது வியப்பாய் இருக்கிறது அல்லவா? ஏன் அப்படிக் கூறுகிறார் அவர்?

இக்காலத்தில் அனைவரும் வெற்றியை விரும்புகிறார்கள்; வெற்றி ஒன்றைத்தான் விரும்புகிறார்கள். ஒரு சிறு தோல்வி ஏற்பட்டாலும் மலைத்துப் போய் உட்கார்ந்துவிடுகிறார்கள். இது தவறாகும். இன்னல்களும் துயரமும் சூழும்போது நாம் சோர்ந்து மயங்கி நிற்கக் கூடாது; செய்யும் வேலையை நிறுத்தக் கூடாது. அதாவது, வாழ்க்கையிலிருந்து தப்பியோட முயலக் கூடாது. கீழே விழுந்த நாம் எழுந்திருக்க வேண்டும். மறுபடியும் போராட வேண்டும். போராட

# ஓடாதே நில்!

## மீ.வி. சபரிராஜன்

வேண்டியது நம் கடமை. பலனை அளிப்பவன் இறைவன். இது காந்தியின் கருத்தாகும். ''நாம் முயற்சி என்னும் இராஜ்யத்தின் மன்னர்கள். இறைவனே, பலன் என்ற சாம்ராஜ்யத்தின் தனிப் பெரும் அரசர்'' என்கிறார் அவர்.

இதே குரலை, உபதேசத்தை நாம் வேறு எங்கோ கேட்டது போலிருக்கிறதே! ஆம், குருக்ஷேத்திர யுத்த பூமியில்தான். விழிகளில் நீரும் நெஞ்சில் இரக்கமும் மிஞ்சியவனுய்க் காட்சியளித்த பார்த்தனுக்கு வாழ்வின் இரகசியத்தை உபதேசித்தான் கண்ணன்.

காந்தி கீதையைப் போற்றினர். அதை அவர் வெறும் அறநூலாக மட்டும் கருதவில்லை. பெற்ற தாயாரைப்போல் மதித்தார். 'கீதைத் தாய்' என்று அதை அழைத்தார். இது சம்பந்தமாய் அவர் கூறுவதைக் கேட்போம். ''என்னைப் பெற்றெடுத்த தாயை நான் இழந்து நீண்ட காலமாகிறது. ஆனல், அதன் பிறகு அந்த இடத்தை, அறிவுற்ற இந்தத் தாயார் முழுமையாய் ஏற்றுக் கொண்டு விட்டாள். கீதைத் தாய்க்கு என் விஷயத்தில் ஒரு நாளும் மனமாற்றம் ஏற்பட்டதில்லை. அவள் என்னைக் கைவிட்டதேயில்லை. எனக்குக் கஷ்டமோ துன்பமோ நேரும்போதெல்லாம் நான் அவள் மடியில் தஞ்சம் புகுகிறேன்.''

மனிதன் தன் கடமையைச் செய்ய வேண்டுமென்று கீதை வலியுறுத்துகிறது. கடமையைத் துறந்துவிட்டு ஓடுவதன் மூலம்





''எப்போது பார்த்தாலும் இப்படித் தூங்கிக் கிட்டு இருக்கீங்களே. இது என்ன ஆபீசா? அல்லது வீடா?''

அவன் ஈடேற முடியாது என்பதைத் தெளிவாக்குகிறது. ''ஓடாதே, நில்!'' என்கிறது. ''விதிக்கப்பட்ட தொழிலை நீ செய். ஜனகர் முதலியோர் செய்கையாலேயே சித்தி பெற்றார்கள். மூன்று உலகத்திலும் எனக்கு யாதொரு கடமையும் இல்லை. நான் பெற்றிராத பேறுமில்லை. எனினும், நான் தொழிலிலேதான் இயங்குகிறேன்'' என்கிறான் கண்ணன். ''தனஞ்சயா! யோகத்தில் நின்று, பற்றை நீக்கி, வெற்றி தோல்விகளை நிகரெனக் கொண்டு தொழில்களைச் செய்க. நடு நிலையே யோகமெனப்படும்'' என்கிறான் கேசவன். ஆனால், வாழ்வில் கீதோபதேசத்தைக் கடைப்பிடிப்பவர்கள் எத்தனை பேர்? எல்லோரும் தொழில் செய்கிறார்கள். ஆனால், பற்றை நீக்கித் தொழில் செய்ய முடிவதில்லை. வாழ்க்கையில் ஒரு சிறு தோல்வி ஏற்பட்டாலும் சோர்ந்து உட்கார்ந்து விடுகிறார்கள். இராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறிய அருள்மொழி ஒன்று இங்கு நினைவுக்கு வருகிறது. மழை பெய்யும் நாட்கள் பஞ்சாங்கத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. ஆனால், அந்தப் பஞ்சாங்கத்தைப் பிழிந்தாலோ, ஒரு சொட்டு நீர்கூட வருவதில்லை. அதைப் போல, மனிதன் எத்தனை அறநூல்கள் படித்தாலும் அஞ்ஞானியாகவே இருக்கிறான். மெய்ஞ்ஞானிகள் சிலரே, கல்வி ஞானத்தைத் துணையாய்க் கொண்டு, 'எல்லாம் அவன் செயல்' என்பதை உணர்ந்து, இன்பத்தையும் துன்பத்தையும் சமமாய்ப் பாவித்து வாழ்கிறார்கள். அல்ல, தொழில் புரிகிறார்கள். அத்தகையவர்களுள் காந்தி மகானும் ஒருவர்.

வாழ்க்கையை ஒரு விளையாட்டாக மதித்தார் அவர். சிரித்து வேடிக்கையாய்ப் பேசிக் கொண்டே அவர் வாழ்ந்தார்.

ஒரு முறை சிறையில் அவர் உண்ணா நோன்பு இருந்தார். அது முடிந்து சில நாட்களுக்குப் பிறகு மறுபடியும் உபவாசம் தொடங்கினார். ஓர் அன்பர் இதைத் தவறாய் நினைத்து விட்டார். இறந்து, அதன் மூலம் புகழ்பெற காந்தி விரும்புவதாக அவர் கருதினார். ஆகவே, அவர் காந்தியைப் பார்த்து: ''வாழ்நாள் முழுதும் தாங்கள் நாட்டுக்கு நன்மை செய்தீர்கள். இப்போது சாவு நெருங்கிவிட்டதால், சாவின் மூலமும் நன்மை செய்ய விரும்புகிறீர்களா?'' என்று கேட்டார். அதற்குக் காந்தி அளித்த பதில் பொருள் நிறைந்தது. ''இவ்விதம் நினைப்பதே, தவறாகும். ஏனென்றால், செய்தல், செய்வித்தல், செய்யாதிருத்தல் ஆகிய யாவும் கடவுளின் விருப்பமாகும். நீர் எண்ணுவதுபோல், நாம் கற்பனை செய்யத் தொடங்கினால், கடவுளை மதிக்காதவர்களாவோம். நம்மிடம் தற்பெருமை நிலைபெற்றுவிடும்'' என்றார் அவர்.

இவ்விதம் ஆணவத்தைத் துறந்து, பற்றை நீக்கி, கடமையையாற்றினார் காந்தி. நாற்பதாண்டுகள் கீதையின் உபதேசத்தைக் கடைப்பிடித்து வாழ்ந்தார். சுருங்கக் கூறினால், மனித உருவில் இப்புவியில் நடமாடிய கீதை அவர். 'தொழில், தொழில், பற்றை நீக்கித் தொழில் செய்க!' — அவருடைய நினைவில் எப்போதும் குடிகொண்டிருந்த மணிமொழி இதுவேயாகும். வாய் இறைவன் நாமத்தை ஒலித்துக் கொண்டிருந்தது. கை இராட்டினத்தை (தொழில்)ச் சுற்றிக் கொண்டேயிருந்தது. இதைப் பற்றி எண்ணும்போது ஒரு கிறிஸ்துவ முனிவருடைய நினைவு வருகிறது.

இத்தாலி நாட்டில் பிறந்தவர் அந்த முனிவர். பெயர் பிரான்சிஸ். ஒரு நாள் அவர் தம் தோட்டத்தைத் தாமே கொத்திவிட்டுக் கொண்டிருந்தார். அப்போது யாரோ ஒருவர் அவரை நோக்கி, ''ஐயனே! இன்று பொழுது சாயுமுன்பே தங்களுக்குச் சாவு நேரும் என்றால் தாங்கள் என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டார்.

''என் தோட்டத்தைக் கொத்தி முடிப்பேன்'' என்று அமைதியாய்க் கூறினார் முனிவர். அதாவது, 'என் கடமையை நான் செய்வேன்' என்றார் அவர்.

காந்தியின் வாழ்க்கையை எழுதிய லூயி ஃபிஷர் என்ற அமெரிக்க எழுத்தாளரும் இந்த நிகழ்ச்சியைத் தம் நூலில் குறிப்பிடுகிறார். அவர் அதில் மேலும் கூறுவதாவது: ''காந்தியும் தம் வாழ்நாளெல்லாம் தாம் வேலை செய்து வந்த தோட்டத்தைத் தாமே கொத்தி விட்டுத் துப்புரவாக்கிக் கொண்டிருந்தார். பாவிகள் குப்பையையும் கற்களையும் தோட்டத்தில் எறிந்து கொண்டிருந்தார்கள். அவர் தொடர்ந்து கொத்திவிட்டுக் கொண்டிருந்தார்.'' தோல்விக்கும் துன்பத்துக்கும் மாற்றாகக் காந்தி கைக்கொண்ட மருந்து தளராத பிடிவாதம்தான். செயல் புரிவதே அவருக்கு ஆன்ம அமைதி அளித்தது.

ஆம், இறுதிவரையில் கடமையைச் செய்து கொண்டே, இறைவன் நாமத்தை வாயில் ஒலித்துக் கொண்டே உயிர் நீத்தார் காந்தி. ''ஓடாதே, நில்! கடமையைச் செய்''— இதுவே அவர் நமக்குக் கூறும் பாடம்.

# இன்னமும் நாத்திகன் தான்...

'காடவன்'



சந்நிதித் தெருவில் ஓர் ஓரமாய் அடுத்தடுத்து வந்து நின்ற கார்களி லிருந்து ஆண்களும் பெண் களுமாகச் சிலர் இறங்கிக் கோயிலை நோக்கி நடந்த னர். தத்தம் கைகளில் அர்ச்சனைப் பொருள்களை ஏந்தியவாறு பட்டுப்புடவையும், குங்குமப் பொட்டுமாக அருகில் நெருங்கிக் கொண் டிருக்கும் அப்பெண்மணிகளைக் கண்டதும், பிச்சைக்காரக் கிழவன், ''அம்மா, தாய் மார்களே... புண்ணியவதிங்களே!'' என்று தொடங்கித் தன் வழக்கமான பல்லவியைப் பாடித் தீர்த்தான்.

விரிந்தும், பரந்தும், எல்லையற்றதாகி, கண்ணுக்கு எட்டியதும், எட்டாததுமாய், தெய்வத்தின் பரிபூரண சாட்சியாய் விளங்கும் நீல வானின் கீழே அந்த வானத்தை முட்டும் ஆற்றலின் கம்பீரமாய் நின்று கொண்டிருந் தது அந்த ஆலயக் கோபுரம். அந்தி மயக்கம் சூழ்ந்திருக்கும் வேளையில், கோயிலின் உட் புகுவோரும் கோயிலின் உள்ளிருந்து வெளிப் படுவோருமாக அந்தக் கோபுர வாசல் கலகலப்பாகத் திகழ்ந்தது!

கோபுரத்தின் அடியில் ஒரு கிழிந்த துணியை விரிப்பாக்கிக் கொண்டு குந்திக் கிடந்த பிச்சைக்காரக் கிழவன், ''அம்மா! தாய்மார்களே! புண்ணியவதிங்களே...இந்தக் கிழவன் முகம் பார்த்துப் பிச்சை போடுங் கம்மா....!'' என்று பெருத்த குரலில் கூவிக் கொண்டிருந்தான்.

இனிய குழலோசையைப் போல் இரண்டு கார்களின் ''ஹார்ன்'' சத்தம் கேட்டது.

பலன் எதிர்பார்த்ததுதான்! தத்தம் ஆண் மக்களோடு சேர்ந்து கொண்டு கலகலப்பாகப் பேசிச் சிரித்தவாறு சென்ற அந்தத் தாய் மார்கள் அவனைக் கவனித்ததாகவே தெரிய வில்லை! அன்று என்னவோ ஆண்டவன் அவ னிடம் கருணை வைக்கவில்லை.

கத்திக் கத்தி வறண்டு போயிருக்கும் தன் தொண்டைக் குழியை நனைத்துக் கொள்ளக் கருதி, கஷ்டப்பட்டு வாயில் எச்சிலைக் கூட்டி ஒரு முறை விழுங்கிக்கொண்டான் அவன்.

ஒரு காலத்தில் நினைவுகளைப் பெருக்கிக் கொண்டு திரிந்த சோமு பின்னாளில் இப்படி ஆவான் என்று அப்போது யாரும் எதிர் பார்த்திருக்கவில்லை! அவனைப் பற்றி அப்படி ஓர் எண்ணத்தை ஏற்படுத்திக் கொள்ளவும் அவர்கள் பயந்தனர்.

சோமு அப்படிப்பட்டவன்தான்!

சின்ன வயதிலிருந்தே அவனுக்குப் படிப்பு ஏறவில்லை.

அவனுடைய பதினெட்டாவது வயதில் அவனது தந்தை இறந்து போனார். வயதான தாயால் அவனது அங்கப் பொலிவுகளையும் புஜ பலத்தையும் கண்டு ''இவன் என்னுடைய மகன்'' என்று பூரிக்க முடிந்ததே தவிர, அவனின் நெருப்பு எண்ணங்களை அணைக்க முடியவில்லை. அவன் ஒழுக்கம் தவறி நடந்து நல்ல வாலிப வயதில் தேக திடத்தை இழந்து நிரந்தர நோயாளியாகவும் ஆகிவிட்டான்.

ஒரு சமயம் அவ்வூரில் பொன்னியாற்றின் கரையின் ரம்மியமான சூழலில் அமைந்திருந்த விநாயகப் பெருமானின் சிறு கோயிலொன்றில் ஊர், பேர் தெரியாத சாமியார் ஒருவர் வந்து தங்கி யிருந்தார்! பழுத்த பழம்தான் என்றாலும் பசுமை மாறாத குணங்களும் இனிமை ததும்பும் சுபாவங்களும் கொண்டிருந்த அந்தச் சாமியார் வைகறையில் துயிலெழுந்து காவிரியில் நீராடி, நெற்றி நிறையவும் அங்கம் முழுதும் திருநீறு பூசி விநாயகப் பெருமானின் சந்நிதியில் நின்று கொண்டு மனம் கசிந்து நெக்குருகப் பாடிப் பரவசப்பட்டு, அந்தப் பரவசத்தில் தம்மையும் மறந்திருக்கும் தனித்தன்மை கொண்டவரா யிருந்தார்!

அவர் ஊருக்குள் வந்து பிச்சை எடுப்பதில்லை! அவருக்கு எங்கோ ஓரிடத்திலிருந்து பணம் வந்து கொண்டிருந்தது. அவரோடு நெருங்கிப் பழகிய ஓரிருவர்; அவர் மகனிடமிருந்து அவருக்குப் பணம் வருவதாகப் பேசிக் கொண்டனர்.

அவருக்கு வெள்ளை வேட்டிச் சாமியார் என்றே பெயர்.

ஒரு நாள், காலை நேரத்தில் அந்தச் சாமியார் ஆற்றங்கரை விநாயகப் பெருமான் கோயிலின் முன் மண்டபமும் சந்நிதியுமாக விளங்கிய அந்தச் சிறிய இடத்தில் உட்கார்ந்து கொண்டு' கோயிலின் படிக்கட்டுகளைத் தொட்டுக் கொண்டு ஓடிக்கொண் டிருந்த காவிரியையே பார்த்துக் கொண்டிருந்தார்.

அந்த நேரத்தில்தான் சோமு அங்கே வந்தான். அவனோடு அவன் வாரிசுகளாய் இன்னும் இரண்டு வாலிபர்களும் வந்தார்கள்.

சோமு சாமியாரைப் பார்த்து, ''என்ன சாமியாரே! சௌக்கியமா?'' என்றான், ஏளனம் பொங்கும் கண்களால் சிரித்தபடியே!

சாமியார் ஏதோ சித்தர் பாடலின் வரிகளையே திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டுதான் இருந்தார்.

சோமுவுக்கு ஆத்திரம் பொங்கியது.

''ஏய், சாமி! நீ யாரு? உன் பேரு என்ன? உனக்கு எங்கே இருந்து பணம் வருது? சொல்லு.... ம்.... சொல்லு!'' என்று கர்ஜித்தான் அவன். அவனுடைய வாரிசுகளும் தலைவனின் ஆற்றலை எண்ணி எக்காளமிட்டு நகைத்தனர்.

சாமியார் பாட்டை நிறுத்தி விட்டுச் சோமுவைப் பார்த்தார். ''தம்பி, நான் உன் வழிக்கு வரலியே! நீ ஏன் என் வழிக்கு வர்றே?'' என்றார் அவர்.

''ஏய் சாமி! இது என்ன கேட்பார் இல்லாத ஊரா? எங்கேயாவது கொலை கிலை பண்ணிப்புட்டு இங்கே வந்து சாமியாராய்த் தலைமறைஞ்சு வாழுறியா? உள்ளதைச் சொல்லிப்புடு; இல்லாட்டி ரொம்பக் கஷ்டப்படுவே!''

சாமியார் சோமுவின் முகத்தைக் கூர்ந்து கவனித்தார். சற்று நேரம் அப்படியே கவனித்துக் கொண்டிருந்து விட்டு ''ஐயோ, தெய்வமே! உன் மக்களுள் ஒருவன் ஒன்றும் தெரியாதவனா யிருப்பதால் உனக்கென்ன நஷ்டம்? அவனுக்கு இதுவா தண்டனை?'' என்று வெறி கொண்டவரைப் போல் புலம்பத் தொடங்கினார்.

சோமுவின் ஆத்திரம் எல்லை கடந்து விட்டது. அவன் தன் சகாக்களில் ஒருவனை நோக்கி, ''ஏய், இவனுடைய மூட்டை முடிச்சுக்களைச் சோதனை போடு!'' என்றான்.

சாமியாரின் மூட்டை முடிச்சுகள் சோதனை யிடப்பட்டன.

சின்னஞ் சிறிய சில சமையல் பாத்திரங்களும் மொத்தமான சில புத்தகங்களும் இருந்தன. திருநீற்றுப் பை — குங்குமச் சிமிழொன்று. ஒரு ஜமுக்காளம், மாற்றாக உடுத்திக்கொள்ள ஒரு வேட்டியும் துண்டும். மொத்தமான புத்தகங்களுள் ஒன்றில் சில பத்து ரூபாய் நோட்டுகள் — ஒரு சிமிழில் கொஞ்சம் சில்லறை நாணயங்கள் இருந்தன.

சோமு ரூபாய் நோட்டுக்களையும் சில்லறை நாணயங்களையும் எடுத்துக் கொள்ளுமாறு, தன் சகாக்களுக்கு உத்தரவிட்டான்!

சாமியார் சிரித்துக் கொண்டார்.

அவரைத் தேடி வந்த பொருள்கள்தாமே அவை!

''ஏய், போலிச் சாமியாரே! நீ எங்கேயோ இளம் பெண்ணொருத்தியைக்காதலிச்சிருக்கே. அது கைகூடலே. அதுதான் இப்படிப் பைத்தியம் பிடிச்ச மாதிரி மரம் மட்டைகளைப் பார்த்துக்கிட்டு நிற்கிறே! என்ன, நான் சொல்றது சரிதானே! இப்ப அந்தப் பொண்ணுதான் பரிதாபப்பட்டு உனக்குப் பணம் கொடுக்கிறா!.... ஆமாம், உன் முகத்திலே ஏன் குங்குமப் பொட்டு... ஓ... நீதான் நீதான்!'' அவன் வார்த்தைகளை முடிக்கவில்லை. அதற்குள்ளாகவே அவனுடைய நண்பர்கள் இருவரும் கைகளைத் தட்டிக் கொண்டு பெருத்த குரலில் சிரித்துவிட்டனர். சோமுவும் பரிகாசமாகச் சிரித்தான்.

அந்தச் சாமியார் இப்போதும் சிரித்துக் கொண்டார். சொல்லுக்குப் பதில் சொல் இல்லை அவரிடம். ஆனால் சிரிப்புக்குப் பதில் சிரிப்பாயிருந்தது! அதிலும் கூட, தன்மை மட்டும் வேறா என்னவோ? என்ன மனிதர் அவர்!

சோமு அவ்வளவு சீக்கிரத்தில் — சுலபத்தில் அங்கிருந்து போய் விடுவதாயில்லை! திருநீற்றுப் பையையும் குங்குமச் சிமிழையும் சட்டென்று ஒன்றன் பின் ஒன்றாய் ஆற்றில் விட்டெறிந்தான்.

சாமியார் இப்போது சிரிக்கவில்லை. சற்று அந்தரத்தில் மிதந்து, ஆற்றில் பட்ட அப்பொருள்களோடு அவர் பார்வையும் தொடர்ந்து சென்று திரும்பி வந்தது. அவரே தேடி வைத்துக் கொண்டிருந்த அரும் பெரும் பொக்கிஷங்களல்லவா அவை!

சாமியார் இப்போது சோமுவை ஒரு கணம் வியப்போடு பார்த்தார்.

''தெய்வமே! உன் மக்களுள் ஒருவன் ஒன்றும் தெரியாதவனு யிருந்தால் உனக்கென்ன நஷ்டம்? அவனுக்கு இதுவா தண்டனே?'' என்று மறுபடியும் புலம்பினார்.

இரண்டு மூன்று மாதங்கள் கடந்து விட்டன. ஒரு நாள் தனக்குப் பிரியமான பெண்ணொருத்தியைச் சந்திக்கப் போகும் முனைப்பில் அலங்கரித்துக் கொள்ளத் தன் முகத்தைக் கண்ணுடியில் பார்த்தான் சோமு. பார்வை பளிச்சென்று இல்லை. முதன் முதலாக அவன் மனத்தில் விரிசல் கண்டுவிட்டாற்போன்ற ஒரு நடுக்கம் ஏற்பட்டது! அச்சத் தீ அடிவயிற்றிலிருந்து கிளம்பி, நெஞ்சில் முட்டி மேல் நோக்கிச் செல்வது போன்றும் ஒரு பிரமை.

அன்றொரு நாள் அந்தச் சாமியார் ஏன் தன் முகத்தை அப்படி உற்றுப் பார்த்துப் புலம்பி அழுதார் என்பதற்கான பொருள் இன்று அவனுக்கு விளங்கி விட்டது!

''ஐயோ! நான் இன்று அழகன் இல்லையா? என்னை யாரும் நெருங்க மாட்டார்களா? ஐயோ... நான்... நான்!'' அவன் மனம் அழுதது.

அன்று அவன் மனத்தில் ஆசை வெறி நெருப்பாக நின்று நாலா பக்கமும் தன் சூட்டை வாரி இறைத்துக் கொண்டிருந்தது.

இன்றே அச்சம் என்னும் நெருப்பில் அவன் மனமே வெந்து கொண்டிருந்தது.

என்றாலும் அவன் தான் போக வேண்டிய இடத்துக்குப் புறப்பட்டுப் போனான்.

நோய் வெளிப்பட்டு எல்லார் கண்களுக்கும் தெரிந்தது. அவன் தாயார் இந்தக் கவலையாலேயே கண்களை மூடிவிட்டாள். அதன் பிறகு...? அதன் பிறகு என்ன, அவன் உடல் கறுக்கத் தொடங்கியதைப் போல் அவன் வாழ்க்கையிலும் இருள் சூழ்ந்தது.

முன்பு வயதாலோ வாழ்க்கை அநுபவங்களாலோ ஊருக்குப் பெரியவர்கள் என்றிருந்த ஒன்றிரண்டு பேர்களைக் கண்டால்கூட நெஞ்சை நிமிர்த்தி, நெருப்பாய் அவர்களை முறைத்துப் பார்த்துவிட்டுப் போகும் அவன், இனி அவ்வூரில் மாடு மேய்க்கும் பஞ்சைச் சிறுமியைப் பார்த்தால் கூடக் கூனிக் குறுகித்தானே செல்ல வேண்டும்?

அவ்வாலயத்தின் முன்னால் உட்கார்ந்து கொண்டு, கண்கள் பிதுங்கி, கண்ணிமைகள் தடித்து, சருமம் விகாரமாகிக் காண்போர் கண்களுக்கெல்லாம் அருவருக்கத் தக்க தொழு நோயாளியாகக் காட்சி தரும் அந்தப் பிச்சைக்காரன் — இரவுப் பசிக்குப் பொருள் தேடும் முனைப்பில் அவலமாக ஓலமிட்டு ஓய்ந்து போய்க் குந்திக் கிடந்தவன் — மறுபடியும் ஏக்கத்தோடு கோபுர வாசலைப் பார்த்தான். அந்தக் கோபுர வாசல் வெறிச்சோடிக் கிடந்தது.

அவன் முனு முணுத்துக் கொண்டான் என்று சொல்வதை விட அவன் மனம் அந்தரங்கமாய் உத்வேகம் கொள்ள, அதற்கேற்ப உதடுகள் அப்படி ரகசியமாய்த் துடித்துக் கொண்டன என்று சொல்வதுதான் பொருந்தும். அதனைத் தொடர்ந்து ஒளி மங்கிப் போன தன் கண்களைச் சற்றே மூடிக் கொண்டான். பிறகு அவன் தன் கண்களை திறந்தபோது கண்ணீர்த் திவலைகள் நோய்த் தடிப்புகள் நிறைந்த அவன் கன்னங்களில் வழிந்தோடின.

கோபுர வாசலின் உட்பக்கம் சிரிப்பொலி கேட்டது. சில விநாடிகளில், கார்களில் வந்து கோயிலுக்குள் சென்ற கூட்டம் ஆண்களும் பெண்களுமாக வெளிப்பட்டது.

''அம்மா, தாய்மார்களே! புண்ணியவதிங்களே! இந்த நோயாளிக்குப் பிச்சை போடுங்கம்மா!...''

அந்தச் சிறு கூட்டத்திலிருந்த ஒவ்வொருவரும் அந்தப் பிச்சைக்காரன் இருந்த திசையில் திரும்பிப் பார்த்தனர். அக் கூட்டத்திலிருந்து ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி அவனருகில் நெருங்கி ஒரு தேங்காய் மூடியையும் இரண்டு வாழைப் பழங்களையும் அவனுக்கு முன்பாக விரித்த விரிப்பாய்க் கிடந்த ஒரு கந்தல் துணியில் விட்டெறிந்தாள். ஒரு பெரியவரும் ஐந்து காசு நாணயமொன்றை அவனை நோக்கி வீசி எறிந்தார். பிறகு அவர்கள் நடந்து விட்டனர். அந்தக் கார்களும் மறைந்து விட்டன.

உண்ணக் கூடிய பண்டங்களைப் பார்த்ததாலோ என்னவோ அந்தப் பிச்சைக்காரனுக்கு அந்த நேரம் கெட்ட நேரத்திலும் பசி வந்து விட்டது. ஆ, நேரமாவது, காலமாவது! அகப்படும் பொருள்களை அகப்படும் காலத்திலே அள்ளிக் கொண்டு விடும் சித்தாந்தத்தில்தானே அவன் ஒரு காலத்தில் வாழ்ந்து கொண்டிருந்தான்!

பசி வெறியோடு அந்தத் தேங்காய் மூடியை எடுத்து அவசர அவசரமாய்க் கடித்துத் தின்றான் அவன்.

இருள் கவிந்து கொண்டிருந்தது என்பதற்கு அடையாளமாக அவனுக்கு முன்னால் கோபுரத்தைச் சார்ந்து ஓடும் சந்தின் ஆரம்





"என்ன சித்திரக்காரரே! என்ன படம் போட்டிருக்கிறீர்கள்? நன்றாகவே இல்லையே!"

"என்ன சார் அப்படிச் சொல்லி விட்டீர்கள்? கண்ணால் பார்ப்பதை நான் அப்படியே போட்டிருக்கிறேன்."

"சரி! போட்டதை ஒரு தடவை கண்ணால் பாருமேன்!"

பத்தில் மின் விளக்கு பளிச்சென்று ஒளி வீசத் தொடங்கியது. அவன் குனிந்து கந்தல் விரிப்பில் கிடந்த இரண்டு வாழைப் பழங்களையும் எடுத்துத் தோலை உரித்துக் கோபுர பீடத்தின் ஓரமாக எறிந்து விட்டு அப்பழங்களை விழுங்கினான். அப்பொழுது சந்நிலிருந்து யாரோ சிலர் அவனைக் கடந்து போனார்கள். சிறுமியொருத்தி மட்டும் சந்நிதித் தெரு முதல் வீட்டின் பக்கவாட்டத்தில் வெளிச் சுவரின் அடியில் ஒதுங்கி நின்று மின்விளக்கு வெளிச்சத்தில் அந்தப் பிச்சைக்காரனின் முகம் பளபளப்பதையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

அந்தச் சிறுமி அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள். பிறகு திடீரென்று தன் கையிலிருந்த ஒரு பத்துக் காசு நாணயத்தை அவனிடம் விட்டெறிந்துவிட்டுத் திரும்பித் திரும்பி அவனைப் பார்த்துக் கொண்டே, நடந்து கோபுர வாசல் வழியாகப் போய் விட்டாள்.

பிச்சைக்காரனுக்கு ஆச்சரியமாக இருந்தது. தன்னுடைய கந்தல் துணியில் கிடக்கும் அந்த நாணயத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான் அவன். தன்னிலும் பலவீனமும் எளிமையும் கொண்டு மிரட்டினால் மிரட்சியடையும் அவ்வேழைச் சிறுமியின் செய்கை அவனுக்குப் புரிந்துகொள்ள முடியாததாய்த் தானிருந்தது. அவன் தலை நிமிர்ந்து அச்சிறுமி சென்று மறைந்த கோபுர வாசலைக் குழப்பத்தோடு பார்த்து விட்டு, மீண்டும் குனிந்து, கந்தல் விரிப்பில் கிடந்த அந்தக் காசைப் பார்த்தான். இப்போது அந்த நாணயம் ஏதோ மாயம் செய்வதைப் போல் அவனுக்கு ஒரு பிரமை.

இரண்டாவது மதில் சுவரில் அம்மன் சந்நிதிக்கு எதிர்த்தாற்போல் ஒரு வாசல் உண்டு. விசேஷ நாட்களில் இரும்புக் கம்பிகளால் ஆன அக்கதவைத் திறந்து வைத்திருப்பார்கள். அன்றும் அவ்வாசல் திறந்துதானிருந்தது. பிச்சைக்காரன் அவ்வாசல் வழியாகச் செல்லும்போது அவ்வாசலுக்குச் சற்றுத் தள்ளி மதில் சுவரின் ஓரமாகக் கிடந்த ஒரு பெரிய கருங்கற் பாறையின் அருகில் ஒரு பெண் சிறுமியொருத்தியைத் தலைமயிரைப் பிடித்திழுத்து அடித்து நொறுக்கிக் கொண்டிருந்தாள். அச்சிறுமியோ 'கோ' என்று கதறிக்கொண்டும், "இனிமேல் செய்யலேம்மா, இனிமே ஜாக்கிரதையா இருக்கிறேம்மா" என்று பரிதாபமாக ஓலமிட்டுக் கொண்டும் அன்னையின் பிடியில் சிக்கி யிருந்தாள். அவர்கள் நின்றிருந்த பகுதி இருட்டானதினால் முகங்கள் சரியாகப் புலனாகவில்லை. "ஏ பொம்பிளே, இங்கே வா! ஏன் அந்தப் பொண்ணைப் போட்டு அடிக்கிறே?" என்றான் அவன் அதிகார தோரணையில்!

சிறுமியைத் தலைமயிரைப் பிடித்திழுத்த வாறே வெளிச்சத்துக்கு வந்தாள் அப்பெண். சிறுமியின் முகத்தைக் கண்ட பிச்சைக்காரனுக்குத் 'திக்'கென்றது. சற்று முன்பு அவனுக்குப் பத்துக் காசுகள் பிச்சையிட்ட சிறுமியல்லவா அவள்! இனம் புரியாத வேதனையோடு அவன் அச்சிறுமியையே பார்த்துக் கொண்டிருந்தான். நடந்ததை யாரிடமாவது சொல்லித் தீர்த்தால்தான் நிம்மதி என்று எண்ணியோ என்னவோ அச்சிறுமியின் தாய், "கேட்டியா ஐயா சேதியை! என் குடிசை இருளிலே கிடக்கு. பத்துக் காசு கொடுத்து மண்ணெண்ணெய் வாங்கி வரச் சொன்னா, இந்தச் சிறுக்கி அந்தக் காசை எங்கோ தொலைச்சுட்டு இந்தப் பாறாங்கல்லிலே குந்திக் கிடக்கிறா! இவளைத் தேடிக்கிட்டு வேறே வரவேண்டியதாப் போயிட்டதே! அங்கே என் கைப்பிள்ளை இருட்டிலே இல்லே கிடக்கும்!" என்று சொல்லிவிட்டுத் திடீரென்று அச்சிறுமியின் பக்கம் திரும்பினாள், "ம்... ஏண்டி, கழுதை! உன் அப்பன் சூதாடுறவன்; அவன் கோணல் புத்திதானே உனக்கும் இருக்கும்! ... ம்.... காசை எங்கே போட்டே?.... சொல்லு .... சொல்லு!" என்று கர்ஜித்தவாறு வலது கை விரல்களை மடக்கி முஷ்டியால் அச்சிறுமியின் ஒரு கன்னத்தில் குத்தினாள்! தேம்பிக் கொண்டிருந்த சிறுமி மறுபடியும் பெருத்த குரலில் "இல்லேம்மா, இல்லேம்மா...." என்று ஓலமிட்டு அழுதாள்.

கல்லாய்ச் சமைந்திருந்த அந்தப் பிச்சைக்காரன், திடீரென்று ஆவேசம் கொண்டவனைப் போல், "இந்தா, பொம்பளே, அந்தப் பொண்ணை அடிக்காதே....!" என்று கூறிவிட்டு இன்னும் ஏதோ சொல்ல நினைத்தபோது உள்ளுணர்வால் உந்தப்பட்டவனாகி வாயடைத்துப் போய் அந்தச் சிறுமியையே பார்த்துக் கொண்டிருந்தான்! அந்தச் சிறுமியோ பரிதாபமாக அவனைப் பார்த்து, "சொல்லிவிடாதே, சொல்லிவிடாதே!" என்று கண்களால் கெஞ்சினாள்.

பிச்சைக்காரனின் மனம் அசைந்தது.

'அந்தச் சிறுமியின் காசைத் திருப்பிக் கொடுத்துவிட நான் தயாராகவே இருக்கிறேன். ஆனால், அவள் எனக்குப் பிச்சையிட்டாள் என்ற விவரத்தை அவள் தாயார் தெரிந்து கொண்டால், 'நீ கெட்ட கேட்

டுக்குப் பிச்சை வேறு போடுகிறாயா?' என்று அவனை இன்னும் அடித்துக் கொன்றே விடுவாளே! அவள் அந்தக் காசைத் தொலைத்து விட்டதாகவே இருக்கட்டும். கடுமையான தண்டனையிலிருந்து அவள் தப்ப இதுவேவழி!'

அந்தச் சிறுமியை இழுத்துக் கொண்டு அவள் தாயார் பிரதான கோபுர வாசலை நெருங்கிக் கொண்டிருந்தாள். அம்மன் சந்நிதியிலிருந்து ஆலய மணி கம்பீரமாக முழங்கியது. ஏதோ தாலாட்டு ஒலியில் மகிழ்ந்தவனைப் போல் அவ்விடத்தில் நின்றவாறே அம்மன் சந்நிதியை நோக்கினான் பிச்சைக்காரன். அவன் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர்த் திவலைகள் பிரவகித்தன. அங்கே அம்மன் முன்பாக அடுக்கு வரிசைத் தீபாலங்காரம் சோதிப் பிழம்பாக எழுந்தது. பரவசத்தில் அப் பிச்சைக்காரன், தன்னிரு கூழைக் கரங்களை உயர்த்திக் கும்பிட்டவாறே, ''தாயே! நீ அபயாம்பிகையாயிற்றே! இன்றில்லாவிட்டாலும் நாளையாவது அந்தச் சிறுமிக்கு மங்கலங்களை அருள்வாயம்மா!'' மானசீகமாகப் பிரார்த்தித்துக் கொண்டான். அதன் பிறகும் அவன் அந்நிலையிலேயே சற்றுநேரம் கண்களை மூடியவாறிருந்தான். அம்மன் சந்நிதியில் தீப வரிசை அடங்கி விட்டபோதும் கூட அவன் மனத்துக்குள் அந்நேரத்தில் ஒரு சோதிப் பிழம்பு தெரிந்து கொண்டுதானிருந்தது.

இதற்கு முன்னாலும் அவன் எத்தனையோ முறை அவ்வழியே சென்றிருக்கிறான். ஆனால் அப்போதெல்லாம் — ஒரு முறை கூட — அவன் அச்சந்நிதியை நோக்கியதில்லை. மணியோசையைச் செவிமடுத்ததில்லை.

இன்று இவ்வனுபவங்கள் அவனுக்கே புதுமையாயிருந்தன!

அவன் தன் கண்களைத் திறந்துகொண்டான். இப்போதுஅவனுக்குப்பெருமைபிடிபடவில்லை!

''இதுவரை நான் எனக்காகக் கூட — ஒரு முறையேனும் — பிரார்த்தனை செஞ்சுக்கிட்டது கிடையாது. இப்போ நான்... நான்... அதுவும் இன்னொரு ஜீவனுக்காகப் பிரார்த்தனை செஞ்சிருக்கேன்!... பலிக்காமலா போகும்... பலிக்காமலா போகும்!''

அவன் மனம் கொள்ளாப் பெருமையோடு தன் கால்களைப் பரப்பிப் பரப்பி விகாரமாய் நடந்தான்; நகர்ந்தான்.

''அந்தக் காரிலே போனவங்க எனக்குப் பிச்சை போட்டாங்களே, அவங்களுக்காக நான் பிரார்த்தனை செஞ்சேனா?... இந்த ஏழைச் சிறுமியும் கூட இப்போ அவன் அம்மா கையாலே அடிபடலேன்னா இவளுக்காகவும் நான் பிரார்த்தனை செஞ்சிருப்பேனா? அல்லது இவள் எனக்குப் பிச்சை யிட்டிருக்கவில்லையென்றாலும் இவளை என் மனம் நினைத்திருக்குமா? என் பசியை நினைச்சுக்கிட்டுத்தானே நான் போயிருந்திருப்பேன். நான் அப்படிப்பட்டவன்தானே! ச்சீ... என்ன மனசு இது! என்ன பெருமை எனக்கு.. சாமீ.... சாமீ....''

இப்போது அவனால் சில அடிகள் நடக்க முடிந்தது. ஆனால் மீண்டும் ஸ்தம்பித்து அப்படியே நின்றான். பழைய நினைவு.

''சாமீ.... சாமீ... நான் உன் பொருளை எடுத்துக்கிட்டு உன்னைக் கேவலமாப் பேசினப்போ நீ எவ்வளவு பொறுமையாச் சிரிச்சுக்கிட்டே இருந்தே! ஆ, நீ சித்தர் பரம்பரையைச் சேர்ந்தவரு! நான் அற்பன். உன் பொருளை எடுத்துக்கிட்டு, உன்னை அந்த ஊரை விட்டே போகும்படி செஞ்சுட்டேன்! ஆனால் நான் மட்டும் அங்கேயாவா இருந்தேன்? இருக்க முடிஞ்சுதா, என்ன! என் நோயைத் தெரிஞ்சுக்கிட்டு, உன்னைத் துன்புறுத்திய எனக்காக இரக்கப்பட்டியே! அது உன்னாலேதான் சாமி முடியும். உன் வழிபாடும் செயல்களும் முழுக்க முழுக்கத் தியாக உணர்வுகளாச்சே! நான் அப்படியா? அற்பன். எதிலுமே ஆதாய உணர்வு கொண்ட அற்பன்! உன் கால் தூசுக்குக்கூட நான் ஈடாக மாட்டேன். சிறுமையே இன்னும் என்னை விட்டுப் போகாதபோது பெருமை எப்படிக் கிடைக்கும்? நான்... நான்...''

அவன் உடம்பு சிலிர்த்தது. அவ்வழுகையினூடே அது எதையோ ஆராயவும் முற்பட்டது!

''சாமீ, நான் செஞ்ச பிரார்த்தனையிலே காரிய நோக்கம் இருந்ததே ஒழிய கருணையில்லே; தியாக உணர்வு இல்லே. அதனாலே, சாமீ...நான்... நான் இன்னமும் நாத்திகன் தான்; இன்னமும் நாத்திகன்தான் சாமி!''

திடீரென்று அவன் மனத்தில் மின்னல் தோன்றியது. அவ்வெளிச்சத்தில் அவன் அவரை — அவரையே பார்த்தான். கண்களை மூடிக் கொண்டு நீண்ட காலத்துக்குமுன்பு — உள்ளமும் உடம்பும் தடித்திருந்த காலத்தில்— ஆற்றங்கரைப் பிள்ளையார் கோவிலில் அவன் கண்ட அந்தச் சாமியாரின் முழு உருவத்தையும் இப்போது நன்கு நினைத்துப் பார்த்தான். இப்போது அது முடிந்தது அவனால். அவன் பார்த்துக் கொண்டே யிருந்தான்.

சட்டென்று அவன் உதடுகளும் பிரிந்தன.

**''ஆங்காரம்... ஆங்காரம்....''**

அதுவும் வேகமாய் அவனுக்கு நினைவு வந்து கொண்டுதான் இருந்தது.

இதுவரை அவன் எந்தப் பாட்டை நினைவுக்குக் கொண்டுவர அவ்வப்போது அரும்பாடு பட்டுக் கொண்டிருந்தானோ, அந்தப் பாட்டு — அவன் ஒரு காலத்தில் ஆற்றங்கரைச் சாமியாரைத் துன்புறுத்திவிட்டுத் திரும்பும்போது அந்தச் சாமியார் அப்போது அவனைப் பார்த்துக் கடைசியாகப் பாடிய அந்தப் பாட்டு — இப்போது அவன் நினைவுக்கு வந்துவிட்டது; வந்தேவிட்டது!

> **'' ஆங்கார முள்ளடக்கி,**
> **ஐம்புலனைச் சுட்டறுத்துத்**
> **தூங்காமல் தூங்கிச்**
> **சுகம் பெறுவ தெக்காலம்?''**

அவன் அங்கேயே நின்று கொண்டு அந்தப் பாட்டையே திரும்பத் திரும்ப உரக்கப் பாடிக் கொண்டிருந்தான். அப்போது போவோர் வருவோர் யாரும் அவனுக்கு ஒரு பொருட்டாகத் தெரியவில்லை.

தன்னை உணர்ந்துவிட்ட பிறகு ஒருவனுக்குக் கிடைக்க வேண்டியது கிடைத்துத்தானேயாகவேண்டும்!

இப்போது சோழுவுக்கும் குரு உபதேசம் கிட்டிவிட்டது. இனி அவன் சிறுமை, பெருமைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒருவனும் மாறிவிடுவான்.



# திருநாள் திரும்பி வரும்...

கமலாமணாளன்

டண்.... டண்.... டண்!

தூரத்தில் மாதா கோவிலில் மணி அடிக்கும் ஒலி தொடர்ந்து கேட்கிறது!

உயர்ந்து, கம்பீரமாக, முகப்பில் சிலுவையுடன் கூடிய புதிதாகக் கட்டப்பட்ட மாதா கோவிலின் மணி ஓசைதான் அது.

அன்று வெள்ளிக்கிழமை! கல்லறைத் திருநாள்! கத்தோலிக்கக் கிறிஸ்துவர்களின் வாழ்வில் வரும் -- அவர்கள் அவசியம் சந்தித்துத் — தீரவேண்டிய முக்கியமான தினம்.

'கிரேவ் யார்ட்' காவலாளியால் கையும் களவுமாகப் பிடிபட்ட ஆரோக்கியசாமி எல்லாரும் போய்விட்ட பிறகு பாதிரியார் சேவியரின் புனித பாதங்களில் மண்டியிட்டுத் தலைகுனிந்து நிற்கிறான். தன் பாவத்தைப் பரிசுத்த ஆவியின் மூலம் போக்கிக்கொள்ளச் சாமியாரிடம் மனம் திறந்து பேசுகிறான். அவன் என்ன குற்றம் செய்தான்? அவன் ஏன் பாவ மன்னிப்பு வேண்டுகிறான்?

இதைத் தெரிந்து கொள்ளுவதற்கு முன்னால் ஆரோக்கியசாமியின் வாழ்க்கை ஏடுகளைக் கொஞ்சமாவது புரட்டிப் பார்க்க வேண்டும். கண்ணீரும் துயரமும் நிறைந்த வாழ்க்கை அது....

ஃ ஃ ஃ

மத்திய அரசாங்க அலுவலகம் ஒன்றில் வேலை செய்து கொண்டிருந்த ஆரோக்கியசாமி திடீரென்று கண்ணை மூடிக் கொண்டு படுகுழியில் விழுந்து விட்டான்.

சமீபத்தில் நடந்த மத்திய அரசாங்கச் சிப்பந்திகளின் வேலைநிறுத்தத்தில் வேண்டுமென்றே சிக்கிக் கொண்டதன் மூலம் தன் வேலையை இழந்து விட்டவன் அவன். நண்பர்கள் எவ்வளவோ தூரம் எடுத்துச் சொன்னார்கள். ஆரோக்கியசாமி அவர்கள் எச்சரிக்கையை லட்சியம் செய்யவேயில்லை.

சிறிதும் முன்யோசனையின்றி வேலைநிறுத்தத்தில் கலந்து கொண்டு இருந்த வேலையையும் போக்கிக் கொண்டான்.

ஏற்கனவே ஏழைமையும், இல்லாமையும் குடிகொண்டுள்ள குடும்பம் அவனுடையது.

மகனுக்கு வேலை போய்விட்டது என்று கேட்டவுடன் அவனுடைய அம்மாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. வேலை போனதுடன் அம்மாவுக்கும் இப்படி ஆகிவிட்டதே என்று கண் கலங்கினான் ஆரோக்கியசாமி.

வறுமையின் கோரப் பிடி அவனைப் பலமாக அழுத்தியது.

வேலையில்லாத் திண்டாட்டம் பெருகி வரும் இந்தக் காலத்தில், எங்கு தேடியும் அவனுக்கு வேலை கிடைக்கவில்லை. கிடைக்கும் என்ற நம்பிக்கையும் போய்விட்டது.

அறியாத்தனத்தால் வேலைநிறுத்தத்தில் சேர்ந்து இருந்த வேலையையும் போக்கி வருமானத்துக்குரிய ஒரே வழியையும் அடைத்துவிட்டுத் தவிப்பதைக் கண்டு எல்லாரும் அவன்மீது அனுதாபப்பட்டனர்— அதைவிட எரிச்சலும் கொண்டனர்.

அனுதாபமானாலும், எரிச்சலானாலும், இரண்டும் அவனுக்கு ஒன்றுதான். அதனால் அவனுக்கு எவ்விதப் பயனுமில்லை.

வயதான தாயார் — அதுவும் இப்போது அவனுக்குப் பைத்தியம் — நோயாளியான மனைவி — திருமணப் பருவத்தில் இருக்கும் மகள் — கல்லூரியில் படிக்கும் மகன் — இது போக இரண்டு ஆணும், இரண்டு பெண்ணுமாக நான்கு குழந்தைகள் — மொத்தம் ஒன்பது பேரைக் கொண்ட குடும்பம் பெரியது, அவனுடையது.

இதற்கெல்லாம் சோறு போட்டு வந்தது அவன் ஒருவனுடைய வருமானம். இப் போது அந்த வருமானமும் இல்லை யென் னும்போது....?

ஆரோக்கியசாமியின் வீட்டு நிலைமை இரங்கத் தக்கதாக இருந்தது.

எப்படியோ கஷ்டப்பட்டு அம்மாவைக் கீழ்ப்பாக்கம் ஆஸ்பத்திரியில் சேர்த்தான். சேர்த்ததோடு சரி. மேட்டுப்பாளையத்தில் இருந்து அடிக்கடி போய்ப் பார்க்க முடியுமா?

இந்தக் கொடுமை போதாதென்று அவன் மனைவி ரெஜினு இரண்டு நாட்களாகப் படுத்துக் கிடக்கிருள். அவளுக்கு உடம்புக்கு மறுபடியும் வந்து விட்டது. இது அவ ளுக்குப் பேறுகாலம் வேறு. ஏழைக்கு 'அள் ளாமல் குறையாமல்' கிடைக்கும் ஒரே ஒரு வரப்பிரசாதம் இது ஒன்றுதானே? எப்படி யாவது ரெஜினு நல்லவிதமாகப் பெற்றுப் பிழைக்க வேண்டுமே என்ற கவலை வேறு அவனைப் பிடித்து வாட்டியது.

வீட்டில் ஒரு சாமானும் இல்லை. எல்லாம் காலி. அடுப்பில் பூனை படுத்துக் கிடக்கிறது. ரெஜினு 'வாயும் வயிறு'மாக இருக்கும்போது 'காலி அடுப்பாக' இருப்பது சரியில்லை. அது 'புகைய' மார்க்கம் என்ன?

தலைக்குச் சூடேறியது.

வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்தான் ஆரோக்கியசாமி.

**அ**ன்று—

கல்லறைத் திருநாள்.

கத்தோலிக்கக் கிறிஸ்துவர்களுக்குத் துக்க நாள். மரித்துப் போனவர்களின் கல்லறை யில் மலர் தூவி அஞ்சலி செலுத்தும் புனித நாள்.

பிரதான ரோட்டில், கல்லறைக்குச் சமீபமாக நடந்து கொண்டிருந்தபோது சிலு வைகள் நடப்பட்ட ஒவ்வொரு கல்லறை யிலும் மக்கள் மலர்களைத் தூவி வணக்கம் செலுத்திக் கொண்டிருப்பதைக் கண்டான் ஆரோக்கியசாமி.

வாழ்வில் மரணம் தவிர்க்க முடியாதது தான். எப்போது வரும் என்றும் சொல்ல முடியாது. வந்தால் தப்பிக்கவும் முடியாது.

அவனது எண்ணமெல்லாம் எங்கெல் லாமோ ஓடியது...

ஒருநாள் தானும் போக வேண்டியவன் தான். சந்தேகமில்லை; இறந்துபோன தனது கல்லறையின் மீதும் மலர்கள் தூவித் தன் குடும்பத்தினர் அஞ்சலி செலுத்துவார்கள். செத்துப்போன பிறகு இந்த மரியாதை எல்லாம் கிடைக்கும்.... ஆனல் இப்போது உயிருடன் இருக்கும்போது, வாழவேண்டும் என்று துடிக்கும்போது, என்ன மரியாதை இருக்கிறது? யார் தன்னைச் சட்டை செய் கிறுர்கள்? உயிருள்ள மனிதனுக்கு இருப் பதைவிட இறந்துபோன மனிதனுக்குத்தான் மரியாதை — மதிப்பு — அதிகம். எவ்வளவு விசித்திரமான உலகம்!

அடுத்த வேளை சோற்றுக்காகக் குடும்பம் ஆவலுடன் காத்துக் கிடக்கிறது. எப்படி யும் இன்று ஏதாவது பணத்துடன் போனல் தான் அவர்களைப் பட்டினிக் கொடுமையி லிருந்து மீட்க முடியும் — அரைக் கஞ் சியாவது ஊற்ற முடியும்.

எரிமலைபோல் அவன் உள்ளம் குமுறியது.

பட்டினியால் வாடும் குடும்பத்தைச் சாவி லிருந்து மீட்க, அரிசி வாங்க என்ன வழி?

தற்கொலை!

தற்கொலை செய்து கொண்டால்?... எல் லாருக்கும் விஷம் கொடுத்துவிட்டுத் தானும் தற்கொலை செய்து கொண்டால்....?

இருள்.... இருள்....!

வெளிச்சத்தின் பொன் கதிர்கள் இருள் அரக்கனின் கறுப்புப் போர்வைக்குள் மறைந்து நின்றன!

சுற்றிலும் இருள் பரவத் தொடங்கியது! அங்கங்கே மின்சார விளக்கின் மங்கிய ஒளி கண் சிமிட்டியதைத் தவிர வேறு வெளிச்சம் எங்குமே இல்லை!

ஆரோக்கியசாமி கால் போன போக்கில் நடந்து கொண்டிருந்தான். எங்கே என்று அவனுக்கே தெரியவில்லை.

அப்போது—

''சர்ர்...'' என்று ஒலியை எழுப்பிக் கொண்டே வாடகைக் கார் ஒன்று அவன் அருகில் வந்து 'சடன் பிரேக்'குடன் நின்றது.

''ஏம்பா, இங்கு எங்குமே ஒரு பூக்கடை யைக்கூடக் காணலையே ஏன்? இன்னிக்கு எல்லாக் கடைகளையும் மூடிவிட்டாங்களா?''

காரிலிருந்து இறங்கி நடைபாதையில் அவன் அருகில் வந்து நின்ற கனவான் கேட்டார்.

''இல்லீங்களே... இன்னிக்குப் பூக்கடை இருக்குமே... ஆமாம். இன்னைக்குப் பூவுக்கு ஏகமாக கிராக்கி இருக்கும். கல்லறைத் திருநாள் இல்லே?'' — ஆரோக்கியசாமி இழுத்த மாதிரி சொன்னன்.



''அது சரி... இப்ப எனக்கு எப்படியாவது இரண்டு மாலை வேணுமே...வேறு எங்காவது கிடைக்குமா? சுமாரா இருந்தாப் போதும். இரண்டு மாலைக்கும் சேர்ந்து ஐம்பது ரூபாய் கொடுக்கிறேன்.''—

கனவான் கேட்டார்; அவருடைய அவசரம் அவருக்கு.

'ஐம்பது ரூபாய்!' ஆரோக்கியசாமி மனத்துக்குள்ளாகவே சொல்லிக் கொண்டான்.

சிறிது நேரம் எதையோ ஆலோசித்துவிட்டு ஆராக்கியசாமி சொன்னான்:

''ஒங்களுக்கு ரெண்டு மாலைதானுங்களே வேணும்... இன்னும் ஒரு அரை மணி நேரத்திலே கொண்டு வந்து தரேன். நீங்க எங்கே தங்கி யிருக்கீங்கன்னு மட்டும் சொல்லுங்க...''

''என் நண்பர் ஒருவருக்கு இன்று இரவு திருமணம். இது ஒரு கலப்புத் திருமணம். நான்தான் முன்னின்று நடத்தி வைக்கிறேன். இவ்வூர்க் கல்யாண மண்டபத்தில் தங்கி யிருக்கிறேன். நீ எப்படியும் ஒன்பது மணிக்குள் மாலைகளுடன் வந்துவிட வேண்டும். உனக்காக நான் காத்திருப்பேன்.... மறந்து விடாதே.''

இதைச் சொல்லி விட்டுக் காரில் ஏறிப் போய் விட்டார் அவர்.

ஆரோக்கியசாமி அவசரமாக ஓடினான்.

வானம் இருண்டிருந்தது. இரண்டொரு நட்சத்திரங்கள் மட்டும் 'மினுக் மினுக்' கென்று கண் சிமிட்டிக் கொண்டிருந்தன.

அவசரம் அவசரமாக ஓடிவந்த ஆரோக்கியசாமி இடிந்த சுவரைத் தாண்டிக் குதித்து மயானத்துக்குள் நுழைந்தான். அங்கு சிலுவைகள் நடப்பட்ட கல்லறைகள் மேல் விதம் விதமான பூக்கள் காட்சியளித்தன.

பிறகு குனிந்து நல்ல பூக்களாகப் பார்த்துப் பொறுக்கத் தொடங்கினான்.

ஒரு கணம் அவன் தயங்கி நின்றான், 'இப்படிச் செய்வது சரியா?' என்று.

இன்றைய சமுதாயத்தில் பெரிய மனிதர்களாகப் பகட்டித் திரியும் எத்தனை பேர் இதைவிடப் பயங்கரமான காரியத்தைச் செய்யவில்லை?' என்று தனக்குத் தானே சமாதானம் சொல்லிக் கொண்டான். 'இது அநாகரிகம் அல்லவா?' மீண்டும் கேட்டது, அவனது மனச்சாட்சி. வாழ்க்கையே அநாகரிகமாக — நிர்வாணமாக — ஆகிவிட்ட பிறகு இது ஒன்றும் மோசமில்லை என்று திருப்திப்படுத்திக் கொண்டான். குளத்தில் இறங்கிய பிறகு மூழ்குவதற்குத் தயங்கினால் என்ன பிரயோசனம்?

கையோடு கொண்டு போயிருந்த பையில் கல்லறைகள் மேலிருந்த பூக்களை மடமடவென அள்ளிப் போட்டான்.

அடிமேல் அடி வைத்து வெளியே வந்தான் ஆரோக்கியசாமி. அவன் மனம் படபடவென்று அடித்துக் கொண்டது. அப்போது சற்றும் எதிர்பாராதபடி, காவலாளி வந்து அவனைப் பிடித்துக் கொண்டான். 'நட சாமியாரிடம்' என்று அவனை இழுத்துக் கொண்டு போய்ச் சாமியார் முன்னால் நிறுத்தினான் காவலாளி.

''சாமி! என் குழந்தைகளின் பசியைப் போக்கத்தான் கல்லறையிலிருந்து பூக்களைத் திருடினேன். விடிந்தால் வாடிவிடும் பூக்கள், வாழத் துடிக்கும் உயிர்களுக்காவது பயன்படட்டுமே என்றுதான் களவாடிவிட்டேன். பேதைமைதான். ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இதைவிட வேறு வழி எனக்குக் கிடைக்கவில்லை. பூக்களை மாலையாகக் கட்டி அவற்றை விற்றுப் பணம் தேட நினைத்தேன். பிடிபட்டு உங்கள் முன்னால் கொண்டு வந்து நிறுத்தப்பட்டேன். என் குடும்பத்தின் கதி என்னவாயிற்றோ? சாமி நான் செய்தது பாவமா? எனக்கு மன்னிப்புத் தாருங்கள்''— பாதிரியார் சேவியரின் பாதங்களைப் பிடித்துக் கதறினான் ஆரோக்கியசாமி.

அவனது நெற்றியில் சிலுவைக் குறியிட்டு ஆசிர்வதித்தார் புனித சேவியர். அவனது பாவம் மன்னிக்கப்படும். பிறகு, நூறு ரூபாய் நோட்டுக்கள் சிலவற்றைக் கொண்டுவந்து அவன் கையில் கொடுத்தார் பாதிரியார்.

''ஆரோக்கியம் எழுந்து போ. முதலில் உன் குடும்பத்துக்கு வேண்டியதை வாங்கிக் கொடு. நாளைக்கு இங்கே வா உனக்கு வேலை போட்டுத் தருகிறேன்.'' — அன்புடன் கூறி அவனை அனுப்பி வைத்தார் புனிதர்.

ஆனந்தத்தால் ஆரோக்கியத்துக்கு வார்த்தைகளே வெளிவரவில்லை. மரியாதையுடன் முழங்கால் மண்டியிட்டு மீண்டும் வணங்கி விட்டு ஓட்டமாக ஓடினான் வீட்டை நோக்கி.

அவன் வீட்டின் முன்னால் ஒரே கூட்டம். கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே பாய்ந்தான். என்ன கொடுமை! எல்லாம் முடிந்து விட்டது!

''ஐயோ!'' என்று அலறியபடியே கூண்டோடு விஷம் குடித்துத் தற்கொலைசெய்து செத்துக் கிடக்கும் அருமை மனைவி மக்கள் மேல் வீழ்ந்தான் ஆரோக்கியசாமி. பிறகு அவன் எழுந்திருக்கவே யில்லை. அவன் கையிலிருந்த நோட்டுத் தாள்கள் பூக்களைப் போல் அவர்கள் மேல் சிதறிக் கிடந்தன.

ஃ ஃ ஃ

ஆரோக்கியசாமியின் கதை முடிந்து விட்டது.

டண்....டண்....டண்.... மாதாகோவில் மணி மீண்டும் கேட்கிறது.

இனியும் கல்லறைத் திருநாள் திரும்பி வரும். ஆரோக்கியசாமியின் சமாதியின் மேலும் மலர்கள் தூவப்படும். அவனுக்கும் அஞ்சலி செலுத்தப்படும்.

யார் இருக்கிறார்கள் இதைச் செய்ய?

ஒரே ஒரு ஜீவன் இருக்கிறது. வைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து குணமாகித் திரும்பி வந்துள்ள ஆரோக்கியசாமியின் அம்மா! அடுத்த கல்லறைத் திருநாளுக்காகக் காத்திருக்கிறாளோ?

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam




புடவைகளுக்குப் பொருந்தும்படியான சோளிகளுக்காக
60 வண்ணங்களில் ரூபியா துணிகளும் உள்ளன

## பலவ்கைப் புடவைகளால் அலங்காரம் பெறுகிறது பெண்ணுலகம்!

கண்ணைப் பறிக்கும் வண்ணங்கள்; மனதைக் கவரும் டிசைன்கள்,
சுருக்கங்கள் விழாத தன்மை, இத்தனை சிறப்புக்களும்
பாம்பே டையிங்கின் எண்ணற்ற புடவை வகைகளில்
காணலாம். இந்த மேன்மையான புடவைகள் உங்கள்
அழகுக்கு மெருகூட்டி, உங்கள் மதிப்பைப் பன்மடங்கு
பெருக்கும். இன்றே பாருங்கள்; இன்றே வாங்குங்கள்!

பாம்பே
டையிங்

BD-8287

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




**'வைபோக வனப்பை
எனக்கு வாரிவழங்குவது
புதிய லக்ஸ்'**

என்கிறுர் சினிமா நட்சத்திரம்
**காஞ்சனு**

உயர்தரப் புதுமணமும் சர்வதேசப்
புதுமைக் கோலமும்
பூண்டது புதிய லக்ஸ்.
நீங்களே கண்டுகொள்ளுங்கள்...




**வைபோகமான வனப்புக்கு ஒரே ஒரு சோப்: லக்ஸ்**

லின்டாஸ்—LTS.229-140 TM
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு